# சுந்தராங்கி

## ஓர் தமிழ் நாடகம்



"சுகுணமனோகரம்" எழுதிய

வடுவூர் கே. துரைசாமி அய்யங்கார், பி. ஏ.,

இயற்றியது.



சைதாப்பேட்டை

டி. ஏ. ராமய்யா, எம். ஏ., எல். டி., அவர்களால்

முன்னுரை எழுதப்பட்டிருக்கிறது.

சென்னை, திருவல்லிக்கேணி

எஸ். ஜி. ஐயர் அண்டு கம்பெனியாரால்

வெளியிடப்பட்டது.

 [விலை ரூபா 1.

# நூன்முகம்.

---

தமிழ்மகள் நாவினிற் றவழ்பெரு மறிஞர்காள்!
கமைபுரிந் தருளுமின் கசடுகள் பலவுள
சுந்தராங் கிப்பெயர்ச் சந்தமிகு மிக்கதை
சொந்தமாய்ச் செய்திலேன் சுவையினுக் கிருக்கையாய்ப்
புகழ்மாது பணியப் பூமாதின் வதனமாய்ச்
சகமெலா மிறைஞ்சிடத் தகவினுக் கன்னையாய்த்
தனமாது மகிழ்வுடன் றாண்டவம் புரிந்திட
மனதினுக் கணிதரும் வாணியின் வாசமா
யோங்கிய வணிநக ருலசோ ரேத்திடு
மாங்கில மதனி லமலனை தருளால்
வந்துதித் தோறும் வரகவி யியற்கை
யந்தமும் வாய்மையு மாடிபோற் காட்டுவோன்
கம்பரு மின்புறுங் கவிதரும் ஷேக்ஸ்பியர்
சிம்பலி னென்பதாஞ் சிறியதோர் நாடகஞ்
சிதைவிலாப் புகழுடன் செய்தன னன்னவன்
கதையினைத் தழுவியே கலையிலாப் பேதையா
னிதையிமிழ் தமிழினி லியற்றினேன் வசைபெற.
இத்தகைச் செயலினை யியற்றிடத் தேவையா
மெத்தகைப் பெருமையு மில்லாத வீணன்யா
னிலிமைநிறை தமிழ்மாதின் மிசைபெருகு மாசையாற்
கனிவுடை மனத்தனுய்க் கடுகியான் வரைந்தனேன்
முந்திய கதையினை முற்றிலுங் கொண்டிடா
திந்தியற் கினிதாக வேன்றவரை மாற்றினேன்

மிகவெளிய நடைதனில் வினையமில் பனுவல்பல
நகைபெறச் செய்துளேன் நவைபல விருப்பினும
குறைபல குழுமினும் பொறுத்திட லறிஞர்பொறை
துறையிலேன் மதியிலேன் துணையிலேன் பிறிதிலேன்
குழவிய ரியற்றிடுங் குறியமண் வீட்டினை
வழியறி சிற்பியர் வசைமொழிந் திகழ்வரோ.

SAIDAPET,
27—4—14.

K. DURAISWAMI.

# FOREWORD

"GOOD wine needs no bush," says the master dramatist. The Tamil play before us, entitled *Sundarangi*, needs no foreword at all, for it is really very good wine and can surely speak for itself and the author is a great Tamil scholar, having mastered *Tholkappiam* as well as all the old *Sangam* Literature. "Yet to good wine they do use good bushes," continues the immortal play wright. I would that I had *good* bushes to give! But the fact is I have almost no bushes to give or lend, for I cannot pretend to have any extensive or intensive knowledge of the ancient Tamil Literature. But since I had the unique pleasure of hearing the play read to me by the author himself, I think I shall be failing in my duty to the author as well as to the public, if I let go this opportunity without putting before the reader what I feel I have to say. The stream of Tamil Literature has been stagnant for many centuries. There have been very many clever imitations, but very few original works. Far-fetched images and cold conventions have been reigning supreme, for those who have drunk deep at the old venerable fountains seldom, if ever, evince a taste for new springs, and more often than not look upon every departure, if not with disdain, at least with dislike. But signs are not wanting to show that very soon there will be a new era brighter we may hope than any before.

The lethargy of centuries seems to be breaking up. New ideas are spreading and new inarticulate soul throbs

may be heard by the watchful ear. But though there is a sort of *imaginative* restlessness in the air, we are still hesitating about expression. The scant courtesy generally shown to the vernaculars seems to delay in the coming of the New Age. But very soon the choice must and will be made. It will before long be realised that though we may be bred up in a foreign language, we live and move in our vernacular The English themselves realised the fact some six centuries ago. They tried a form of Latin and chose English and Chaucer paved the way for Shakespeare. Our friends in the north have tried English and are giving it up for their vernacular. I am sure we are going to do the same. Who knows there may be at this very moment a Chaucer or a Rabindra Nath Tagore lisping in Tamil, " for the numbers come "

It is therefore mostly as a promise of what is to come that I hail this '*Sundarangi*' But at the same time I can assure the reader that '*Sundarangi*' can stand severe test by itself. Though it purports to be but a free translation of Shakespeare's '*Cymbeline*,' it is much more than a free translation. Only the main incidents in the life of '*Imogen*' could be followed. The characters, including Imogen after whom the play is named, had to be re-created in consonance with Indian ideas and sentiments. To have done this successfuly is no small achievement, especially when it is remembered that this is Mr Aiyengar's first venture in the literary field. The ideas and atmosphere are purely Indian. and the aroma is essentially the aroma of the land of Champak and Sirish flowers. Mr. Aiyengar has at his command both an easy and fluent prose style and a sweet and chaste poetic style There is one other feature about the work, which calls for special mention. It is

Mr. Aiyengar's firm belief, and firmer is mine, that the spirit of the Tamil drama is not fully brought out unless suitable songs are introduced It is well known, too, that the shades of difference among the different *ragams* indicate shades of difference in ideas and feelings and that each *ragam* has an individuality which tells, as if in a flash. Numerous songs in addition to verses have therefore been introduced in '*Sundaranji*' and the tunes selected are mostly apt and well known tunes. All the objectionable features of the ordinary Tamil dramas are conspicuous by their absence and I feel that this book can safely be placed in the hands of young and old, of both sexes. '*Sundarangi*' should prove specially useful to the student population wh o are now asking for bread, but are given stones. The easy flow of the conversational style, the natural sweetness of the verses, the elevated moral sentiment and the refined taste should surely recommend themselves to even a casual reader. Moreover, '*Sundrangi*' may be ina sense looked upon as a type of what future Tamil drama ought to be. And as such I have no hesitation whatsoever to press forward Mr. Aiyengar's claims to the praise and encouragement of the enlightened readers.

SAIDAPET,
*27th April, 1914.*

T. A. RAMAIYA.

# அபிதானவிளக்கம்.

---

| | |
|---|---|
| பிரதாபசிம்மன் | மாளவதேசத்தரசன். |
| சுந்தரன்<br>சந்திரன் | } பிரதாபசிம்ம அரசனது புத்திரர் |
| ஜெயபாலன் | பிரதாபசிம்மனது இரண்டாவது மனைவியின் அண்ணன் |
| அனுமந்தன்<br>குணசேகரன் | } ஜெயபாலனுடைய தோழர்கள் |
| கருணகரன்<br>தனபாலன் | } நகரத்தினர் |
| மதிவதனன் | மாளவதேசத்திலிருந்த சூரசேனனென்னும் போர்வீரனது மகன். சுந்தராங்கியின் தோழன், அரசனால் வளர்க்கப்பட்டவன் |
| நரசிம்மவீரன் | பிரதாபசிமமனால் நகரைவிட்டு விலக்கப்பட்ட ஓர் போர்வீரன் |
| புருஷோத்தமன் | மதிவதனனுடைய சேவகன். |
| பராக்கிரமபாகு | கலிங்கதேசத்துச் சேனாதிபதி |
| சூரசேனன் | கலிங்கதேசத்திலோர் பிரபு |
| வாசுதேவன் | மாளவதேசத்து அரண்மனை வைத்தியன் |
| பலராமன் | கலிங்கதேசத்தான். மதிவதனனுடைய நண்பன் |
| சுந்தராங்கி | மாளவதேசத்தரசனது மூத்த மனைவியின் வயிற்றிலுதித்த புத்திரி |
| சரசாங்கி | மாளவதேசத்தரசனது இரண்டாவது மனைவி |
| பத்மாவதி | சுந்தராங்கியின் தாதி |
| மோகனா | சரசாங்கியின் தாதி. இன்னும் மற்றவர் |

இடம் :—மாளவதேசம், கலிங்கதேசம்.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தப்படவேண்டிய விதம். |
|---|---|---|---|
| 1 | 6 | இராகம்—மாஞ்சி தாளம்-ஆதி என்று மேலே சேர்க்க | |
| 2 | 19 | சரணங்கள் | அனுபல்லவி |
| | 22 | | சரணம் என்பதை மேல் சேர்கக |
| | 20 | 1 | நீக்க |
| | 22 | 2 | |
| | 24 | 3 | |
| 3 | 22 | கயல்வழி | கயல்விழி |
| 6 | 19 | கொள்ளைக்கொண்ட | கொள்ளைகொண்ட |
| 9 | 5 | மனதினை | மனதினை |
| | 20 | காதலித்தனனெனில் | காதலித்தனளெனில் |
| 13 | 11 | தாயாரை | தாயரை |
| 14 | 7 | ஏமசதி | தேமஸதிய்யமதி |
| 15 | 6 | இடருருந்தி | இடாருந்தி |
| 23 | 26 | துணைவன் | துணைவன் |
| 28 | 16 | யிடரினுல் | யிடரினில் |
| 45 | 27 | கணவாய் | கனவாய் |
| 60 | 19 | அண்பாலொன்று | அன்பாலொன்று |
| 74 | 17 | நிகர் | நிகர் |
| 76 | 3 | உனது | எனது |
| 80 | 6 | ஒருவிலொரு | ஒருவியொரு |
| | 23 | முற்றுப்புள்ளியை | நீகக |
| | 27 | பவனம் | பவளம் |
| 81 | 24 | கிழோர் | கீழோர் |
| 84 | 4 | நவையுளதெனவேதரி | நவையுளதெனவேதேரி |
| 86 | 22 | இருக்கின்றது | இருக்கின்றன |

| பக்கம். | வரி. | பிழை | திருத்தப்படவேண்டிய விதம். |
|---|---|---|---|
| 89 | 1 | மதவதனன் | மதிவதனன் |
| 91 | 14 | அனுப்பிடலாம் | அனுப்பிவிடலாம் |
| 94 | 9 | ‘ தாசி ’ என்னும் மொழி | யை நீக்க |
| | | 17 வது வரிமுதல் 95 ம் | பக்கம் 15 வது வரி வரை |
| | | யில் நீக்க | |
| 122 | 5 | மறைப்பேனென | மறப்பேனென |
| 125 | 2 | னின்றி | னின்று |
| 134 | 13 | லெமனேடு | லெமனேடு |
| 153 | 24 | மரத்தைப்போல | மரம் |
| 158 | 3 | தெரிவிப்பாயாடா | தெரிவிப்பாயடா |
| | | இவ்வாறு | இவ்வாறு |
| 167 | 7 | கொணர்ந்தும் | கொணர்ந்ததும், |
| 168 | 24 | கேட்டுமாயின் | கேட்குமாயின் |
| 172 | 26 | எந்தல் | ஏந்தல் |
| 176 | 21 | மனிவதன | மதிவதன |
| 177 | 24 | முற்றுப்புள்ளியை | நீக்க |
| 181 | 11 | யிருளாகுதே | யிருளாயின |
| 205 | 1 | துறைந்தது | துறந்தது |
| 210 | 10 | இவர்கள் | இவைகள் |
| 215 | 16 | மிடைமை | மிடமை |
| 216 | 6 | கொண்டி | கொண்டிருக் |
| 223 | 15 | நின்றவரிலொருவனே | நின்றவரிலொருவனே. |
| 228 | 15 | கலசமிட்டலிலைககுங | கலசமிட்டிலைக்குங |
| 247 | 9 | னவனுடள் | னவனுடன் |
| 250 | 2 | சஞ்சீவியொன்று | சஞ்சீவியென்று |

ஓம் சுபம்:

# சுந்தராங்கி

## (ஓர் தமிழ் நாடகம்)

---

### திருமால் துதி

(வெண்ணிலாவே யென்ற வர்ணமெட்டு)

பல்லவி

கண்ணா கருங் கொண்டல் வண்ணா
தண்ணளி புரியா தென்னே (க)

அனுபல்லவி

எண்ணிலவா மின்னா தன்னும்
மண்ணுலகின் பற்றொழிய (க)

சரணம்

(1) நோக்கினுந் தெரியா யெந்தை
வாக்கினு மமையாய் விந்தை
திக்குநின்னை யன்றி யென்னே
துக் கலாங்கடையேனுக்கு (க)

(2) வித்தையில்லேன் புத்தியில்லே
னொத்தகைச் சிறப்புமில்லே
னத்தனே யிப்பேதை யாற்றும்
பத்திகொள் பரமமூர்த்தி (க)

## விநாயகர் துதி

(குருலேக எடு வண்டி)

பல்லவி

கரிவதன விரி ஜோதி
கணபதி நின் கழல்துணையே (க)

அநுபல்லவி

கருதரிய திறனிறையுங
கண்ணுதலின் காதலே (க)

சரணம்

பரிதி முதலரிய யனும் பண்ணவர்கள் பரவரிய
வரதனருளொங் கரனேமண மலர் நின்திருவடியிற்
சிரம்படியயான் பணிநதேன் சிதைப்பாயிடையூறுகளைக்
கருணையுடனெழுநதருளிக் காததருளிப் பேதையை(கரி)

## சரஸ்வதி ஸ்தோத்திரம்

---

(சரஸ ஸாமதான)

பல்லவி

வருக தாமஸமா வாணி யென்னையருள
வாணுதல் மணீ வனசபாரதி (வ)

சிரணங்கள்

(1) வரத மீப்பல-பேதைமையொழிய
வல்கியோதையோடு கமலமீதிருந்து (வ)
(2) பனுவலாட்டி நீ-பாலனை யணுகி
தனியமூவ மோஙகத தஙகுயென் வயினே (வரு)
(3) தனி மனோகரி நீ, தேவிகலை ஞானி
தரையிலொருபேதை-தனது பாவிழைந்து (வரு)

(அது)

இராகம்—கல்யாணி

பூரவாகினியே யன்னை புகழ்தரு மினிய பூவை
நாரணனரிய சேய னயந்திடு புனிதை வாணி
சீரணி தவளப் போதோ டேரண வன்னம் நீஙகிப்
பூரண கருணை தாங்கிப் புரிந்தருள் நடன நாவில்

## 1 வது அங்கம்.

1 வது சீன் (களம்)—மாளவ தேசம். அரண்மனையை யடுத்த பூஞ்சோலை.

நகரத்தின் நிருவரின் சமபாஷணை.

கருணாகரன்:—("சாமி நீ வருவாயிப் போது")

ஆகாயிச்சோலை யழகை
ஐயோநானென்ன சொல்லுவேன்

(1) பாலென்னத் தேனென்னக் கோகிலங் கூவுதே
பல்லாயிரங்கோடி மலர்மணந் தூவுதே. (ஆ)

(2) தோகை விரித்தாடு-கின்ற பலமயில்
துன்னிடத் துன்னிடத் துன்பமும் போகுதே. (ஆ)

நண்பா! தனபாலா! இன்று தென்றல் வெகு உல்லாசமாய் வீசுகின்றது. மிக்க இரமணீயமான இச்சோலையைவிடுத்துச் செல்லற்கு எனக்கு மனமேயிலது. ஆதலின் இன்னம் சிறிது உலாவுவோம்."

தனபாலன்:—"நண்பா! அப்படியே செய்வோம்."

கருணாகரன்:—"ஆகா! இச்சோலையின் சிறப்பை எவ்வாறு வர்ணிப்பது!

(இராகம்–தோடி)

மயில்பல நடனமாடக் குயில்சில மகிழ்ந்துபாட
முயல்பல குழுமியோட முகைய விழ்மலர் நகைக்கக்
கயல்வழி மடவோர்மையுண் கண்களாஞ் சுரும்பினங்கள்
செயிரிலாமது வருந்திச் செருக்கிரீங்காரஞ் செய்ய.

என்ற வண்ணம் இவ்வனத்திலுள்ள ஒவ்வொரு பொருளும் எத்தகையா சுரு சுருப்பையும், பேரானந்தத்தையும் புலப் படுத்துகின்றது!

---

* செருக்கி = கருவங்கொண்டு செயிர் = குற்றம்

தனபாலன்:—'நண்பா—விலங்குகள், பறவைகள், புட்பங்கள் முதலிய அற்பமான உயிர்கள்யாவும் இவ்வாறு குதூகலத்தைப் புலப்படுத்த நமது தேசத்து மனிதர் மாத்திரம் துன்பக் கடலிலாழ்ந்திருக்கக் காரணமென்ன? இந்நகரத்தில்யாரைக் காணினும் மிக்கவிசனக் குறியுடன் தோன்றுகின்றனர். நகரத்தினர்மட்டோ? இத்தேசத் தரசனும் அவனைச் சார்ந்தோரும் அவ்வாறு காணப்படுகின்றனரே! காரணமென்ன?

கருணாகரன்:—"ஆகா! நேயா! நீ இந்நகரத்திற்றானிருக்கின்றனையோ? அன்றி நித்திரையில் நடப்பவன்போல உணர்வின்றித் திரிகின்றனையோ? யாவருமறிந்த இவ்வற்ப விஷயத்தை நீ யுணரா திருத்தல் பெரும் விந்தையாயுளது. நமது அரசன் பிரதாபசிம்மனது ஓர் தனிச் செல்வியும் அவனுக்குப் பின்னர் இத்தேசத்தின் அரசியாதற் குரியவளுமான அழகிற் சிறந்த சுந்தராங்கி யென்னோர் மங்கையிருப்பதாய்க் கேள்விப் பட்டிருக்கின்றனையோ? இல்லையோ?"

தனபாலன்:—"ஆமாம் அதை அறிவேன். அவளது அன்னை மண்ணுலகை விடுத்து விண்ணுலகேகிய பின்னர், நமது முதிய அரசன் சசிராங்கியென்னுமோர் மாதை மணந்திருப்பதையு மறிவேன்."

கருணாகரன்:—'அப்படியா! மெத்த நன்று! அரசன் சுந்தராங்கியைத் தனது இரண்டாம் காதலியின் அண்ணனான ஜெயபாலனுக்கு மணம்புரிவிக்கக் கருதியிருக்கின்றனன். சுந்தராங்கியோவெனின் இயமனைத்திறகிலையாது தோன்றா புருஷனைத் தனக்கு நாயகனாக வரித்துக் கொண்டு, அவனையே மணப்பதாய் ஒரே மனதாய்க் கூறுகின்றனள். இவளால் விரும்பப் பட்டவன்

மிக்க எளியோனாயினும் அவளுக்குத் தக்க காத லனே! இவனுக்கு நமதரசன் நகரத்தைவிடுத் தோடிப் போமாறு கட்டளையீந்து தனது புதல்வியைச் சிறைச் சாலையிற் புகுத்தி விட்டனன். இதன் பொருட்டே நகரத்தினர் யாவரும் வியாகூலப்படுவதாய் வெளித் தோற்றத்திற்கு மாத்திரம் நடிக்கின்றனர். எனினும் இவ்விஷயத்தில் நமதரசன் ஒருவனே உண்மையில் மனம் நொந்து விசனக் கடலிலாழ்ந் திருப்பவனென நினைக்கின்றேன்."

தனபாலன்:—(ஆச்சரியத்துடன்) "ஆகா! அப்படியா! அரசனையொழிந்த மற்றையோர் வருந்தவில்லையோ?"

கருணாகரன்:—" இம்மணத்தை எப்படியாயினும் நிறை வேற்ற வேண்டுமென அவாக்கொண்ட மன்னனின் இளம்பத்தினியும் அவளுக்கு முன் பிறந்தோனான ஜெயபாலனும் அரசனுக்கதிகமாய்த் துயரிலாழ்ந்திருக் கின்றனர். மற்றையோர் அனைவரும் அரசனது கிருப தியின் பொருட்டு வருந்துவதாய் நடிக்கின்றனரே யன்றி மனதிற்குள் சந்தோஷமே"

தனபாலன்:—" அதன் காரண மென்ன?"

கருணாகரன்:—" நண்பா! உரைக்கின்றேன் கேட்பாய்:

## அகவல்

(இராகம்-கல்யாணி)

---

சுந்தராங்கிப்பெய ரந்தமிகு நாரியை
மணக்கவிரும்பியகு ணமிலா மைத்துனன்
ஜெயபால னென்பான் பயனிலாத் தூர்த்த
னணியிலான் கலையிலான் மணமிலான் நிலையிலா
னாதலின் கல்வி நிறை கோதையாம் செல்வியை

*மனைவியாய்க் கோடற்குத் தினையுஞ் சகாதவன்
மங்கையாம் அழகியின் சங்கையை வென்றவன்
மற்றவனேனெனிற் குற்றமில் குணத்தினன்
வித்தையிற் சூரியன் புத்தியிற் பிரகஸ்பதி
பேரழகு தன்னிலோ மாரவேளென்னலாம்
வெஞ்சமர தனிலோ வஞ்சாத சீயமா
முற்றார்க்கும் பற்றார்க்கு முற்றமினியனே
யவனியின் முழுதிலுமிவனைச் சிறிதேனு
மொப்பவரென்ன யாம் செப்பிடப் பிறரிலர்
நிகரிலானாதலின் நகரைத்துறந்தனன்.*

ஆகா! தனபாலா! நம மன்னனது புதல்வி சுந்தராங்கி கலைகளனைத்தையு மொருங்கு ஆழ்ந்தகல்வி முதிர்ச்சி முதலிய வற்றையுங் கொண்டவள். அழகிலும் [illegible] நிகரற்றவள். இத்தகைய சிறந்த மின்னாளை மணக்க விரும்பிய மோகனது மைத்துனன் ஜெயபாலனோ வெனின் கல்வி முதலிய ஒரியல்பு மற்ற வீணன். தீயகுணங்களையுடைய தூர்த்தன். துஷ்டர்களின் நேசன். ஆதலின் இலக்குமியை நிகர்த்த இவ்வழகிக்கு இவன் தகுந்த காதலனன்று. இவளை மணந்துகொள்ளக் கொண்ட மதிவதனனென்னுங் காளையோ ஒப்பற்ற சீலன். வித்தை, புத்தி, பராக்கிரமம், சுந்தரம், அன்பு, தயை, நற்குண நல்லொழுக்கம் முதலியவை நிறையப்பெற்ற உத்தமன். இப்புவி முற்றுந்தேடினும் இவனை யொப்பவரைக்காண்பது ஏலாக்காரியம். ஆகா! இவன் இத்தகைய மேம்பாட்டையுடையவனா யிருத்தலின் நகரைவிட்டு விலக்கப்பட்டனன்."

தனபாலன்:—"அப்படியா? அவன் அத்தகைய சிறப்பினனா?"

---

* அந்தம் = அழகு அணி = அழகு கோடற்கு = கொள்ளுதற்கு தினையும் = சிறிதும் சங்கை = மனது சீயம் = சிங்கம்.

கருணாகரன்:—"நண்ப! அவனது சிறப்பை முற்றும் விரிவாய்க் கூறுதற்கு யான் வல்லமையுடையேனல்லேன். யான் உரைத்தது குறைவாய்க் கூறியதாமே யன்றிச் சரியாய் விரித்ததாகாது."

தனபாலன்:—"ஆகா! அப்படியா! அவனது சிறப்பு, வாயாற் புகலவியலாத அருமையதோ?"

கருணாகரன்:—"இவனைப்பற்றிய விவரங்களை முற்றும் யான் அறிவேனாயினும் தெரிந்தவரையில் உரைக்கின்றேன்.

இராகம்—தோடி

---

இந்நகர் தன்னை யாளும் மன்னவன் முன்னை நாளில்
வெங்கிடாத்தானை நாதன் வீரனும் சூரசேனன்
முந்நீராற் சூழப்பெற்ற—மொய்ம்புடைத் தேயத்தாரைச்
செந்நீரில் மூழ்குவித்துச் செகுத்தனன் கோவிற்காக.

சூரசேனனென்ற இவனது தந்தை, இவ்வரசனின் பிதாவிருந்த காலத்திய சேனாதிபதி. இச்சேனாதிபதி தனதரசனுக்காகத் தன்னுயிரையும் மதியாது பற்பல தேசங்களின் மீது படையெடுத்துப் பகைவரை வென்று மிக்கபுகழ் பெற்றிருந்தனன்.

(இராகம்—கானடா)

---

அத்தகையனீகர் நாதன் புத்திர ரிருவர் பின்னர்ச்
சத்துவமுடனே தோன்றிச் சமரிடு குந்தலர் முன்
கத்தியு மத்தமாகக் கடுகினர் களத்தில் மாண்டா
ரத்தனே கொற்றங்கொண்டு மடங்கோனுத்துயரால்வீந்தான்.

---

* செந்நீர் = இரத்தம் செகுத்தல் = கொல்லுதல் வெங்கிடல் = முதுகுகாட்டுதல் தானை = சேனை.

* அனீகர் = வீரர் கொற்றம் = வெற்றி வீந்தான் = இறந்தான்.

அவ்வரசனிறந்தபின் இப்போதிய வேந்தனான பிரதாப சிம்மன் சிம்மாசனமேறக் குந்தலதேசத்தினர் பெருஞ்சேனைகளுடன் எதிர்த்தனர். சூரசேன னென்ற இச்சேனாதிபதி மிக்க வயதில் முதிர்ந்தவனாயினும் வெகு பராக்கிரமத்தைப் புலப்படுத்திப்போர் செய்து அவரைத் துரத்தினன். இச்சேனாதிபதியின் புதல்வரிருவரும் அப்போரில் வாளுங்கையுமாய்ச் சண்டைசெய்து மாண்டனர். வெற்றி பெற்ற சூரசேனன் இதைக் கேழ்வியுற்றுத் தீராப்பெரும் விசனத்திற் கிரையாய்க் கடைசியிலிறந்தனன்.

(இராகம்—எதுகுலகாம்போதி)

சூலுடனிருந்த சூரசேன னதினியயில்லாள்
சீலனும் மகவை யீந்து சென்றனளுடனே யும்பர்
சாலவு மிடறி லாழ்ந்த சக்கிரி சதனந்தாங்கிப்
பாலனை வளர்த்தான் பேணிப் பரிவுடன் பெயரு மீந்தான்.

இசசேனாதிபதியின் மனைவி அவ்வமயத்தில் கர்ப்பிணியாயிருந்து அதற்கு இரண்டு மாதங்களுக்குப் பின்னர் ஓர் ஆண் குழந்தையை யீன்றுவிட்டு விண்ணுலகேகினள். அன்னை தந்தை முதலியோரை யிழந்த யிக்குழந்தையின் மீது அன்புகொண்ட அரசன அதை எடுத்துத் தனது அரண்மனையில் வளர்த்தனன். இவனது முகக்காந்தியின் விசேஷத்தைக் கண்ட பிரதாப சிம்மன் இவனுக்கு மதிவதன னெனப் பெயரிட்டு அவனை ஆழ்ந்த அபிமானத்துடன் வளர்த்து வித்தைகள் அனைத்திலும் பயிற்றினன்.

* சூல் = கர்ப்பம் உம்பர் = மேலுலகம் சக்கிரி = அரசன் சதனம் = அரண்மனை.

(இராகம்--மோகனம்)

---

குதலையுங் குமரவேளாய் மதித்திடுஞ்சிறுவனுகித்
துதிபெறக்கலைகளோதித்துன் னுவோர்க்கி னியனுகி
மதியுடை மனத்தனுகி மாண்புடைக் குணத்தனுகி
வதிந்தனன் சுந்தராங்கி மனதிணைக் கவர்ந்தான் முற்றும்.

இவன் எவ்வாறு வளர்ந்தனன் ?

" மகன்றந்தைக் காற்று முதவி யிவன் றந்தை
என்னேற்றான் கொல்லென் னுஞ் சொல் "

என ஆன்றோர் கூறி யிருக்கின்றன ரன்றோ !

ஒருவனை நோக்கி இத்தகைய உத்தமனைப் பெற இவனது தந்தை என்ன தவம் புரிந்தனனோ வெனப் பிறர் கூறுவதே மகன் தகப்பனுக்குச் செய்யும் பேருதவி. மதிவதனன் வயது முதிர முதிர இம் மூதுரையை உண்மையாக்கினன். சிறந்த பராக்கிரமசாலியாய் யாவராலும் புகழப்பட்டும், அன்புடன் அபிமானிக்கப் பட்டும், நற்குணங்களுக்கே யிருப்பிடமாய்ச்சிறுவர் யாவரும் இவனைப்பார்த்து நல்லொழுக்கம் முதலிய வற்றைக் கற்றுக்கொள்வதற்குரிய மேவார் சட்டகமாயினுன். வித்தை முதலிய வற்றிற் சிறந்த அரசபுத்திரியே இவனது மேம்பாடுகளைக் கண்டு இவன் மீது காதலித்தன ளெனில் இவனது அருமை பெருமைகளை விரித்தலுந் தேவையோ !"

தனபாலன்:—" அப்படியா ! மெத்த சந்தோஷம் ! நீ கூறு வதி னின்றே அவன் மீது எனக்கோர் வித அபிமான முண்டாகின்றது. நண்பா ! சுந்தராங்கியைத் தவிர அரசனுக்கு வேறு புதல்வ ரில்லையோ ?"

---

* குதலை=குழந்தை மாண்பு=பெருமை.

கருணாகரன்—"இப்பொழுது இவளைத் தவிர வேறு சந்ததி யிலது. அவனுக்கு இரண்டு ஆண்குழந்தைகளிருந்த னர். முதல்வன் மூன்று வயதடைந்தவனும், மற்ற வன் தொட்டிலிற் பாலுண் குழவியாயும் இருக்கையில் இருவரையும் யாவரோ இரகசியமாய்க் களவாடிச் சென்றுவிட்டனர். இதுவரையில் அவர்கள் சென்ற விடத்தை அறிந்தோரிலர்."

தனபாலன்—"இவ்வாறு நிகழ்ந்து நெடிய காலமாயிற்றோ?"

கருணாகரன்—"இப்போதைக்குச் சுமாருக்குறைய இருபது வருஷங்களிருக்கலாம்."

தனபாலன்—(வியப்பாய்) "ஆகா! இதென்ன விந்தை! அரசனது குழந்தைகளைக் களவாடி விட்டனராம். இருபது வருஷங்களாயிற்றாம். காவலரின் எச்சரிக் கையோ எச்சரிக்கை! ஆகா—கா! இதுவரையில அவ ரைக் காண ஒருவரும முயலவில்லையா! இது பெரிதும் ஆச்சரியமே!

கருணாகரன்—"நாம் வியப்படையினும் வியக்காவிடினும் அவ்வாறு நிகழ்ந்தது உண்மையே."

தனபாலன்—"யான் உண்மையென்றே நம்புகின்றேன்."

கருணாகரன்—"நில்லு நில்லு! அதோ அரசன் மனைவியும் சுந்தராங்கியும் வருகின்றனர். நாம் அப்பாலேகிவிடு வோம்."

(சென்றுவிடுதல்)

2-வது சீன்—அச்சோலையில் சுந்தராங்கி மனம் வருந்திக் கொண்டு வருதல்—சரசாங்கியும் கூடவருதல்.

சுந்தராங்கி—

(அச்சமொரே லாகிலே)

அன்னங்களே யேனோநீர் பாவியேனை மேவுரீர்
மேவுரீரே யரே தாவுரீர் (அ)

(1) இன்றோடுநீவி—ரெந்தனைக் காணீர்
எனதாவி—யனையோரே—மனநோகுதே (அ)

(2) கிள்ளைகளேநீர்—துள்ளுவதேனோ
இனியானுந் தனியானே னினியோர்களே (அ)

சரசாங்கி—

(இராகம்—கானடா)

செல்வியே கல்விமிக்கச் செயிரிலா யினியகோதாய்
இல்லிதமொளிரு மெந்தன் விலையிலா மணியே பேதாய்
தல்லிநீ யழுதுவிம்மித் தயங்கிடற் பொறுத்தற்பாற்றோ
வல்லையி விடரையாற்றி வருந்தலை யொழிப்பாய் பாவாய்.

ஆகா! எனதரிய கண்மணி! சுந்தராங்கி! நாது செல்வர் செல்வியா வருந்துதலைக் கண்டு தாய்மார் எவ்வாறு சகிப்பர்! மற்றையோரினும் மிக்க மேம்பட்ட விலை மதிப்பற்ற மாணிக்கமாகிய நீ விசனிப்பதைக் கண்ட நினது பகைவரும் பொறுப்பரோ! இனி வருந்தவேண் டாம் பெண்மணி!

(ஆரண்யத்தில் ஓராசன் என்ற மெட்டு)

(1) வேதனையால் வாடலேனென் கோதாய் பெண்மணீ
விரைவிலதை விடுத்திடுவாய் வேண்டினேனுனை

(2) மன்னனுன்னைச் சிறையிலிடப் பணித்தானாயினும்
மகிழ்வுடன் யான் பலநலன்கள் புரிகுவேன் பாவாய்

(3) காவலர்கள் சாவிகளை நின்பாலீவரே
கவலாமல் நினைத்தாங்கு களித்தியங்குவாய். (வேதனை)

எனதரியப் புதல்வி சுந்தராங்கி! அரசன் நின்னைச் சிறைபுகுத்துமாறு கட்டளை யிட்டிருக்கின்றனனாயினும்

---

செயிர்=குற்றம் இல்லிதம்=அழகு ஒளிரும்=பிரகாசிக்கும் வல்லை=விரைவில்

* நினைத்தாங்கு=நினைத்தவாறு

நின்னைத் துன்புறுமாறு யான் விடுவேனோ! காவலர் நினது அந்தப்புரத்தருகிலும் வராதிருக்குமாறும், திரவுகோல்களை நின்பாற் கொடுத்துவிடுமாறும உத்திர விதிருக்கின்றேன். நீ ஓரிடத்திலேயே அடைபட்டிராது நினைத்தவண்ணம் செல்லலாம். இன்னம் நினக்குத் தேவையான உதவியையும் புரியத் தயாராய் இருக்கின்றேன்."

சுந்தராங்கி:—

(இராகம் – தோடி.)

" சிதை வகல் காதற்றாயைத் தந்தையைக் குருவைத் தெய்வப்
பதவி யந்தணரை யாவைப் பாலரைப் பாவைமாரை
வதைபுரிகு நற்குமுண்டா மாற்றலா மாற்றன் மாயா
வுதவி கொன்றாற் கென்றேனு மொழிக்கலா முபாயமுண்டோ"

என்றவாறு, அன்னை, தந்தை, குரு, தெய்வம், அந்தணா, பசு, பாலர், பெண்கள் முதலியோரைக் கொன்றவர்க்கும் உய்த்தகைய கொடிய பாவத்தை விலக்குதற்குரிய மார்க்கமுளது. பிறர் செய்த நன்றியை மறப்பதனாலுண்டாகும பாவத்தைப் போக்குதற்கு யாதொரு வழியுமிலதென ஆன்றோர் கூறுகின்றனரன்றே. நிறக,

(இராகம் – கானடா.)

செய்யாது பிறர்செய்த பேருதவி யின்னலா
லுய்யாது யங்குகையி லுண்டொனகிழ்ந் துதவலுங்
கைம்மாறு கருதாது கடனென்று வுதலும்
வையமொடு வேலைகளும் வானுக்கு மிக்கவே.

பிறர் நமக்கு யாதொரு உதவியும் செய்யாதிருக்கையில் அவருக்கு நாம் உதவி புரிதலும், ஆபத்து வேளை

உய்யாது=பிழையாவாறு, உயங்குதல்=மனந்தளர்தல், வேலை =கடல்.

யில் ஒருவருக்கு உதவிபுரிதலும், ஒருவரிடத்திற் பிர
திப் பிரயோசனத்தை எதிர் பாராமல் நாம் அவருக்கு
உதவிபுரிதலும் ஒப்பற்ற அரிய பெரிய விஷயங்களன்
றோ. ஆதலின் எனதரிய அன்னே! என் விஷயத்தில்
நீங்கள் புரியும் இத்தகைய உதவிகளுக்கு யான் எவ்
வாறு கைம்மாறியற்ற வல்லேனுவேன். எனதாவியுள்
ளளவும் இதன்பொருட்டு நன்றி பாராட்டலே அதற்
குரிய செயலன்றி வேறிலது.''

சரசாங்கி—(பூரிப்புடன்)

(இராகம்—மோகனம்.)

'' தரணியில் வதியுமாற்றுந் தாயாரைப் போலயானு
மரியநற் புதல்விநின்னை யலக்கணிற் புகுத்தேன் தேற்றம்
வரம்மதி வதனனுன்னைப் பிரியுமுன் விடைகொள் மாறே
யரசிநின் பாங்கர் துன்ன வனுமதி யீந்தேனன்றோ.

கண்மணி சுந்தராங்கி! இப்புவியில் ஆகட்பனுக்கு இர
ண்டாம் மனைவி வருவளேல் அவள் இறந்துபோன
முதல் மனைவியின் செல்வச் செல்வியரை மிகத் துன்
புறுத்துதல் இயல்பன்றோ. அவளெனுங் காதலியின்
மையலில் ஆழ்ந்து அவனது தலையாய உபதேசத்திற்
கு [illegible] நெறிகெடுத்த கடியோரை அச்சிறுவர் சிறுமி
யரைப் புறக்கணித்து வெறுத்து வருத்தலும் நிகழு
கின்றதன்றோ. யான் உன் விஷயத்தில் சிறிதும் அவ்
வாறு புரியாது சதா சர்வதா உனது நன்மையையே
மனத்திற் கருதியவளாயிருக்கின்றேனே. ஆகா! அந்தோ!
பதிவதனன் மைந்தனன். அவன் நின்னை விடுத்துப்
பிரியுமுன்னர் அவனுடன் ஓர் முறை உரையாட வேண்
டுமென நீ விரும்பியவாறு யான் அனுமதி யீந்ததை

அலக்கண் = துன்பம், பாங்கர் = சமீபம்; துன்ன = கிட்ட.

நமதரசனறிவிலனாய் என்னைக் கொலைஞர்களுக்கிரை யாக்குவனன்றோ. எனதரிய சுந்தராங்கி! அவனு டன் விரைவில் சம்பாஷணை புரிந்து அவனுக்கு விடை யீவாய்"

(மதிவதனன் வருதல்)

" மதிவதனன்—(சரசாங்கியை வணங்கி)

(சரஸ்வதி ஏமசதி)

பல்லவி.

பொன்னடி பணிந்தேன் யான்—அன்னையே நின் (பொ)

அநுபல்லவி.

இந்நகர் தன்னையாள் மன்னவன் தேவியே
கன்னியர் நாயகமே—பணிவுடன் (பொ)

சரணம்.

மகிபனே வென்மீது மாறுச்சினத்தனாய்
நகரைவிட் டேகெனப் புகன்றன னுறுதியாய்
ஏகுமுன் யான்சுந்த—ராங்கியை நோக்கிட
ஏவினீ ரெழுமன்பால் அரசியே (பொ)

சிறந்த அரசியே! எனதெளிய வந்தனம் தாழ்மை யுடன் தந்தனன். எனது இளம்பிராயத்தில் பெற் றோரை யிழந்த வென்னை நீங்கள் அரசியாய் வந்த முதல் அன்னையினும் அதிக அன்புடன் ஆதரித்துக் காப்பாற்றி வந்தீர்கள். அரசன் என்மீது கொண்ட அடங்காச் சினத்தினால் என்னை அக்கணமே நகரை விட்டேகுமாறு கட்டளையிட்டருளினும் எனதுயிரனைய தோழி சுந்தராங்கியை யான் இம்முறை காண்பது உங்களது பேரபிமானத்தின் பயனல்லவோ? உங்க ளது அன்பிற்கு இவ்வேழை எவ்வாறு நன்றி பாராட் டப்போகின்றேன்."

சரசாங்கி—

(இராகம்—தோடி.)

"சந்திரவதனா வுந்தன் றலைவிதி யென்னே வந்தோ !
நொந்தனன் யானே மிக்க நுகலொணாத் துயரிலாழ்ந்து
சொந்தமாய் நினைத்த சுந்தராங்கியைத் துறந்துநீங்கிச்
சந்தத மிடருருந்திச் சகித்தலு மெளிதோ ஐயோ !

ஆகா ! மதிவதனா ! நீயும் சுந்தராங்கியும் உடலும் உயிருமென ஓர் கணமேனும் ஒருவரையொருவர் விடுத்துப் பிரியாது அன்றிற் பறவைகளையொப்ப இன்புற்றிருந்தீர்கள். ஐயோ ! என்ன உந்தன் தலைவிதியின் கொடுமை ! இத்தகைய இனிய மங்கையைப் பிரிந்து தூரதேசத்தில் நினதாயுட்கால முழுமையும் விசனக் கடலிலாழ்ந்து கழித்தல் எவ்வளவு கஷ்டம் ! ஐயோ ! உனது சந்திரவதனத்தைக் காண என் மனது பாகா யுருகுகின்றதே. என் செய்வேன் ?"

மதிவதனன்—

" முதிர்தரு தவமுடை முனிவராயினும்
பொதுவரு திருவொடு பொலிவராயினும்
மதியின ராயினும் வலியராயினும்
விதியினை யாவரேவெல்லு நீர்மையார்."

" அன்னே ! முதிர்ந்த தபசியாயினும், ஒப்பற்ற செல்வத்தை யுடையோராயினும் புத்தியில் அதிமேதாவியராயினும், அதிபலசாலிகளாயினும், முன் ஜன்ம கருமத்தால் வரும் பயனை வராமல் தடுத்தற்கு வல்லமையுடையராவரோ ! ஒருகாலுமில்லை. வருவது வந்தே தீரும்.

(நுகலொணா=சொல்லமுடியா) திரு=செல்வம்

(இராகம்—சங்கராபரணம்)

"'அழுதாற் பயனென்ன நொந்தாற் பயனென்ன வாவதில்லை
தொழுதாற் பயனென்ன நின்னையொருவர் சுடவுரைத்த
பழுதாற் பயனென்ன நன்மையுந் தீமையும் பங்கயத்தோ
னெழுதாப்படி வருமோ சலியாதிரென்னேழை நெஞ்சே"

என்று மேலோர் கூறியபடி யாவும் விதியின்வாறு நடக்கின்றது. அதைப்பற்றி நாம் அழுவதாலும் விசனிப்பதினாலும் யாதொரு பயனுமில்லையன்றோ."

சரசாங்கி—

(முகத்தைக் காட்டி திரேகம் என்னும் வர்ணமெட்டு.)

(இராகம்-பைரவி. தாளம்-ரூபகம்.)

பல்லவி.

மதிவதனா யினி—யதிகந் தாமதியாமல்
மறைவதே—யனுகூலம், (மதி)

அனுபல்லவி.

அதிபனடங்காப் பெருங்கதத்தனா யிருக்கின்றான்
ஆதலிற் பிறிதோருர்—போதலே நீதின்று (மதி)

சரணம்.

மகிபன் கோபந்தணியு மளவுமந்த வுரையாடி
மகிழ்வித்தவன் மனதை மாற்ற முயலுகின்றேன்
நகரைவிடுத்துச் சின்னாள் ஏகுவதே நன்று
அகத்தாலிதை யாராய்ந் தறிகுவாயுண்மையை (மதி)

அடீ மதிவதனா! நமதரசன் இப்பொழுது உன்மீது அடங்காப் பெருங் கோபத்தைக் கொண்டவனாய், அரவினைச் சீறுகின்றனன் நீ ஆழ்ந்து யோசனை புரிகையில் இவ்வமயத்தில் இந்நகரை விடுத்தேகுவதே நலமென உனக்குத் தோன்றும். அரசனது கோபம் தணியும் சமயத்தில் யான் அவனைக் களிப்பித்து உன் விஷயத்தைப்பற்றி உரையாடி இக்கட்டினை

யை மாற்றும்படி செய்கின்றேன். மதிவதனு! நீ யாதொன்றுக்கும் அஞ்சவேண்டாம்."

மதிவதனன்—"சிறந்த அரசியே! மெத்த நன்று! யான் இன்றைக்கே இந்நகரை விட்டேகி விடுகின்றேன்."

சரசாங்கி—(சுந்தராங்கியை நோக்கி)

(இராகம்—மோகனம்.

*அரிவையே சுந்தராங்கி யரிய நின்றுணைவன்றனைப்*
*பிரிவையோவென்ன வெந்தன் சங்கையுமேங்குதையோ*
*வரயனிங் கேகாமுன்ன ருரையாடி முடிப்பீர்யானு*
*மரமத்திலுலவி மீள்வேன் விரைவினிற் றெரிவையாளே!*

எனதரிய செல்வி! சுந்தராங்கி! நினதுயிர்த் தோழனை விடுத்து நீ பிரிய நேர்ந்ததே! ஆகா! பிரிந்த பின் நீ எவ்வாறு சகிப்பையோ வென யான மிக்க சஞ்சலப் படுகின்றேன். நீங்களிருவரும் இனி ஒன்று கூடி வச னித்தல் கூடாதென அரசன் கண்டிப்பான கட்டளை யீந்திருப்பினும உங்களது தூர்ப்பாக்கிய நிலைமையைக் காண என் மனது பதைக்கின்றது. யான் இச்சோலை யிற் சிறிது உலாவி விட்டு வருகின்றேன். அதற்குள் நீங்களிருவரும் சம்பாஷித்தற் குரியதை வசனித்து முடியுங்கள். அரசன் வருமுன்னர் விரைவில் மதிவத னன் ஏகிவிடவேண்டும." (சரசாங்கி சென்று விடுதல்)

சுந்தராங்கி— (இராகம்—தோடி )

*இத்தகைக் கபடிநீலி யெத்தல மதிலுமில்லை*
*யத்தனை மயக்கியெம்மை யலக்கணிற் புகுத்திப் பின்னர்*
*தித்தித்த கற்கண்டின்மீது தேன்மாரி பொழிந்தா லென்ன*
*வுத்தமிபோல நம்பாலுரை யாடுகின்ற ளன்பாய்.*

---

அரமம்=சோலை தெரிவை=பெண்.
அத்தன்=தகப்பன். நம்பால்=நம்மிடத்தில்.

ஆகா ! எனதுயிரனைய மதிவதனு ! இவளது வஞ்சகமே வஞ்சகம் ! இவள் இவ்வரண்மனைக்கு வருவதற்கு முன்னர் எனது தந்தை நம்மீது எத்தகைய அபிமானத்தைக் கொண்டு நம்மையோர் கணமேனும் விடுத்துப பிரியாதிருந்தனரே ! இவளது தலையணை மந்திரோபதேசத்தினுல் இப்பொழுது அவர் நம்மை விஷமென வெறுத்து வருத்துகின்றனரே ! ஓர்விதச் சிறப்பு மற்ற ஜெயபாலனை மணக்குமாறு இவரிருவரும் என்னை எவ்வளவோ வற்புறுத்தினும் என் மனம் அதற்கெவ்வாறியையும். என்னைச சிறையிலடைப்பித்தும் உன்னை நகரைவிட்டுத் துரத்துமாறு செய்வித்தும் இபபொழுது ஒன்றையும் அறியாதவளைப் போலவும் நம்மீது ஆழ்ந்த அன்பைக் கொண்டவள் போலவும் நடித்து அவளை நாம் நேசித்தற்கு வேண்டியவாறு புரிகின்றனள். இவளது நீலித்தனத்தை என்னென விரித்துரைப்பேன்.”

மதிவதனன்—

(இராகம்—தோடி)

சிறையினிற் புகுத்திட்டாலும் சேய்மையிற் செலுத்திட்டாலும்
பிறவிடஞ் சேமித்தாலும் பெட்டியிற் பூட்டிட்டாலு
மிறுத சங்கிலியாற் சுற்றியிறுகவே பிணித்திட்டாலும்
பிறர் மனப்பற்றை நீக்கிப்பேதித்தலேலா தன்றே.

எனதினிய கண்மணி! சுந்தராங்கி! வலியவர் எளியவரின் உடம்பைத் தம் வசப்படுத்துவ தெளிதே ! அவரைச்

---

சேய்மை = தூரம். சேமித்தல் = பாதுகாத்தல். இறுத = அறுகாத.

சங்கிலிகளாற் பிணித்தாலும், சிறைச்சாலையி லடைப்பித்தாலும, இரும்புப பெட்டியில் வைததுப பூட்டினுலும் அவர் மனதின் சுயேச்சையாய் அலையும சுபாவத்தையும் அதன் பற்றையும் விலக்க வலியோர் எவ்வாறு முயலினும அக் காரியம் பலியாதன்றே!

(இராகம்—சாவேரி)

"கந்து கமதக்கரியை வசமா நடத்தலாங்
கரடி வெம்புலி வாயையுங
கட்டலா மொருசிங்க முதுகின்மேற் கொள்ளலாங்
கட்செவி யெடுத்தாட்டலாம்
வெந்தழ லினிரதம் வைத்தைந்து லோகததையும்
வேதித்து விற்றுண்ணலாம்
வேறொருவர் காணுமலுலகத் துலாவலாம்
விண்ணவரை யேவல் கொளலாஞ்
சந்ததமு மிளமையோ டிருக்கலா மற்றொரு
சரீரத்தினும் புகுதலாஞ்
சலமேனடக்கலாங் கனன்மேலிருககலாந்
தன்னிகரில் சித்திபெறலாஞ்
சிந்தையை யடக்கியே சும்மாவிருக்கின்ற
திறமரிது சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே."

என்று மேலோர் கூறியவாறு ஒருவன் தனது மனதையே யடக்குவது கூடாக் காரியமாயிருககு அவன் பிறர் மனதை அடக்கித் தன் வயம திருபபுவது எவ்வளவு அரிய கருமமென்பதை இவரறிநதாரில்லை போலும். நாம எங்கிருபபினென்ன? நமது மனத தொடாபை இவர்கள் மாற்றுவதற்கு வல்லவராவரோ."

சுந்தராங்கி—(கண்ணீர்த் ததும்ப)

(இராகம்–காம்போதி)

"மதுநிகர் துணைவாயெந்தன் மதிப்பிலா மணியே யன்பா
வதிபனின் சினத்தையானு மதித்திலே னின்னையோர்நாட்
பதியெனக் கொளுமவாவிற் பலகோடி யிடர்களென்னை
வதைப்பினு மதியேன் நின்னை மனத்திறுற்றினமுங் காண்பேன்

எனதுயிரனைய துணைவா! எனது தந்தை என்மீது கோபங்கொண்டதைப் பற்றி யான் சிறிதும் வருந்தினேனில்லை. யான் அவர் விஷயத்தில் யாதொரு பிழையும் செய்யாதிருக்கும்பொழுது அவர் என்மீது சினங்கொள்ளின் அது என்னை என்செய்யும்? நீ அவர் கட்டளையின் வண்ணம் நகரை விட்டேக வேண்டிய தவசியமே. யான் இங்கு சிலகாலம் தந்தையின் கோபத்திற் கிலக்காயினும் எவ்வாறு துயரிலாழ்ந்திருப்பினும், எனதுயிர் நிலையை யொத்த நின்னை எப்படியாயினும் திரும்ப எனது பிராணகாந்தனைய் அடையலாமென்னும் உறுதியான நம்பிக்கையினால், யான் அத்தகைய பல துன்பங்களைப் பொறுத்துக்கொண்டிருக்கின்றேன். திரும்ப உன்னைக் காணும் வரையில் யான் உன்னையன்றி வேறொன்றையும் மனத்தால் நினைப்பேனே."

மதிவதனன்—(கண்ணீருடன்)

(இராகம்–தோடி)

"கண்மணி கனியதேனே கரைகியோ வெந்தன்சங்கை
புண்ணினிற் றீயிட்டாங்கு பொங்குதே நொந்துனைந்து
கண்ணினீ ரொழிப்பாய் கண்டே கனவினுமுன்னை யல்லாப்
பெண்டிரை நினையேன் தேற்றம் பேதையே யன்னப்பேடே.

கரைகியோ = அழுகின்றனையே. கண்டே = கற்கண்டே.

அடி எனதுயிரனைய சுந்தராங்கி! பெண்மணி! ஐயோ! நீ விம்மியழுகின்றையே! உனது துன்பத்தைக் காண என்

மது = அமிர்தம்.

மனது பாகாய்க் கரைந்தோடுகின்றதே! என் செய்வேன்! யான் இப்புவியிலுள்ளமட்டும் நின்னையன்றிப் பிறமாதரை மனதிலும் விரும்பேன். என் மனதையும் தேகத்தையும் உனக்கே அர்ப்பணஞ் செய்தேன். அழுது வருந்தவேண் டாம். அடி கட்டிக்கரும்பே!

சுந்தராங்கி—

"(ஒருநாள் மருவிய என்ற வர்ணமெட்டு)

இராகம்—எதுகுலகாம்போதி. தாளம்—ரூபகம்.

பல்லவி

துணைவா மதிவதனு சுந்தரா பிராணேசா
துரையே உயிர்நிலையே. (துணை)

அநுபல்லவி

கணமும் பிரிந்தறியோம்—காதலுடன் நேசித்தோம்
இணையற்ற யினியனே யினி நானென்செய்குவேன் (துணை)

சரணம்

ஓர்தலத்தில் வளர்ந்தோம் ஓர் கலத்தினிலுண்டோம்
ஓரிடத்திற் பயின்றோம் ஒன்றாய் நாமாடினோம்
ஓர் மனதைக் கொண்டோம் உட லுமுயிருமானோம்
ஓர் கணம் நீ இன்றேல் உய்யும் வகையென்னே (துணை)

ஐயோ! எனதினிய மதிவதனு! யான் என்செய்வேன்? நாம் இருவரும இதுகாறும் ஒருவரையொருவர் விடுத்து ஓர் கணமேனும் பிரிந்தறியோம. நாம் ஓர் இடத்தில் வளர்ந் தோம். ஓர் ஆசானிடத்திற் கலை கற்றோம். ஓர் பொருளும் அதன் நிழலும்போலப் பிரியாது விளையாடினோம். எவ் விஷயத்திலும் ஒரேவித மனதையுடையவரானோம். இத் தனை வருஷங்களாய் என்னுடனிருந்த அரிய தோழனாகிய உன்னைப் பிரிந்த பின் அக்கொடிய தனிமையை எவ்வாறு சகிப்பேன்."

மதிவதனன்—

(இராகம்—நாதநாமக்கிரியை)

" இலங்கிழைச் சுந்தராங்கி யினியளே சிந்தைநொந்து
கலங்கிடிற் பயனுமின்று கற்றவர்க்கழகுமன்று
கலிங்கமா பதியில்வாழும் கண்ணிகரெந்தை நண்பன்
பலராமன் மனையில் நிற்பேன் பாவையே யுயிரே பேதாய்.

எனதுயிரனைய கண்மணி! ஏ பெண்மணி! விலையற்ற நன்மணி! சுந்தராங்கி! நீ இவ்வாறு வருந்துவ தனக்கழகோ! அதனாற் பயனென்ன? துன்பம வந்துற்றபோது அறிவுடையோர் வருந்துவரேல் கற்றவர்க்கும் மற்றவர்க்கும் பேதம் யாதுளது! நமக்கு வந்துறும் பல இடுக்கண்களையும பொறையுடன் சமததலே மேன்மைக் குணமன்றி அவற்றைப பெரிதும் பாராட்டி வருந்துவது பேதைக்குணமன்றோ. ஏ அரிய கிளியே! நின் மனதை இவ்வாறு அலைக்கவிடாது தேறறிக்கொளவாய். கலிங்கதேயத்திலுள்ள எனது தந்தையின் ஆப்தநண்பனை பலராமனென்பவனது வீட்டில் யான் வசிபபேன். நினது தூதுவர் என்னை அங்கு காணலாம. அப்போதைக்கப்போது நிருபத்தின் வாயிலாய் நமது மனத்தைப புலப்படுத்தியவாறு விமோசன காலத்தை எதிர்பார்த்திருப்பதே உசிதமான காரியம். உனது கடிதத்தின் ஒவ்வோரெழுத்தையும் எனது நேத்திரங்களால் அமுதபானமென்ன அருந்துவேன்."

(சரசாங்கி திரும்பி வருதல்)

சரசாங்கி— (இராகம்—கல்யாணி)

" இன்னமும் வசனிக்கின்றீர் ஏங்கிநீர் கலங்குகின்றீர்
மன்னவன் காண்பானேயிற் பன்னக மென்னச்சீறி
என்னையே வெறுப்பன் காண்பீர் விளம்பனமின்றிநீவிர்
மன்னவன் றன்னுமுன்னர் வசனித்துப்பிரிதல் நன்று.

---

பன்னகம் = பாம்பு. விளம்பனம் = தாமதம்.

ஆகா! இன்னமும் சம்பாஷித்து முடிக்கவில்லை போலும் ஐயோ! இப்பொழுது நமதரசன் இங்கு வந்து உங்களிருவரையுங் காண்பனேல் என்மீது நாகமெனச்சீறிக் கோபித்து என்னை வெறுத்துத் தண்டிப்பனன்றே. ஆதலின், நீவிர் சுருங்க உரையாடி விரைவில் முடிப்பீர். யான் இன்னம் சற்று உலாவிவிட்டு வருகின்றேன். (சரசாங்கி தனக்குள் அடியில் வருமாறு சொல்லிக்கொண்டு செல்லுதல்) ஐயோ! இவ்விருவரும் உரையாடுவதைக்காண என் வயிறெரிகின்றதே! இவள் எனதரிய சகோதரனுக்கு மனையாட்டியாய் அவனுடனன்றோ இவ்வாறு வாரனித்தற்குரியவள். எனினும் இன்னமோர நிமிஷம் சம்பாஷிப்பதினால் யாதொரு பொல்லாங்கும் நிகழாது. எனது நோக்கம் நிறைவேறற்கும் யாதோரிடையூறும் சம்பவியாது. இவனேகிவிடுவனேல் பின்னர் இவளை நம்வசப்படுத்துவது அரிதகாரியமன்று."

மதிவதனன்

(புரோவசமய மென்ற வர்ணமெட்டு.)

(இராகம்-கௌரி மனோகரி, ஏக தாளம்)

பல்லவி

"வாடுவதேனோ-பேடே நீவருந்தி (வா)

அனுபல்லவி

நீடுதுன்பமுறல்-நீக்குமோவிதியை
மூடரேய மூவர் பீடுடையபேதாய்

சரணம்

அன்பரைப்பிரித்து ஆயுட்காலமுற்றும்
துன்புறுத்தா வீசன்துனை வன்தீனர்கட்கு
பின்புகூடிநாமே பெருமகிழ்வு கொள்ளும்
நன்மையின்பொருட்டுத் தோன்றிய பேறன்றோ (வாடு)

(இராகம்-முகாரி)

அன்னமே யின்னமிந்த அவனியிற்பிரமனீந்த
பன்னெடு வருடமுற்றும் பிரிந்திட நினைப்போமேனும்
சொன்னமே கணமும் நீங்குந் துணிவினைப்பெறுதலுண்டோ
துன்னியவெறுப்பு வீங்குந்துயர் நனிமல்குமன்றோ

ஏ சுந்தரி! என தாருயிரே; கருணைக்கடலாகிய கடவுள் நம்மை சாஸ்வதமாய்ப பிரித்து முற்றும் வருத்துவனென நினைக்கவேண்டாம. வருவதெல்லாம் நமது நன்மைக் கென் பதை மறநததனைபோலும். இப்பொழுது நாம பிரிநது மனம் வருந்தி வாடுவதெ தறகாகவென்பதை அறியாயோ? முத லில் நிழலி விருத்தலைக்காட்டினும் வெயிலில் வாடிவதங்கி வருந்திய பின்னர் நிழலிற்செலலின் அந்நிழல் முன்னிலும் ஆயிரமடங்கு இனிமை யுடைத்தாய்த் தோன்றுதல்போல் நாம் பின்பு கூடி இபபொழுநினும் அதிகரிதத பரமானந்த போக மனுபவிததறகன்றோ! ஆகா! கண்மணி! நமக்குப் பிரமனால் அளிக்கபபட்ட ஆயுட்காலத்தில் இன்னம் எஞ்சி யுள்ள ஆண்டுகள் முறறும நாம ஒருவரையொருவர் விட்டுப் பிரிய நினைபபோமே யாயினும் மனமொவ்வாது. பிரிதறகு மனமின்மை மேன் மேலும அதிகரிக்கு மன்றிக் குன்றாது. கண்ணே! யான் செல்கின்றேன், தயைபுரிநது விடை யீவாய். திகட்டாத இன்சுவையே!"

சுந்தராங்கி

(எப்புடு கிருபாகல்குனோ என்ற வர்ணமெட்டு)

(இராகம் முகாரி—தாளம் ஆதி)

பல்லவி

எத்தினம்யாம் சந்திப்பது இனியமதுகரனே (எ)

---

சொன்னமே=சொர்ணமே மல்கும்=பெருகும்

3849

அநுபல்லவி.

சித்தமிசை குடிகொண்டாய் சீலனேகலைநிறை
உத்தமாசகிப்பேனோ ஓர் கணம் யான்பிரிவேனோ (எத்)

சரணம்.

மன்னவன்றனதிள மனைவியின் மோகத்தால்
வன்னெஞ்ச னுவனென வுன்னினேனில்லையந்தோ
என்னோ இத்தகைத்தீமை எதிலர் புரிவாரோ
அன்பனே ஏகென்றேவ என்மனமெங்ஙனமொவ்வும் (எத்)

(இராகம்—ஆனந்த பைரவி)

நகர்ப்புறஞ் சென்றுலாவ நயப்பவன் போலத்துன்னி
மிகவெளிதாகவெண்ணி வேண்டினைவிடைதாவென்ன
நிகரிலா நேயா நின்னை நெடிது யான் நீங்கலன்றே
அகமிடந்தருமோ சாலவரிதினு மரிதேயன்றே

ஆகா! என காவியே! அரிய அன்பா! அரசன் தனது இளைய பத்தினியின் மோகவலையிற்பட்டுத் தனது மதியை இழந்து இவ்வாறு நம்மை இடுக்கணிற் *புகுத்துவனென யான் ஒருபோதும் நினைத்தேனில்லை. ஐயோ! நின்னைப் பிரிய எவ்வாறு மனங்கொள்வேன். நீ இப்பொழுது நகரத்திற்கு வெளியில் சிலநிமிஷங்கள் உலாவச்செல்வதற்கு விடை கேட்பவனைப்போல, நமது பிரிவை அவ்வளவு எளிதாய் மதித்தனைபோலும். இது நாம் திரும்ப ஒன்றுய்க்கூடுவோமென்னும் நம்பிக்கையற்ற பிரிவன்றே. நண்பா! இதோ பார்த்தனையா? இவ்வைர மோதிரம் எனதன்னையால் ஈயப்பெற்றது. இதை எனது ஞாபகார்த்தமாய் வைத்துக் கொள்வாய். சுந்தராங்கி இறந்து நீ வேறோர் மங்கையை மணக்கும்வரை இதை யாவரிடத்தும் கொடுக்காதிருக்க வேண்டுகிறேன்."

---

நயத்தல்=வரும்புதல் அகம்=மனம்

மதவதனன்

(மோதிரத்தை வாங்கித்தன் விரலி லணிந்தவாறு)

(அங்குநா னிருந்தவனே)

"ஆகா நன்றே நீ யுறைத்தா யரியவெந்தன் கண்மணியே
ஆவியே நின்றனையை யன்றி ஐயோ பிறமாதைவேண்டேன்
மாதர்களின் நாயகமே-மாற்றிலாத மாமணியே
கோதையே யுனக்கு நிக-ரேதேதில் வுலகமதில் • (அ)
மங்கையே நின்மோதிரத்தை மறப்பிலும் யானிழப்பதில்லை
நங்கையே நன்மரகதமே-நன்மைநிறை நவநிதியே (ஆ)

ஆகா! வேறோர் மங்கையா! ஐயோ! தெய்வமே! விலை மதிப்பற்ற மாணிக்கமான உன்னைக்கடவுள் எனக் களிபபரேல் அஃதே எனது பெரும் பாக்கியமன்றோ. யான் பிறமாதை மணக்க நினைப்பதைவிட உயிர் துறப்ப தையே ஏற்றுக்கொள்வே னென்பதை உறுதியாய்க்கொள் வாய் குயிலே! ஆகா! கண்ணினும் சிறந்த பெண்மணி! தேனினு மினியமானினி! மது வினுஞ்சுவை மிக்கமாதே! இன்பப்பிழம்பே! எனதுயிரும் இம்மோதிரமும் ஒருங்கே எனது திரேகத்தை விட்டு நீங்குமன்றி அதற்கு முன்னர் இவ்விரலினின்று அதை வேறுக்குவதில்லை. (தன் மோதி ரத்தை விரலினின்று வாங்கி) சுநதரி! எனது ஞாபகார்த் தமாய் இம்மோதிரத்தை அணிநது கொள்வாய். (அவ ளது சுண்டுவிரலில் இதைப் புகுத்தியவாறு) இவ்வழகிய கைதியை, நட்பிற் கரிகுறியான இவ்விலங்காற் பிணிக்கின் றேன்."

சுந்தராங்கி. (மனதிளகி) "ஐயோ தெய்வமே! நாம் இனி எப்பொழுது சந்திக்கப் போகின்றோம்."

(பிரதாபசிம்மன் வருதல்)

மதிவதனன்—"ஆகா! அரசன் வந்துவிட்டனன்."

பிரதாபசிம்மன்—(கோபத்துடன்)

(இராகம்—மோகனம்)

ஏதடா கயவாயின்ன மேகினையில்லை தாழ்ந்த
பாதகப்பதரே நின்னைப் பார்த்தலுங் கொடியபாவ
மாதலினசல்வாயப்பால் அரைக்கணந் தரிப்பையாயின்
சாதலே திண்ணமன்றித் தப்புதலில்லை காண்பாய்.

அடே! மதிவதனா! இன்னமும் நீ நகரைவிட்டுச் செல்லாது அரண்மனைக்குள் தாமதிக்கத் துணிந்தனையா! ஆகா! கீழ்மகனே! உன்னைக் காண்பது எனது கண்களுக்கோர் நோயன்றோ. இனியோர் கணமும் இவ்வரண்மனையில் நின்று அதன் மேன்மையை உனது யோக்கியதையற்ற தாழ்மைத் தன்மையினால் களங்கப்படுத்துவையேல் உடனே நீ இறத்தலுறுதி. ஆதலின் நில்லாது ஓடிப்போ! நல்ல உதிரத்தில் காலகோடி விஷம் பரவியவாறு நீ எனது மேம்பட்ட சந்ததியைக் கெடுக்கவந்த பாதகனன்றோ."

மதிவதனன்—

(போற்றி போற்றி போற்றி யிந்திர)

"ஓங்குபுகழ்தங்கும் முயரோங்கலேகோவே
உத்தமாயான் செய்த பிழை பொறுத்திடுந் தேவே (ஓ)

(2) ஏழையென்மேல் நீர் முனிந்து சீறுதலேனோ
எந்தையே யென்மீதிலேனோ வர்மமே நாதா (ஓ)

(3) காதலித்தீரென்னை யிதுகாறுஞ் சேயனாய்
காவலகழல் பணிந்தேனே கினேனிதோ (ஓ)

சிறந்த மகிப! இவ்வேழைமீது நீவிர் கொண்ட சினத்தைத் தணித்தருள்மின். யான் இப்பொழுதே கட்டளையின் வண்ணம் சென்று விடுகின்றேன். கடவுளின் அருளால் நீங்களும், உங்கள் தொடர்பினரான மற்றவரும் இங்கு இனிதிருங்கள்."

(மதிவதனன் சென்றுவிடுதல்)

சுந்தராங்கி—

(இராகம்—கானடா)

" எந்தையே யவனியாளுமேந்தலே யுமது செய்கை
விந்தையே கொடியதீதே சொந்தமா மீன்றோர் தங்கள்
பந்தமாற்சத்தாரைப் பரிபவம்புகுத் தலுண்டோ
சிந்தையை வருத்தியென்னைச் சிறுமையிற் படுத்தலென்னே.

எனதரிய பிதா! ஐயோ! என்னை இவ்வாறு வருத்த எத்தனை ஆண்டுகளாய் மனங்கொண்டீர். அருமையாய் ஈன்று வளர்த்த பெற்றோர் தாது செல்வச் செல்வியரை இவ்வாறு துனபக்கடலி லாழ்த்துவதுண்டோ! நீவிர் புரிவது மிக்க ஆச்சரியமாயுளது."

பிரதாபசிம்மன்

(இராகம் சாவேரி)

"பேதையே சுநதராஙகி பிடிவாதம் விடுத்தாயில்லை
தாதையின் மொழிக்கடங்காத் தகைவிலா மகளிருண்டோ
ஏதமார் நெறியிற்போநதா யிடரினுல விடுத்தா யென்னை
மாதரி லுன்னைப்போல மண்ணைய ரொருவரில்லை.

அடி சுநதராஙகி கடடுககடஙகாத அறிவிலி! நீ இன்னம் உனது பிடிவாதத்தை விடவில்லையோ! அன்னை, தந்தை, குருதெய்வம், முதலிய ஐங்குரவர்க்கும சிறுவர் சிறுமியர் கீழ்ப்படிநது ஒழுகவேண்டு மென்பதைப் புஸ்தகபாடத் தொடு மறந்துவிட்டனைபோலும். உனது அடாக்காரியத்தினு லுண்டான பெரும வியாகூலத்தினால் யான்காலத்திற்கு முன்பு முதியோனாய்த் தளர்நது மனம் நொநது வருந்து கின்றேன்."

---

ஏந்தல் = அரசன் பந்தமாற் = தொடர்புடைய பரிபவம் = துன்பம்.

ஏதமார் = குற்றமான. மண்ணை = முட்டாள்.

சுந்தராங்கி

(இராகம்—எதுகுலகாம்போதி.)

அத்தனே சினந்தே யென்னை யெள்கியே யதட்டுகின்றீர்
புத்திரி யென்னுமன்பும் போக்கினீர் புன்கணீந்தி
ரெத்தகைப் பிழையும் நம்பாலியற்றிடாப் பேதையென்னல்
சித்தத்தை வருத்தில்யாது ஆதியமடைவீ ரேந்தல்.

எனதரிய தந்தையே! நீவிர் என்மீது கடுஞ்சினங்கொண்டு பலவாறு ஏசுகின்றீர். உமதரிய காதற்செல்வி யென்னும் அன்பையும் விடுத்துப பலதுன்பங்களைச்செய்து என்னை அடாதவாறு தூஷணம் புரிகின்றீர். உமது விஷயத்தில் யான் யாதோர் பிழையும் புரிந்தேனில்லை. அங்ஙன மிருக்க நீவிர் இவ்வாறுசெய்து மனம் வருந்தலினால் யாது பயனுளது.''

பிரதாபசிம்மன்

(இவள்தான் இதள்தான் என்ற வர்ணமெட்டு.)

(இராகம் பியாகடை தாளம் ரூபகம்)

பல்லவி.

"அறிவேன் அறிவேன் அறிவிலிநீசெய்த
அகம்பாவச் செயலினை அறிவேன் (அ)

அனுபல்லவி.

நெறியினில் நில்லாது நினைத்தாங்கு புரிந்தனை
பிறப்பிற் சூழ்வறியனைப் பேணிப்பாராட்டினை (அ)

சரணம்.

அல்லும் பகலுமுன்னை அன்பாய் வளர்த்த தந்தை
சொல்லைமறுத்து மிக்கத் துணிவினைக்கொண்டனை
தமலியின் சோதரன் தகையோன் ஜெயபாலனும்
நல்லோனை வெறுத்தனை நஞ்செனமாறினை (அ)

ஏ சுந்தராங்கி! உன்னைச் செல்வியென அழைப்பதற்கும் எனக்கு நாவெழவில்லையே. உனது அகம்பாவத்தினாலும்,

மடமையினாலும் என்ற தாதையின் கட்டளையை உல்லிங்கனம் செய்தனையன்றோ. ஆண்டிலும் அறிவிலும் முதிர்ச்சி பெற்ற யான் உனது நன்மைகளை ஆராய்ந்து இக்காரியம் தக்கதெனக்கூற, நீயோ அவற்றையும் உணராதவளைப்போல ஜெயபாலனை மணக்க இஷ்டங்கொண்டாயில்லை ஆகா! என்ன உனதன் துணிபு''

சுந்தராங்கி

(நகுமோமு என்ற வர்ணமெட்டு)

(இராகம்-ஆபேரி தாளம் ஆதி)

பல்லவி.

தந்தையே யிவ் விந்தையை யான் தாணியிற் கண்டறியேன் (த)

அனுபல்லவி.

அந்த மில்லான் ஜெயபாலன் அருகனோ எனையனுக
அந்தகன் கந்தனோ யாவனோ அறியீரோ எந்தை நீர் முனியாதீர் (த)

சரணம்.

கலைவல்லான் விலையில்லான் நிலைபுள்ளான் மதிவதனன்
மலைவானேல் அரிமாவும் தொலையாமல் சமயாமோ
மலையோடு, சிலையொன்றை, நிகரென்ன, வழியுளதோ
தலைவா எனைநீர் உலையா தருள்வீரே ஜெயபாலனை மணவேன் (த)

ஆகா! தந்தையே! யாதொரு யோக்கியதையு மற்ற ஜெயபாலனைமணக்க என்மனம் எவ்வாறு இயையும்? அவனை மதிவதனனிலும் சிறப்பித்துக்கூறலை யானையினும் பானையை விலையுயர்ந்ததெனமதித்தற்றன்றோ. மதிவதனன் ஆழ்ந்த கல்வி, சிறந்த நற்குணம், இனிய நல்லொழுக்கம், எவர்க்கும் அடங்கா ஆண்சிங்கத்தைப் பொருந்த பராக்கிரமம், தைரியம், மாரனை வென்ற அழகு, அன்பு, தயை, முதலிய எண்ணிக்கையற்ற மேம்பாடுகளை யுடைத்தாயிருக்க, அவனை விடுத்து, ஓரியல்பு மற்ற வீணனான ஜெயபாலனை யான்

எவ்வாறு மணப்பேன். யாவரேனும் குயிலின் தீங்குர லோசையை விடுத்துக் காகத்தின் இராகத்தை விரும்பு வரோ! என்மனது அவனை ஒருபோதும் விரும்பாது.''

பிரதாபசிம்மன்

(இராகம்-கானடா)

''ஏதடி சுந்தராங்கி தாதையைத் தரணியாளு
மேதகு வேந்தனென்ன மதித்தனை யில்லைபோலு
மாதுலன் மீது வேட்கை யடைந்தனை யெந்தன்சிம்ம
வாதன மிந்தத்தாழ்ந்த பேதையி னிருக்கையாமோ.

அடி சுந்தராங்கி! நீமாதர்க்கணிகலமான நாணம் அச்சம் முதலிய இன்றியமையாக் குணங்களை முற்றும் காற்றில் தூற்றி விட்டனை. மகளிர்க் குரியவரம்பையுங்கடந்து வச னிக்க வாரம்பித்தனை. நிற்க, உனது தந்தை இவ்வுல கத்தைப் பாலிக்கும் மன்ன னென்பதையும் மறந்தனை. நீ இத்தகைய அடாக்காரியங்கள் செய்ததின் முகாந்திர மென்ன? யாவரினுமமிக்க இழிந்தோனை ஓர் யாசகனை மணக்கவேண்டுமென்னும் அவாவினால் மதியிழந்ததேமுகாந் திரமன்றோ. அரசபதவி கிடைத்தற்கரியதும் கடவுளிற் கிரண்டாவது மான நிலைமையன்றோ. அத்தகைய சிம்மா தனத்தின் மீது கேவலம் தாழ்ந்த வோர்கீழ் மகனை அமர்த்த நினைத்தனையன்றோ!''

சுந்தராங்கி.

(காவடிச்சிந்து வண்ணத்தினை)

''வையத்துயர்வுற்ற வையனே மனம்
வெளவிய சீர்பெற்ற மெய்யனே யவன்
மாணவர்யாரிலும் தூய்யனே மிக
மனம் வாடியே யெனைநாடியே
சினமேவினீர் கனலே யென

ஆதுலன் = யாசகன் வேட்கை = ஆசை.

வாஞ்சை யில்லாமுழு வெய்யனே யென
மாறி னீரேயென னையனே

(2) எங்குங்கிடையாத தீரனே யவன்
எததகையபெரும் வீரனே யணி
செப்பிடிலோவெழில் மாரனே யுயர்
சிம்மாதன மெம்மாதவம்
செய்தோயிவன் மெய்தாங்குதல்
செம்மலே போரினிற் சூரனே யவன்
ஜெயபாலனே வொரு சாரனே

அச்சிம்மாசனம் அவனை அரசனாகத் தாங்குமேல், அது முன் ஜென்மத்தி லியற்றிய பூஜாபல னன்றோ! அவனிருக்கையால் அது முன்னிலும் அதிகம பிரகாசித்தது தோன்றுமேயன்றி மழுங்கித் தோன்றாது.''

பிரதாபசிம்மன் (கோபத்துடன்) ''அடி துஷ்டை வாயை மூடிக்கொள். போதும் உனது உபந்நியாசம.''

சுந்தராங்கி—

அகவல்

(இராகம்–ஆனந்தபைரவி)

''மன்னவா கேண்மின் மதிவதனன் றன்னை
முன்னாள் முதலாய் என்னுடன் றுணைவனாய்
விடுத்தனிராதலின் விரும்பினேனவனை
வடுவுமதன்றி மற்றவர் குற்றமோ
புவியினிலுள்ள பூவையாளெவனும்
நவையறக் கொண்டிருந்த கையுளானாதலின்
சுந்தரனெனத்தனைச் சொந்தமாய்க் கொண்டிடல்
முந்தைநாள் வினையினால் முடிவதாய்த் தெளிகுவீர்.

வடு = குற்றம் பூவை = பெண் நவையற = பழியின்றி.

எனதரிய தந்தையே! யான் மதிவதனன்மீது வேட்கை கொண்டு அவனை மணக்க உறுதிகொண்டது உமது குற்றமேயன்றி வேறன்று. இளமைப் பருவமுதல் எங்களிருவரையும் ஓரிடத்தில் வளருமாறும், விளையாடுமாறும், கல்வி பயிலுமாறும் விடுத்தீர். அவன் இப்பூலோகத்திலுள்ள எவ்வளவு மேம்பட்ட மாதையும் மணத்தற்குரிய சிறப்பையுடையான். அவனது அருமை பெருமைகளிற்கு முன்னர் எனது யோக்கியதை எம்மாத்திரம்! அவனுக்கு யான் சமமான மனைவி யென்பதற்கே யிடமில்லை. அவன் எனக்குக் கிடைப்பது எனது முன்வினைப் பயனால் வந்த பாக்கியமே.”

பிரதாபசிம்மன்—(கோபச் சிரிப்புடன்) “இதென்ன ஆச்சரியம்! அடி சுந்தராங்கி! உனக்குப் பைத்தியம் பிடித்து விட்டதோ?”

சுந்தராங்கி—

(இராகம்-மோகனம்)

“அத்தனே யுண்மையா யுன்மத்தமே சொண்டேனும்மால்
கத்தனே காப்பனென்ன மெத்தவு முறுதிகொண்டே
னுத்தமமென்னுந் தோன்றற்சுதை யினுமெளியோனார்வப்
புத்திரியாயி னெந்தன் துணைவனைப் பிரிதலுண்டோ.

எனதரிய பிதா! நீவிர் புரிந்தவற்றால் யான் பைத்தியங்கொண்டதுண்மையே! கருணைக் கடலான கடவுள் என்னை அதினின்றும் நிவர்த்திப்பானென்றும் நம்பிக்கையைக் கொண்டிருக்கின்றேன். ஐயோ! யான் சிறந்த பதவியான அரசபுத்திரியாய்ப் பிறந்தினும் ஓர் ஏழைக் குடியானவனது ஆசைச் செல்வியாயும், எனது தோழன் மதிவதனன் அடுத்த இல்லத்துக் குடியானவன் புதல்வனாயும் உதிக்

உன்மத்தம்=பைத்தியம் கத்தன்=கடவுள் தோன்றல்=அரசன் சுதை=பெண் ஆர்வம்—ஆசை.

காமற் போனோமே யென்று யான் மிக்க வருந்துகின்றேன். அவ்வாறு பிறந்திருப்பின் எங்களுக்கித்தகைய இடுக்கண்கள் ஒருபோதும் சம்பவித்திராவன்றோ”

பிரதாபசிம்மன்—“ அறிவிலி ! பேதை !”

(சரசாங்கி வருதல்)

பிரதாபசிம்மன்—“ எனதினிய சரசாங்கி ! இதுவரையில் எங்கிருந்தனை ? இவ்விருவரும் திரும்ப ஒன்றாய்ச் சேர்ந்திருக்கக் கண்டேன். நீ எனது கட்டளையை நிறைவேற்றினு யில்லைபோலும். இனியும் தாமதியாது இவளை இக்கணமே அழைத்துப்போய்ச் சிறைச்சாலையில் அடைப்பாய்.”

சரசாங்கி—(மிகவும் தந்திரமாய்) “ பிரிய காந்தா ! கோபத்தைத் தணித்தருளுங்கள்—எனதரிய செல்வி ! சுந்தராங்கி ! தாதையுடன் எதிர்த்து மறுமொழி கூறுவதழகன்று. சிறிது சாந்தத்தைக் கொள்வாய்—இனிய நரேந்திரா ! எங்களை இங்கு விடுத்து நீங்கள் தயை புரிந்து அந்தப்புரத்திற்குச் செல்லுங்கள். அதிசமாய் கோபித்தலும் வருந்துதலும் உங்கள் தேகசௌக்கியத்திற்கு விரோதமான விஷயங்களன்றோ ? ”

பிரதாபசிம்மன்—“ அல்ல அல்ல ! இவள் இக்குற்றத்திற்குப் பிராயசித்தமாய்த் தனதாயுட்கால முற்றும் வருந்தி மனமுடைந்து தினமோர் துளியாய் இரத்தக்கண்ணீர் விடுத்துச் சிறைச்சாலையிலேயே இறத்தல் வேண்டும். ஆதலின் இவளை விரைவி லழைத்துச் செல். இவள் விஷயத்தில் சிறிதும் உன்மனதிரங்கப் போகின்றது.”

(அரசன் சென்றுவிடுதல்)

(புருஷோத்தமன் வருதல்)

சரசாங்கி—(இனிமையாய்) "எனதரிய புதல்வி! சே! நீ இவ்வாறு மனந்தளர்தல் நினக்கழகாமோ?—இதோ நினது சேவகன் வந்தனன்.—ஏ புருஷோத்தமா! என்ன விசேஷம்?"

புருஷோ—"மகாராணியாரே! உங்களது தமையனார் எனது எஜமானன் மதிவதனனை வழிமறித்துப் போர் புரிந்தனர்."

சரசாங்கி—"ஆகா! போர் செய்தனரா? அதனால் யாதாயினும் தீங்கு சம்பவித்ததோ?"

புருஷோத்தமன்—

(இராகம்—சகானா)

அன்னையே யரயாசிரே யகன்றவென் றலைவன்சீற்ற
மென்பத னுதவியின்றிப் பொருதனனிறுதிகாறும்
நன்குடனாடி நின்றானாதலின் றீதின்றாகும்
துன்னியோ ரிவரைப்பற்றித் துரிதமாய்ப் பிரித்தார் வேறாய்.

சிறந்த மகாராணியாரே! இந்நகரை விடுத்தேகிய எனது நாயகன் கோபமென்பதையே பெறவில்லையாதலின் தனது வாளை வைத்துக்கொண்டு விளையாடியதாய்ப் புலப்பட்டதேயன்றி உண்மைப்போர் புரியவில்லை. இல்லையேல் தீங்கு சம்பவித்திருத்தல் நிச்சயம். அதற்குள் அங்கு வந்திருந்த சிலர் இவரை விலக்கிவிட்டனர்."

சரசாங்கி—"இந்த சமாசாரம் மெத்த சந்தோஷத்தைத் தருகின்றது."

---

நன்குடன் = அழகாய்.

சுந்தராங்கி—

(இராசம்-தேசிகம்)

"அரசியே யுந்தனண்ணன் அண்ணலின் நண்பனானேன்
புரியை விட்டேகுவோனும் புகலிட மில்லானோடு
பொருதனனென்னே! யுஃனோன் வீரமே வீரமாகு
முரத்துடனிகலின் மூதகதோ னும் பரிலிருப்பனன்றோ.

எனதரிய சிறாய்ஸீன! உங்களது மூத்தோனும் எனது தந்தையைப் பின்பற்றினன்போலும். ஆகா! யாதொரு புகலிடமுமின்றி நகரைவிடுத்துச் செல்லும் துர்ப்பாக்கியனை மதிவதனனை வழிமறித்துப் போர்புரிய முயன்றனனே! ஆகா! அவனது பராக்கிரமம் எவ்வளவு விசேஷித்தது! ஐயோ! அவன் சிறிது கோபத்துடன் பொருதிருப்பனேல் மிக்க அருமையாய் ஊட்டி வளர்க்கப்பட்ட ஜெயபாலனது சரீரம் இந்நேரம் புழுக்களுக்கும் கழுகுகளுக்கும் மாதுரியமான பெருவிருந்தாயிருக்குமன்றோ,—ஏ புருஷோத்தமா! நீ ஏன் உனது நாயகனை விடுத்து வந்துவிட்டனை?"

புருஷோ—"அவருடைய கட்டளையின்வாறே வந்தேன். அன்னே! அவரு(ட)ன் யான் துறைமுகப்பட்டினம் வரை யிற்கூடத் தொடர்தற்கு என்னை விடுத்தாரில்லை. இக் கடிதங்களை உடனே கொண்டுபோய் உங்களிடம் கொடுத்துவிட்டு உங்களது ஏவலின்வாறு புரியுமாறு அனுப்பிவிட்டனர்."

சரசாங்கி—"இவன் எப்பொழுதும் மிக்க அபிமானமும், நன்றியுமுள்ள சேவகன். இனியும் இவன் அவ்வாறே பொழுதுபோக்கினன்பதெனது உறுதி."

புருஷோ—"மகாராஜ்யாரே! என்னைப்பற்றி நீங்கள் இவ்

---

உரம்=வலி இகலல்=சண்டை செய்தல் உம்பர்=விண்ணுலகம்.

வாறு நல்ல அபிப்பிராய மீந்ததற்கு யான் உங்களிடம் நன்றிபாராட்டற் குரியவன்''

சரசாங்கி—''சுந்தராங்கி! நேரமாகின்றது நாம செல்வோம்.''

சுந்தராங்கி—''அன்னமே! நீங்கள் கயைபுரிந்து முன்னர்ச செல்லுங்கள். இன்னும்போர் நாழிகையில யான் வருகின்றேன்,—புருஷோத்தமா! நீ உடனே உனது நாயகனைப் பின்பற்றிச சென்று அவர் மாககலத்திலேறும வரையில அவ நடனிருந்து திரும்பிவருவாய். விரைந்துசெல்.''

(புருஷோத்தமன் செல்லுதல்)

(சுந்தராங்கி பாடிக்கொண்டு செல்லுதல்.)

(பத்தாதே சகிகௌளை)

பாவி யானென்ன செய்வேன் பாதகியாயினேன் (பா)

(1) கேவலம் யானேன்—கீழ்மகளானேன்
காவலில் யானேயிருகக (பா)

(2) சோமனைவென்ற—சாமியை யென்று
பூமியில் யானே காணுவேன். (பா)

3-வது களம் (சீன்)—அரண்மனையின்
பின்புறத்திலுள்ள மைதானம்.

ஜெயபாலனும், அவன் தோழர்கள் அனுமந்தன்,
குணசேகரன் என்போரும சபாஷித்தல்.

ஜெயபாலன்—(அதட்டிய குரலில்) ''அடே அனுமந்தா! அடே குணசேகரா! நீங்கள் இதுவரையில் எங்கு சென்றிருந்தீர்கள்?''

அனுமந்தன்—(பணிவுடன்) ''மகாப்பிரபுவே! உங்களைத் தேடிக்கொண்டு சென்றனம்.''

ஜெயபாலன்—“ எங்கு தேடிச்சென்றீர் ?”

குணசேகரன்—“ பிரபுவே ! நீங்கள் இல்லாத விடத்தில் தேடிச் சென்றோம்.”

ஜெயபாலன்—(கோபத்துடன்) “ மூடர்காள் ! நானில்லாத விடத்தில் தேடுவதிற் பயனென்ன !”

அனுமந்தன்—“ நீங்கள் இரத்தமொழுகும் தேகத்துடனிருப்பதை இப்பொழுது நாங்கள் காண்பதே அதன் பயன்.”

குணசேகரன்—“ நீங்கள் அவ்விடத்திலில்லையென அறிந்தமையாற்றானிங்கு வந்தோம். மதிவதனனும் நீங்களும் போர்புரிதலைக் கண்டோம்.”

ஜெயபாலன்—“ ஆகா! நாங்கள் போர்புரிதலைக் கண்ட நீவிர் ஏன் உதவிக்கு வரவில்லை ? ”

அனுமந்தன்—(பணிவுடன்) “ மகாப்பிரபுவே! பிறர் காரியங்களில் தலையிடுதல் குற்றமென நீவிர் பலதடவைகளில் எங்களுக்கு உபதேசித் திருக்கின்றீர்க ளல்லவோ ! நிற்க, நீங்கள் எக்காரியம் புரிந்தாலும் அதில் குறுக்கிடாது பார்த்துக் கொண்டிருக்கக் கட்டளை யீந்தீரன்றோ. அதற்கு விரோதமாய்ச் செய்தல் நாயகத் துரோகமென்பது எங்களுக்குத் தெரியாதோ ! எங்களைப் பரீக்ஷிக்கின்றீர்போலும்.”

குணசேகரன்—“ பிரபுவே ! மதிவதனன் உங்களது பராக்கிரமத்திற்கு முன்னில்லானென்பது யாரறியா விஷயம்! நாம மூவரும் ஒன்றுகூடி அவனை வென்றோமென்பது உங்கள் சௌரியத்திற்கோர் பெருங் களங்கமன்றோ.’

ஜெயபாலன்—“ ஆமாம் ! மெத்த சந்தோஷம்.”

அனுமந்தன்—"யாவரும் மதிவதனனை நிகரற்ற வீரனெனக் கூறுகின்றனர். அவன் கோபமென்பதே யில்லாத பேதையாயன்றோ இருக்கின்றனன். அவன் இவ்வாறு சென்றதைப்பற்றி யானும் சந்தோஷிக்கின்றேன். ஆகா! மகாப்பிரபு! நீங்கள் வீராவேசத்துடன் போர் செய்தமையின் மேலங்கி முழுவதும் கிழிந்து உடம்பு முற்றும் இரத்தம் வெள்ளமா யோடுகின்றது. மேலங்கியை நீக்கிவிடுவதே நன்று. அசுத்தமான இரத்தம் அப்போதைக்கப்போது தேகத்தை விட்டு விலகுவது உசிதம்."

ஜெயபாலன்—"ஆம! நீ கூறியவாறே அங்கியை எடுத்து விடுகின்றேன். அவனை யான் அதிகமாய்க் காயப் படுத்தி விட்டேனே."

குணசேகரன்—"வீராவேசத்துடன் சண்டைசெய்த உங்களுக்கே இத்தனை காயங்க ளிருக்கையில் கடைசிவரையில் மிக்கப் பொறுமையுடன் போர்புரிந்த மதிவதனனுக்கு உங்களினும் அதிகம் காயமுண்டா யிருக்க வேண்டுமன்றோ."

அனுமந்தன்—"ஆமாம் அதுமெய்! உங்களது மேலங்கியில் கத்திவெட்டுப் பல விடங்களைத் துளைத்திருப்பதால் உங்கள் காயங்கள் வெளிக்குத் தெரிகின்றன. மதிவதனன் அங்கியில் ஓர் துளையும் இல்லை யாதலின் அவன் உடம்பிலுள்ள காயங்கள் வெளிக்குத்தெரிய வில்லை. உங்களது சிறந்த பராக்கிரமத்தினால் அவன் அங்கி துளைக்கப்படாது அவன் தேகம் மாத்திரம் சல்லடைக் கண்ணாயிற்று. இது எத்தகைய விந்தை! உங்கள் புஜபலத்தை என்னெனக் கூறுவது.'

ஜெயபாலன்—(சந்தோஷத்துடன்) "ஆகா! அரியதோழர்காள்! அந்த வஞ்சகன் என்னுடன் சமமாய் நிற்க முடியாது மிகத்துன்பமடைந்தனன்."

அனுமந்தன்—"ஆமாம உங்களை எதிர்த்து நிற்க முடியாமல் தான் உங்கள் முகத்தைநோக்கிப் பார்த்தனன். உங்களிடத்தில் பயந்து வேண்டிக்கொள்ளுமாறு அப்படி நெருங்கிவந்தான் போலும்."

ஜெயபாலன்—"ஆம்! யான் அதற்கு இடங்கொடுத்தேனில்லை அவனுக்கு முகங்கொடுத்திருப்பேனாயின் அவன் எனது பாதங்களில் விழுந்திருப்பன்."

குணசேகரன்—"ஒகோ! அதனாலேதான் நீங்கள் பின்புறத்தை அவனுக்கெதிரிற் காட்டினீர்களோ! அவ்வமயத்தில் அந்த விருந்தோர் விலக்கி விட்டனர். இல்லையேல்—"

ஜெயபாலன்—"ஆகா! அவர்கள் நடுவில் தலையிடாதிருப்பின் நன்று யிருந்திருக்கும்."

அனுமந்தன்—"உயிர்போயிருக்குமென்பதற்குச் சந்தேகமிலது. உங்கள் விசனங்களெல்லாம் முடிவடைந்திருக்கும்."

ஜெயபாலன்—"ஆகா! இத்தகைய செயலற்ற கோழையையே சுந்தராங்கி மணக்க விரும்புகின்றனளன்றி என்னிடம் வெறுப்பைப் புலப்படுத்துகின்றனளே! இதென்ன ஆச்சரியம்."

குணசேகரன்—"மனிதர் இறக்குந் தருணத்திலும் அவருக்கு உயிரைத்தரும் சஞ்சீவிபோன்ற சிறந்த மருந்துகள் கெட்ட சுவையையும் துர்நாற்றத்தையுமுடையனவாய்த் தோன்றுகின்றன வன்றோ. எது கெட்ட

தாய்த் தோன்றுகின்றதோ அதில் நன்மையாது. இவள் உங்களிடத்தில் வெறுப்பைக் காட்டினதால் உங்களிடத்திலேதான் மனத்திற்குள் காதலைக் கொண்டிருக்கவேண்டும். உங்கள் மேம்பாடு, சௌரியம் அழகு, புத்தி நுட்பம், முதலியவைகளைப்பற்றி அவள் அறியாதவளன்று. மதிவதனனுக்கும் உங்களுக்கும் ஓர் விஷயத்திலும் உவமையே யில்லை. நிற்க, மகளிர் தமது மனதைச் சுலபத்தில் வெளியிடுவதில்லை. எத்தகைய அரிய விஷயத்தையும் செய்யலாம். மாதரின் மனதை ஆழங்காண்பது யாவராலும் லாககாரியம். மனதில் ஒருவனை நினைப்பார். வெளியில் அவனை வெறுப்பதாய்த் தோற்றுவிக்குந்த தூஷணம் புரிவர். ஆதலின் மகாப்பிரபு! அவள் உங்களை எவ்வாறு இகழினும் மனந்தளராது மேன் மேலும் நெருங்கி உங்களது ஆற்றாமையைப் புலப்படுத்துவீர்களாயின், அவள் தான் செய்த கொடுமைகளைப் பற்றிக் கழிவிரக்கங் கொண்டு உங்கள் பொன்னடிகளில் வீழ்ந்து வணங்குவதுடன் தன்னையும் உங்களுக்கு அர்ப்பணம் செய்வாள்."

ஜெயபாலன்—"ஆமாம்! குணசேகரா? உனது புத்தி கூர்மையே கூர்மை! நீ கூறியதே உண்மை! அவளென்னை இகழினும், ஏளனம்புரியினும், அடிப்பினும், தாமரை மலர்போன்ற தனது பாதங்களைப் பிரயோகிப்பினும், யான் அவற்றைக் கவனியாது மேன் மேலும் எனது மோகத்தைப் புலப்படுத்துகின்றேன். இப்புண்களை அவள் காண்பளேல் என்னை மிக்க ஏளனம் புரிவள். ஆகா! இப்புண்க ளில்லாதிருப்பின் நன்றாயிருந்திருக்கும்."

அனுமந்தன்—“இத்தனை பெரியபுண்களிருந்தும் நீவிர் இறக்காது அவற்றின் கொடுமையைப் பொறுத்துக் கொண்டிருப்பதைக் கண்டு உங்கள் பராக்கிரமத்தை மிக்க வியப்பன். அவற்றின்மீது மருந்து முதலிய பிரயோகப் படுத்தின் மாத்திரமே இகழுவன். ஆதலின் சிகிச்சையின்றி யிருப்பின் அவனது வியப்பிற்கு அளவிராது.”

ஜெயபாலன்—(துன்புடன்) “உங்களைப் போன்ற தோழ ரிருக்க எனக்கு யாது குறையுளது. எக்காரியமும் கைகூடுத லெளிதன்றோ. வாருங்கள் எனது அந்தப் புரத்திற்குச்சென்று உண்டு பருகிச் சிறிது களைபாறு வோம்.”

(மூவரும் செல்லுதல்)

---

4—வது சீன்—சுந்தராங்கியின் அந்தப்புரம்.

புருஷோத்தமனும் சுந்தராங்கியும் வசனித்தல்.

சுந்தராங்கி.

(மஞ்சிதினமு நேடு)

பல்லவி

“சொந்தமெனவேயாடி சுகமாயிருந்தோமன்றோ (சொ)

அநுபல்லவி

எந்தை மொழியின்வாறு யினியனேயேகினாலும்
சிந்தை தனிலேநின்றாய் செயிரிலா மாணிக்கமே (சொ)

சரணம்

நின்னைப் பிரிந்த பின்னர் நிகரிலா நற்குணசீலா
துன்னும் பொருளனைத்தும் துதையிருளா யானதே
பன்னி யினது காதல் சென்னி மிசையதாக
மன்னன் துயரையீந்தான் மதிவதனா ஆவியே (சொ)

---

பன்னி = மனைவி சென்னி = தலை துதை = நெருங்கிய

(இராகம்—ஆனந்த பைரவி.)

புருஷோத்தம னேயுந்தன் பொருவிலாத் தலைவன்றீட்டும்
நிருபமேற் பாரின்றாயிற் கருணையா லொருவரீயு
மரிய பேருதவிதன்னை யலட்சியம் புரித்தற்றாகுங்
கரைதொடு நெடியனாயிற் கலந்தொரு மறிவையன்றே.

(வருத்தத்துடன்)—நன்றி மிக்க எனதரிய சேவகா! அடே! புருஷோத்தமா! ஐயோ! என்னடா செய்வேன். மதிவதனன் சென்றமுதல் எங்கு நோக்கினும் மதியில்லா இரவென்ன இருளாய்த் தோன்றுகின்றதே. அவன் தூர தேசத்திற்குச் சென்றுவிட்டதாகவே என் மனது நம்பிக்கை கொள்ளமாட்டேனென்கின்றது. பூஞ்சோலையிற் காணலாமோ, கல்விக் கழகத்திற் காணலாமோ, வேறு பிறவிடத்திற் காணலாமோ வெனப்பலவகையான பேதமையான எண்ணங்கள் என்னை வதைக்கின்றன. அவன் சென்று விட்டபோதிலும் என்மனதில் அவனது வடிவமே சதா சர்வதா தோன்றி மறையாது நின்று வருத்துகின்றது. ஆகா! திருமால் திருவிக்கிரமாவதார மெடுத்தபோது அவரது உருவம் மூவுலகத்தினை முற்றும் மூடியதுபோல, நீ கடற் றுறைமுகப்பட்டினம் வரையில் நீண்ட உருவத்தைப் பெறுவையேல் எவ்வளவு அனுகூலம்! ஏனெனில் மதிவதனன் எனக்குக் கடிதம் அனுப்புவனேல் அதைப் பெறுவதற்கு அங்கு ஒருவருமில்லாவிடின் பிறர் நமக்கு ஆபத்து வேளையிற் கருணையுடன் செய்யும் உதவியை வேண்டாமென அலட்சியம் புரிந்ததுபோலாமன்றே! நீ அவ்வாறு உருவெடுப்பையேல் இங்கிருந்தவாறே ஒவ்வொரு மரக்கலத்திலும் கடிதமுளதோவென அறிவையன்றே! ஆகா! இதென்ன

பொருவு=சமானம் தீட்டும்=எழுதும் ஏற்பார்=பெற்றுக் கொள்வோர் கரை=சமுத்திரக்கரை நெடியன்=நீண்டவன் கலம்= கப்பல்.

மடமையான பெண்ணே! இவைகளெல்லாம் பிறகு கேட்டும். அவன் உன்னிடம் கடைசியாய் எதைப்பற்றி உரையாடினன்."

புருஷோத்தமன்—"சுந்தராங்கி! சுந்தராங்கி யென்று பிதற்றிக்கொண்டே சென்றனர்."

சுந்தராங்கி—"தூரத்திற் சென்றபின்னர் போவதாய் ஜாடை காட்டினரோ?"

புருஷோத்தமன்—"ஆமாம், நெடிய தூரம் வரையில் தனது கைக்குட்டையை ஆட்டி அசைத்திட்டுக் கொண்டனர்."

சுந்தராங்கி—

(மாதாட பாராசேசோ)

"ஆகா நின்பாக்கியமே—யாருக்குவரும்

(1) யோகியரும் புரியா நோன்மைநீ நூற்றையோ
ஓகோ வுயிரற்றதோ ரற்பத்தானையே (ஆ)

(2) பாவியே னென்செய்வேன்—பதருமே பெருந்துறவி
ஜீவனுந் துணைவனை யினியெங்கு காணுவேன் (ஆ)

(3) நாதனே யவனென்று நம்பினேனே தெய்வம்
சோதனை செய்ததோ—சோருதென்னாவியே (ஆ)

ஐயோ! என்ன அந்தக் கைக்குட்டையின் பாக்கியம். அது என்னால் கொடுக்கப்பட்டது. ஆகா! அதற்குக்கிடைத்த பேரானந்த சுகம் எனக்கில்லையானதே! உயிரும் உணர்வுமற்ற அற்ப வஸ்துவாயிருப்பினும், யான் அக்குட்டையாய்ப் பிறந்திருப்பின், மகிவதனனது அருகிலேயே ஓயாது இருப்பேனன்றோ. அவ்வாறே மறைந்துவிட்டனரோ?"

---

தானை = குட்டை நோன்மை = தவம்.

புருஷோத்தமன்—"அவர் என்னைக் காணக்கூடிய வரையில் கப்பலின் மேல்தட்டில நின்றுகொண்டு இவ்வாறு தனது கைக்குட்டையையும் தலைப்பாகையையும் ஆட்டிக்கொண்டே சென்றனர். கப்பல் விரைந்து செல்லினும் அவரது உயிரும் மனமும் மாத்திரம் அதனுடன் செல்லாது இவ்விடத்திலேயே இருப்பதாய் அவர் செயல்கள் நன்றாய்ப் புலப்படுத்தின."

சுந்தராங்கி—

(மார்கழி மாதம் திருவாதிரைநாள்)

(1) மதிவதனாவுன்னைச் சதமெனவுன்னி
மகிழ்ந்தே னென்துரையே
நிதியைக் கண்டோரக் கண்டாங்கேயிழ
ந்தவோர் நிரப்போனென்ன நின்றேன் யான் (மதி)

(2) அருகினி லிருப்பதாய்த் தெரிகின்றா யாயினும்
அகத்தால் நினைப்பதன்றி
உருவை முன்னைக் காணாமலே யென்மனம்
உருகி யோய்ந்ததையோ (மதி)

(3) இனியனே யருகினில்-சிறியதோ ரோசை
எழுமே லுடல் நடுங்கி
ஏகியோன் சுந்தரன் வந்தனனோ வென்னச்
சிந்தித் தேமாந்து நின்றேன். (மதி)

(4) நோக்கி நோக்கி யென் நோக்குகள் நொந்திட
நைந்தே னழல மெழுகாய்
நோயைக் கொண்டேன் மனமாழ்கி நின்றேனொரு
நொடியும் நெடிதாய்த் தோணுதே. (மதி)

(5) நினைத்தவை யாவும் நிகழ்ந்தவை யனைத்தும்
கனவாய்க் காணுதையோ
நின்னைக் கண்ணுறக்கண் டானந்தமெய்திட
நினைத்து நினைத்து நெகிழ்ந்தேன் (மதி)

நோக்கு = கண்

(இராகம்-நாதநாமக்கிரியை)

சிறகுகளுடனே வேகப்பறவையாய்ப் பிறந்திட்டாலுந்
துறவிகள் ககனமேகுங் குளிகையை யளித்திட்டாலு
மறுவிலா மனத்தின்காற்றின் விசையுடற் கிருந்திட்டாலுங்
குறுகியோர் நொடியிலெந்த னுயிரினை யடைவேனன்றே.

அடே புருஷோத்தமா! யான் என்னடா செய்யப் போகின்றேன்! அவன் மறைந்துவிட்டதைக் கேட்டும் அவன் இங்கிருப்பதாகவே நினைப்புண்டாகின்றதன்றி, அவன் இங் கில்லை யென்பதையே என் மனது நம்பிக்கையாய்க் கொள்ள மாட்டேனென்கின்றதே! அவனது உருவம் எனதருகில் உட்கார்ந்திருப்பதாயும் என்னுடன்கூட நடந்துவருவதாயும் மனதிற்குத் தோன்றுகின்றதே யன்றி எனது கண்களுக்கு அவன் உருவம் புலப்படவில்லையே. யாதாயினும் காலடி முதலிய ஓசை கேட்குமேல் உடனே என்னுடம்பு திடுக்கிடு கின்றது. அவன்தான் வந்தனனோ வென்ன என மனம் பேதமைத் தனமாய் நினைக்கின்றது. நாற்புறமும் கண் களைப் பலமாய் விழித்து நோக்கி நோக்கி எனது கண்களும் கழுத்தும் பொறுக்கலாற்றாது நோகின்றன. ஐயோ மதி வதனன் என்னுடன் இனிமையாய் உரையாடியவைகளும், நாங்களிருவரும் புரிந்த விளையாடல்கள் யாவும, ஒன்றன் பின்னொன்றாய் மனதில் தோன்றினும் அவை கனவோ அன்றி உண்மையோவெனும் சந்தேகமே யுதிக்கின்றது. அடே! புருஷோத்தமா! இனி அவனைக் காண்பேனோ? ஆகா! யான் வேகமாய்ப் பறக்குமோர் பறவையாய் மாறுவேனாயில் உடனே அவனைத் தொடர்ந்து சென்றடைவேன். யாரா யினும் யோகிகள் தமது ககனக் குளிகையைக் கொடுப்பரே யாயினும், அல்லது மனதின் வேகமும், காற்றின் வேக மும் ஜடப்பொருளாகிய எனது உடம்பிற்கு உண்டாகுமா யின் ஓர் நொடியில் யான் அவனை அணுகிவிடுவேனன்றோ!"

புருஷோத்தமன்—"அன்னையினும் அன்புமிக்க அரசியே! வருந்தாதீர். இப்பூலோகத்தி னியல்பை நீவிர் அறியீரோ? ஒவ்வொருவரும் மாறி மாறிச் சிலகாலம் துன்பப்படுதலும் சிலகாலம் இன்ப மனுபவித்தலும் இயற்கையாயுளது. பிறப்பு முதல் இறப்புவரை ஓயாது துன்பத்தால் வருந்துவோருமிலர். அவ்வாறே ஆயுட் காலமுற்றும் இன்பமே அனுபவிப்போருமிலர். செல்வம் முதலிய சௌகரியங்களை ஏராளமாய்ப் பெற்றவர் புத்திரரில்லையென்றும், தேகவியாதிகளினாலும், திருடர், பொருமையுடையோர் முதலியோரின் பயத்தினாலும், மனைவியாகூலத்தினாலும் பீதியினாலும் சஞ்சலப் பட்டவண்ண மிருக்கின்றனர். பொருளற்றவர் தினம் கூலியின்பொருட்டுத் தமது தேகத்தை வருத்திச் சாராய்ப் பிழிந்து கஷ்டப்படுகின்றனர். இவர் இரவிலே தனவந்தர்களுக்குள்ள கவலைகளையின்றி மனத்திருப்தியுடன் பேரானந்தபோக மனுபவிக்கின்றனர். ஆதலின் ஒவ்வொருவருக்கும் ஓர்விதத்தி லின்பமுண்டாயின் மற்றோர்விதத்தி லிடுக்கணுண்டு. நீவிர் இப்பொழுது துன்பமடைவது இனியெய்தும் சுகத்திற்கு முன்னறி குறியேயன்றி வேறிலது. உலகத்தில ஒவ்வொருவருக்கும தினந்தினம் சம்பவிக்கும் இவ்விஷயத்தைப் பற்றிக் கவலைப்படவேண்டாம் தாயே!"

சுந்தராங்கி—"அடே நற்குணமுள்ள புருஷோத்தமா! உனது எஜமானன் எப்பொழுது கடிதமெழுதுவதாய்க் கூறினார்."

புருஷோத்தமன்—"இத் துறைமுகத்திற்கு வரும் அடுத்த கப்பலில் அனுப்புவதாய் உறுதி செய்தினர்."

சுந்தராங்கி.

(இராகம்-எதுகுல காம்போதி.)

விடைதனைக் கொண்டேனில்லை யியம்புவ மொழிந்தேனில்லை
கடவுளை யிடைவிடாது கனிவுடன் றுதிக்குமாறும்
மடவோரிற்றீயோர் வஞ்சத்தொடர் பினை யொருவுமாறுங்
கடிதங்கள் விடுக்குமாறுங் கழறிடமனது கொண்டேன்

சிந்தையில் நினைத்தயாவுஞ் செப்பிடா முன்னரெந்தன்
றந்தை வந்தெம்மைச் சீறச்சண்ட மாருதமோர்காவின்
கந்தமார் முகைகள் பூவாயலரு முன்னுகுத்தல்போலப்
புந்தியிற் கொண்டயாவும் புகலொணாதொழிந்த தன்றே.

ஐயோ! கடைசியாய்ப் பிரிவதற்கு முன் விடைகூடப் பெறக்கூடாமற் போயிற்றே. ஆகா! எத்தனை விஷயங்களைப்பற்றி அவனிடம் வசனிக்க நினைத்தேன். அவ்வெண்ணம் முற்றும் அவமாயிற்றே. கலிங்க தேசத்திற்குச் சென்ற பின்னர் ஆங்குள்ள வஞ்சகர்களான மங்கையரின் மோகவலையிற் படாது தன்னைப் பாதுகாத்துக்கொள்ளுமாறு கூற மிக்க ஆவல் கொண்டிருந்தேன். அதினும் சிறந்த வேறோர் விஷயத்தையும் தெரிவிக்க முடியாமற் போயிற்று. எங்கிருப்பினும் எத்தகைய துன்பம் வரினும், இன்பமே யனுபவிப்பினும் சதா சர்வதா கடவுளையும் அவரது பெருமைகளையும் மனனம் செய்யுமாறும் சொல்லாமற் போனேனே. ஆகா! என் செய்வேன்! மனதில் நினைத்தவற்றை வெளியிடு முன்னர் எனது தாதை திடீரெனத் தோன்றிக் கடுங்கோபத்தைப் புலப்படுத்தி வலிய சண்டமாருதமானது ஓர் பூஞ்சோலையி லிருக்கும் அரும்புகளை மலரவிடாது கீழேவீழ்த்தி விடுவதைப்போல என் மனதி

---

மடவோர் = பெண்கள் தொடர்பு = சினேகம் ஒருவுதல் = விலக்குதல். காவின் = சோலையின். கந்தமார் = வாசனை பொருந்திய. முகைகள் = மொட்டுகள். உகுத்தல் = கீழேவீழ்த்தி விடுதல்.

லெழுந்தவை முழுவதையாவாறு புரிந்து மதிவதனனை அனுப்பி விட்டனா. என்னசெய்வேன்.! புருஷோத்தமா!"

(ஓர் தாதிவருதல்.)

தாதி—"சிறந்த எஜமாட்டி! சரசாங்கி அன்னையார் உங்களது வரவை எதிர்பார்த்திருப்பதாய்த் தெரிவித்தனர்."

சுந்தராங்கி—"ஆகா! அப்படியா!—அப்பா! புருஷோத்தமா? யான முன்னர் கூறிய காரியங்களை முடிப்பாய்—நான் சரசாங்கி யிடத்திற்குச் சென்று வருகின்றேன்"

புருஷோத்தமன்—"கட்டளைப்படியே செய்கின்றேன் அரசியே!"

(புருஷோத்தமன் சென்று விடுதல்)

சுந்தராங்கி—"அடி! தாதி! நாம் செல்லலாமா?"

தாதி—"தங்கள் சித்தம்"

"சுந்தராங்கி.

(காவடிச்சிந்து பூமிமெச்சிடு.)

(1) மாரன்வெட்கிடுமென் னுதனைப்போய்மனம் நாடுதே
மகிழ்வோடுதே காலம்—நீடுதே யொரு
வஞ்சியான வென்னை
சஞ்சலமே வந்து—கூடுதே.

(2) ஆசையானபெரும் பாசத்தா லென்மனம் நோகுதே
கறங்காகுதே யுயிர்—போகுதே யொரு
கணமும் யானவனைக்
காணலாமோ வென்ன—வேகுதே.

(3) தாதையானவர்கள் தீதுசெய்திடலும் விந்தையே
ஆகா தந்தையே யிது—நிந்தையே யெந்த
னுயிரைப் போன்றவனைப்
போகச் செய்துதுன்ப மீந்தையே.

(இருவரும் செல்லுதல்.)

5-வது சீன்—கலிங்க தேசத்தில் பலராமன் மாளிகை. பலராமன், அவனது நண்பன் சூரசேனன், குந்தலதேசத்தானொருவன், மற்று மிரு நண்பர்கள் சம்பாஷணை புரிதல்.

சூரசேனன்—"இதற்கு முன்யானவனை மாளவதேசத்திலேயே பார்த்திருக்கிறேன். அவன் அப்பொழுது சர்வ சாதாரணனா யிருந்தனன். நகரத்தினரோ அவனிடத்திற் பல விசேஷகுணங்க ளிருப்பதாய் அவனை ஆகாயம் வரையிற் புகழ்ந்தனர். யான் அவனிடத்தில் யாதோர் விசேஷத்தையும் கண்டேனில்லை. இப்பொழுதும் அவ்வாறே அவனைப் புகழ்ந்து பேசுகின்றனராகலின் அவனது தன்மையில் யாதொரு மாறுபாடு மிராதென நினைக்கின்றேன்"

பலராமன்—"நண்பா! நீ அவனைக்கண்டபோது அவன் இப்போதிருப்பதைப்போல அவ்வளவு ஆழ்ந்த கல்வி முதிர்ச்சி, நற்குணம், அழகு, முதலியவை நிரம்பப்பெற்றிருந்தானில்லை. இப்பொழுது அவனைக் காணுவையேல் அதன் உண்மை நன்கு புலப்படும்."

குந்தலன்—"அவனை சமீபத்தில் யான் குந்தல தேசத்திற் கண்டேன். அங்குள்ள பலர் சூரிய னொளியைப்பார்த்துக் கண்கள் மழுங்குவதுபோல இவனொளியைக் கண்டு திகைத்துப் பிரமித்தனர்."

சூரசேனன்—"அரசனது புத்திரியால் காதலிக்கப் படுகின்றனனாதலினாலேயோ. இவனிடத்திற் பல மேம்பாடுக ளிருக்கவேண்டுமென்பது ஜனங்களின் நம்பிக்கை. அவள் எவ்விஷயத்திலும் மிக்கச் சிறப்பினையுடையவளாதலின் அவளது பிரகாசம் அவனிடத்தும் பிரதிபிம்பித்துத் தோன்றுகின்றதென்பதே எனதுறுதி."

குந்தலன்—“ஆமாம்! இவனை நகரைவிட்டுத் துரத்திய சங்கதி—”

சூரசேனன்—“அரசனது புத்திரியின்மீது அபிமான முள்ளோர் இவன் பிரிந்து போவதைப் பற்றி ஓலமிட்டழு கின்றனரன்றோ, அவா இவனது குணவிசேஷங்களைப் பற்றிய பிரமாதமாய்ப் புகழுதற்குக் கடமைபபட்டவரே. ஏனெனில் அவ்வாறு புகழாவிடின் அவள் யாதோர் யோக்கியதையு மற்ற யாசகனை மணக்கு மாறு வரித்துக்கொண்டதைப்பற்றி யாரேனும் அவளை தூஷணைபுரிவரேல், அது எங்கும் பரவி அவளுக்கு யோக்கியதைக் குறைவை யுண்டாக்குமன்றோ. அவள் செய்தது சரியான விஷயமென்பதை உறுதிபபடுத்துமாறே, அவளது சாரார் இவ்வாறு கூறிக்கொண்டலை கின்றனர். அதிருக்கட்டும், பலராமா. அவன் உன்னோடு வசிக்குமாறு வருவதென்னே? அவனுக்கும உனக்கும எவ்வாறு நட்புண்டாயிற்று?”

பலராமன்—“அவன் தகப்பனும் யானும் ஓரிடத்தில் சேனைத்தலைவரா யிருந்தோம. அப்பொழுது அவன் எனதுயிரைப பலதடவைகளிற காப்பாற்றி யிருக்கின் றனன்.”

(மதிவதனன் வருதல்.)

“ஆகா! அவன் மாளவதேசத்தி லிருந்து அதோ வந்துவிட்டனன். அவனிடத்தில நீங்கள் யாவரும மிக்க மரியாதையாய் நடந்து கொள்ளுங்கள். அவனது நற்குணங் களை இன்னின்னதென யான் கூறுவதவசியமிலது? நீங் கள் இனி அனுபோவத்திலேயே காண்பீர்.”

மதிவதனன்.

(பாரோ பிரியா முகவதோரா.)

"பேடே சுந்தராங்கி நின்னைத்
தேடுதே யென்னுவி வாடி (பே)

(1) போகப்போக வெந்தன்றுயர் பொங்கி வீங்குதே
ஆகாயென்ன யென்விதியே ஐயோ யெந்நாள் காண்ப
தினி] (பே)

(2) கணமு மெந்தனைக் காணுவிடில் கடுகித் தேடுவாய்
காதலிநீ யென்செய்வாயோ பேதையே பிணையே தேனே(பே)

(3) இதுவே யெந்தன் நண்பன்மனை யேகியேயினி
இருப்பேனிங்கு காலமுன்னி யென்னபாவமோ புரிந்தேன்
(பே)

இது தான் எனது தந்தையின் நண்பனது மாளிகை. ஆகா, அவனும் சிலரும அதோ இருக்கின்றனர்."

பலராமன்—(சந்தோஷத்துடன்) "மதிவதனா வருவாய். இவர்கள் யாவரும எனது நண்பர்கள். உன்னைக்காண மெத்த சந்தோஷமாயிறறு. நாம நண்பராய் இருக்க நேர்நதது எனது பாக்கியமே."

மதிவதனன்—(உட்கார்ந்துகொண்டு) "எனக்கும மெத்த ஆனநதமே."

குந்தலன்—(மதிவதனனை நோக்கி) "ஐயா! நாமிருவரும் குந்தல தேசததிலோர் முறை சநதித்தது உங்களுக்கு ஞாபகமிருக்கிறதோ?"

மதிவதனன்—"ஆம. நன்றாய் ஞாபகமிருக்கின்றது. அப பொழுது நீா புரிநத உதவியையும் மறநதேனில்லை. அநநன்றியை இனி மறபபவனுமன்று."

குந்தலன்—"ஐயா! யான்செய்த அற்பக் காரியத்தை மிக் கப் பெரிய உதவியாய்க் கூறுகின்றீர். எங்கள் தேசத்

தானையும் உங்களையும் யான் கோபத்தைத் தீர்த்து இராஜியாக்கிவிட்ட விஷயம் என் மனதிற்குத் திருப்தியாயிருக்கின்றது. [illegible] விஷயத்தின் பொருட்டு நீங்களிருவரும் அவ்வளவு கடுமையான பூசல்புரிந்து உயிரிழக்கும் நிலைமைக்கு வந்தது மிகவும் பரிதாபகரமான விஷயமாயிருக்கின்றது.''

மதிவதனன்—''அப்பொழுது யான் நிகழ்ச்சியறியேன். பிறர் கூறுவதினால் கற்பிக்கை கொண்டு [illegible] வாது புரிந்தேன். இப்பொழுதோ அவ்விஷயங்களை யான் அனுபோகத்திலேயே யறிகின்றமையின், யான் புரிந்த வாது சரியானதென்பதே யுறுதி.''

குந்தலன்—''நீவிர் வாதித்த விஷயம் உண்மையாயிருக்கலாம் எனினும், அதற்காக நீங்களிருவரும் வாளுங் கையுமாய்ப் போர்புரியவாரம்பித்தீர்கள். அதனால் உங்களிருவருக்கேனும் அன்றி ஒருவருக்காயினும் உயிர் போயிருத்தல் சம்பவித்திருக்குமன்றோ.''

சூரசேனன்—''நீங்களிருவரும் சம்பாஷிக்கும் விஷயம் எதைப்பற்றி யென்பதை யறியக்கூடவில்லை. அதை எங்களுக்குத் தெரிவிக்கலாமோ ?''

குந்தலன்—''அது யாவருக்கும் தெரிந்த விஷயமன்றி இரகசியமானதன்று. நேற்றிரவு நாம் ஒவ்வொருவரும் அவரவரது தேசத்து மங்கையரைப்பற்றிப் புகழ்ந்து விசேஷித்துப் பேசியதுபோலவே, இவர்களது வாதுமுண்டாயிற்று. அப்பொழுது இவர் தனது தேசத்தரசனது புத்திரியைப் பற்றிப் புகழ்ந்து பேசினார். குந்தல தேசத்திலுள்ள எத்தகைய மேம்பட்ட மகளிரினும் அவள், கட்டழகு, கற்பு, புத்திநுட்பம், பரிசுத்தம், நிலைபெற்ற நற்குணம், பிறர்க்கிடாததர மனோ

வுறுதி முதலியவற்றில் மிக்க விசேஷித்தவளென உறுதியாய்க் கூறினர். அதிலிருந்து பெருத்த வாத முண்டாயிற்று."

சூரசேனன்—(ஏளனமாய்) "அத்தகைய மங்கை இவ்வுலகத் திலேயே யில்லையென்பது நிச்சயம். அதற்குப்பின் இவரே அதை அநுபோகத்தில் அறிந்திருப்பர்."

மதிவதனன்—"இல்லை இல்லை. அவள் இவ்வுலகத்தில் உயிரு டனிருப்பவளே. யான் முன்கொண்டிருந்த அபிப் பிராயம் உறுதியாயிருந்தேயன்றி அதை மாற்றுதற்கு யாதொரு முகாந்திரமு முண்டாகவில்லை."

சூரசேனன்—"அவள் எவ்வளவு மேம்பட்டவளென்று நீர் நினைப்பினும் எமது கலிங்க தேசத்து மாதருக்கு அவள் ஒருபோதும் ஈடாகமாட்டாள். உம்முடன் அவள் இளமைப்பருவந் தொட்டு சதா சாவதாவிட்டுப் பிரி யாததோழியாயிருந்தமையின், அவள் உமக்கு விசேஷ மாய்த் தோன்றுகின்றனள். இத்தேசத்திய மங்கை யரை நீவிர் கண்டிருப்பீரேல் இவ்வாறு உறுதி கூற மாட்டீர்."

மதிவதனன்—"இல்லை யில்லை. அவள்மீது கொண்டகாதலி ஞற் கண்ணிழந்து யான் அவளை இவ்வாறு புகழ்ந்தே னில்லை. உண்மையில் அவளிடத்துள்ள சிறப்பினுலே யே யான் அவளை மேம்பட்டவளாய் மதிக்கின்றேன்."

சூரசேனன்—"அவள் யாரைக்காட்டினும் மேம்பட்டவள்?"

மதிவதனன்—"இவ்வுலகத்திலுள்ள மங்கையர் அனைவரி லும் மேம்பட்டவள்."

சூரசேனன்—"அத்தகைய மங்கை பூமியிலேயே இருக்க மாட்டாள். அல்லது நீவிர்கூறுவது அவளது உண்மை யோக்கியதைக்கு மிஞ்சியதாயிருக்கவேண்டும்."

மதிவதனன் :—

(இராகம்—மோகனம்.)

சரியிலாமொழியே தந்தீர் தரணியை மகிழ்ந்த வேந்த
ரரிய நன்கொடையா யீவர் பெறலரும் நிதியுண்டாயின்
விரிந்த யிவ்வுலகு தன்னை விலையினுற் கோடலாகு
மரிவையை யாகாதீச னருளினுளளித்தபேறும்.

ஐயா ! நீர் கூறியது முற்றும் சரியில்லா விஷயம். உலகத்திய அரசர் ஒருவரிடமும் அரிய பெரியவைகளைக் கண்டு மனமகிழ்வரேல் இவ்வுலகத்தையே இறைமாறிவிடுவர். அன்றி ஒருவனிடத்தில் பெரிய நிதிக்கு வியல் உண்டாகுமேல் இவ்வுலகத்தை விலைக்கும் வாங்கிவிடலாம். விலை மதிப்பற்ற இரமங்கை அவ்வாறு கிடைக்கக் கூடியவளன்று. இது கடவுளின் இனிய கருணையின் பயனாய்க் கிடைத்த பாக்கியமேயன்றி வேறில்லது."

சூரசேனன்—" கடவுளால் அப்பாக்கியம் உமக்குக் கிடைத்து விட்டது போலும் ?"

மதிவதனன் :—" ஈசனது கருணையிருப்பின் அவள் எனக்குக் கிடைப்பளென்பது உறுதியே."

சூரசேனன்:— (நந்தன் சரித்திரம்—பழன மருங்கணையும்)

(1) விந்தையே நீர் கூறுகின்றீ—ருயர்
விண்ணி லில்லையிது மண்ணிலில்லை

(2) உமதே யெனும் பெயரே—யவ
ளூரினிற் செய்வதை யாரறிவார்

(3) மாலோ னிலக்குமியை—யென்றும்
மார்பினில் வைத்தது மையத்தினுல்

(4) அரனே வுயர் சங்கரியைப்—பாதி
யங்கத்தி லேற்றது சங்கையினுல்

---

கோடல்=கொள்ளுதல். நிதி=திரவியம். அரிவை=பெண்.
மாலோன்=விஷ்ணு. ஐயம்=சந்தேகம். சங்கை=சந்தேகம்.

(5) அயனோ கலைமகளோ—நாவி
லயிர்த்தாச சுமந்ததை யாரறியார்

(6) இமையோர் நிலைமையிது—வாக
விக்நில மங்கைய ரென்னசெய்யார்

(7) பிறதேயப் பறவைபல—வொரு
துறையிற் பருகுதல் தொன்மையன்றோ

(8) பெடையோ ருறுதியில்லா—ரவர்
பேதைமையே யுருவாக வந்தார்

(9) எதிரே யிருப்பவர்பால்—மாத
ரிசகை கொள்வார் தம்மைமெச்சிடிலே. (வி)

ஐயா ! அவள் உமக்கே கிடைக்கலாம். பெயர் மாத்திரம் உமது மனையாட்டி யென்பதைப்பற்றி யாதொரு ஆக்ஷேபணையுமில்லை. பேதைமை யென்பது மாதர்க்கணிகல மென்பதை யறியீரோ போலும். ஓர் குளத்தில் பற்பலவிடத்திலுள்ள பறவைகளும் வந்து நீர் பருகுகின்றதன்றோ. அவ்வாறே மகளிர் விஷயமும். மிக்க தந்திரியும் அழகனுமான ஒருவன் அவர்களிடத்தில் நெருங்கிச் சிலநாட்கள் பழகுவனேல் எத்தகைய உறுதியான மங்கையர் மனதையும் மாற்றுதலரிதாமோ ! ஆதலின் நீவிர் இவ்வணங்கைப் பற்றி இவ்வாறு கூறுவது சரியல்ல."

மதிவதனன்:—"அவளது மனதைக் கவரக்கூடிய அத்தகைய சிறப்பினன் உமது கலிங்க தேசத்திலேயே இலனென்பதுறுதி"

பலராமன்:—"நண்பர்காள் ! இந்த விவாதத்தை இத்துடன் நிறுத்தி விடுங்கள். போதும்."

மதிவதனன்:—"விவாதம் புரியவேண்டு மென்னுமவா எனக்

---

அயன்=பிர்மா. அயிர்த்து=சந்தேகித்து, இமையோர்=தேவர். பெடையோர்=பெண்கள்.

கில்லை. இவர் தடக்கத்திலிருந்தே ஆக்ஷேபித்தலால் யானும வாதிக்க முயன்றேன்."

சூரசேனன்:—" ஓர் நாழிகை அவளுடன் உரையாடுவேனை யாயின் யான் அம்மங்கையை வசீகரப்படுத்தி என்மீது காதல் கொள்ளுமாறு செய்து விடுவேன். அவளிடத்திற்குச் சென்று உரையாடக் கூடிய சந்தர்ப்பமுண்டாயின் யான் அவ்வாறு புரிவது நிச்சயம்."

மதிவதனன்:—" உம்மால் அக்காரியம் ஒருபோதும் முடியாது "

சூரசேனன்:—"அவளை மாத்திரமன்று இன்னம் யாராயிருப்பினும் ஓர் நொடியில் வென்று விடுவேன். ஓர் இலக்ஷம் பவுன் விலைமதிப்புள்ள எனது ஆஸ்தி முழுவதையும் பந்தையம் வைக்கின்றேன். அதற்குச் சம்மதமாயின் இப்பொழுதே செல்கின்றேன்."

மதிவதனன்:—" அங்கு செல்லுவீரேல் உமது முரட்டுத் தைரியத்திற்குத் தக்கவாறு பிராயச்சித்தம் பெறுவீர். நீர் உமதரிய உயிருடன் திரும்பிக் கலிங்கதேசம் வருவதில்லை "

பலராமன்:—" எனதரிய நண்பர்காள் ! இவ் விவாதத்தை தயவுசெய்து இத்துடன் நிறுத்தி விடுங்கள். திடீரெனத் தோன்றிய இவ்வாதம் திடீரென இல்லை யாகட்டும். நீங்களிருவரும் நண்பரா யிருங்கள்."

மதிவதனன்—" நமது நண்பர் கூறிக்கொள்வது வீண் புகழ்ழ யொழிய அவரால இக்காரியத்தை நிறைவேற்ற ஒருபோதும் ஏலாது.

சூரசேனன்—" என்னாலாகுமென்பதைத் திரும்பவும் உறுதியாய்க் கூறுகின்றேன். உமது கைவிரலிலுள்ள வைர

மோதிரத்தை மாத்திரம் யான் சென்று வரும்வரையில் இரவலாய்க் கொடுப்பீரேல் இக்காரியம் முடிந்ததே."

மதிவதனன்—"ஆஹா! மோதிரமா? யான் உயிருள்ளளவும் அதை யாரிடத்தும் கொடுக்கக் கூடாதென்றும் உறுதியின் பேரில் அவளால் கொடுக்கப்பட்டதன்றோ! அதை மாத்திரம் கொடேன்."

சூரசேனன்—"ஆஹா! நன்றாயிற்று! பார்த்தீர்களா? மோதிரத்தைக் கேட்டவுடன் இவர் மனதில் அச்சம் பிறந்தது. இதை யான் கொண்டு போவேனாயின் அவளை வென்று விடுவேனென நினைத்துப் பீதி கொண்டீர் போலும். அவள் உறுதியான மனதையுடையவளாயிருப்பாளேல் இம்மோதிரத்தை என்னிடம் கொடுப்பதினால் என்ன தீது சம்பவிக்கப் போகின்றது? உமது அச்சத்தினின்றே அவளது உண்மைத் தன்மை நன்றாய் வெளியாய் விட்டது."

மதிவதனன்—"யான் அதற்காக அஞ்சினேனில்லை. அவளுக்கு வாக்களித்ததை மீறவேண்டுமேயென நினைத்தே அவ்வாறு கூறினேன். எனினும் பாதகமில்லை. இம்மோதிரத்தை இதோ கொடுக்கின்றேன். நீர் அங்கு சென்று கூறியவாறு முடித்து வருதல் நிச்சயந்தானே?"

சூரசேனன்—"மெத்த சந்தோஷம். அதைக் கொடுப்பீர். யான் சென்று அவளுடன் உரையாடி அவளை என் வசப்படுத்திக் கொண்டதற்குப் போதுமான அடையாளமோ சான்றோ கொண்டு வருகின்றேன். இல்லையேல் எனது பொருள் முழுதும் உம்முடையதே. இம்மோதிரத்தையும் திருப்பிக்கொடுத்து விடுகின்றேன்.

அவளிடத்திற் சென்று சௌனிக்கற்கு மாத்திரம் ஓர் சிறிய கடிதம் நீர் எழுதிக் கொடுக்கவேண்டும்."

மதிவதனன்—"அப்படியே யாகட்டும். இவைகளுக்கு யான் சம்மதிக்கின்றேன்.—இவ்விஷயத்தை நண்பர் யாவரும் நன்றாய் அறிந்திருங்கள்.——அவளை வென்றதாய் நீர் சான்று கொணருவீரேல் அதன் பின்னர் நீவிர் எனக்கு விரோதியன்று. அவளும் எனக்குரியவளல்லள். தோற்று வருவீராயின் நீர் என்னோடு உமது வாளுடன் சமப்போர் புரியவேண்டும் இது சம்மதமா?"

சூரசேனன்—"அவ்வாறே சம்மதிக்கின்றேன்.——நண்பர்காள்! இவ்விஷயத்தை நன்றாய் உணர்ந்திருங்கள்.—மோதிரத்தையும் கடிதத்தையும் தருவீர்."

மதிவதனன்—"இதோ தருகின்றேன்."

(மதிவதனன் ஓர் கடிதமெழுதி அதையும் மோதிரத்தையும் கொடுத்தல். பெற்றுக்கொண்டு சூரசேனன் செல்லுதல்)

## VI. வது சீன் சரசாங்கியின் அந்தப்புரம்.

சரசாங்கி, வாசுதேவன் என்னும் வைத்தியன், தாதிகள் முதலியோரிருத்தல்.

சரசாங்கி—"அடி! தாதி மோகனா! புருஷோத்தமனிடஞ் சென்று சுந்தராங்கி யறியாவாறு அவனை இங்கழைத்து வா!"

மோகனா—"கட்டளையின் வண்ணம் செய்கின்றேன் மகாராணியாரே!" (தாதி சென்று விடுதல்)

---

சான்று = சாக

சரசாங்கி:—

இராகம் - கானடா

மருத்துவர்மணியே சீரார் வசுதேவக் குரவாசால
விரிந்த நின்னறிவினோடு வித்தையின்றி றனிற்பாகி
தெரிந்தனேன் விபுதையானேன் சிறுகாநின்னபிமானத்தால்
விரும்பிய விஷத்தின் றன்மைவிளம்பி நீசிறிதிவாயே.

மருத்துவர் தலைவனான வாசுதேவா! என் மீது நீ கொண்ட குறைவிலா அன்பின் பயனால் யான் உனது ஆழ்ந்த வித்தை மந்திரசி முதலியவற்றில் அனேகமாய் அரைப்பாகம் கற்று விட்டேனன்றோ. விஷங்களின் தன்மைகளை யறிய விரும்பி அவற்றிற் சில கொள்ளுமாறு கேட்டுக் கொண்ட வண்ணம் புரிந்தனையா?"

வாசுதேவன்.—

இராகம் - கல்யாணி.

அன்னையே யரசியாரே யறிவினிற் சிறந்தமேதை
மன்னவனுயிரைப்போன்ற மனைவியா மம்மை நீவிர்
சொன்னசொற் கிரண்டு முண்டோ துணிவரோ பணியைமீற
வென்னினு மண்பாலொன்று வியம்பிட விடையீவீரே.

சிறந்த அரசியாரே! இப்பூமண்டலத்தைப் பாலிப் போனான வேந்தனது உயிரைப் போன்ற அவரது மகாராணியாரான உங்களது கட்டளைக்கு மாறாய் நடத்தலுமுண்டோ! நீவிர் ஓர் காரியம் ஆகவேண்டுமென்னப் பணிப்பீராயின் அது முடிந்ததே. எனது குழந்தைப் பருவமுதல் இவ்வரண்மனையின் அபிமானத்தினாலும் அன்னத்தினாலும் யான் வளர்ந்தவனாதலின் முக்கியமான ஓர் விஷயத்தைத் தெரிவிக்கக் கடமைப் பட்டவனா யிருக்கின்றேன். அதைக் கூறுவதற்கு உத்திரவளிப்பீர்களாயின் தெரிவிக்கின்றேன்."

---

விபுதை = புத்திசாலி.

சரசாங்கி.—"என்னதெரிவி."

வாசுதேவன்:—

(இராகம்—சகானு.)

எல்லையில் தேயவேந்தற் கிணைசொலு மரசியாதல்
தோல்வினையனேக கோடித்தொகைகளின் பயனே யன்றோ
கொல்லலை நினைப்பீராயிற் கொடிய தீவினையே யஃது
புல்லவர் செயலேயாகும் புகுத்திடும் நரகந்தேற்றம்.

சிறந்த அரசியாரே விஷத்திற் சிறிது கொடுக்குமாறு நீவிர் கேட்பது என் மனதிற்கு சந்தேகமா யிருக்கின்றது. இதை உண்போர் இறத்தல் நிச்சயமன்றோ. இப்பூமண்டலத்தை முற்றும் ஆளும் மன்னனுக்குச் சமமாகச் சொல்லத்தகுந்த அவனது மனைவி யாதல் முன் ஜென்மத்திற் செய்த அனேக கோடி நல்வினைகளின் பயனன்றோ. அத்தகைய மேம்பட்ட தானத்தி லிருப்பவர், இவ்விஷயம் புரிய நினைத்தல் அழகோ? கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட எத்தகைய ஜீவனையும் வதைத்தல் கொடிய பாபமல்லவோ! அவ்வாறு புரிதல் மீளா நரகத்திற் கன்றோ ஆளாக்கும். எங்களைப் போன்ற வைத்தியரது கடன் வருந்தும் மாந்தரைப்பிணியினின்று நிவர்த்திப்பதன்றோ. அங்ஙன மிருக்க விஷத்தைக் கொடுத்துக் கொல்வித்தல் எங்கள் தொழிலாமோ? ஆதலின் இதற்கென்மனம் சம்மதிக்கவில்லை. விஷத்தை எதற்காகக் கேட்கின்றீர்கள்?"

---

தேற்றம்=நிச்சயம்.

சரசாங்கி:—

இராகம் ஆனந்தபைரவி - தாளம ஆதி.

(வழிவிடப்போன அத்திரி)

பல்லவி

விந்தையே யுந்தன்மொழி மிகு புகழ்வாசுதேவா
வியந்தேனென்ன சங்கையே (வி)

அனுபல்லவி

வந்தநாள் முதல்நின்று வகை வகையான பல
மருந்துகள் பயிற்றினாய் மனதை நன்றாயுணர்ந்தாய் (வி)

சரணம்

மனிதர் பெறும்பலவாம் பிணிகளைச் சகியாமல்
மனது நொந்தனே னென்றுலாவயரைச சிலரின்
துனியை விலக்கிவோன் றுணிந்த னனரிய யிவ்
வினையை யானேற்றனன் விலக்கினேன் பலர்பிணி
கனிமன வனிதையர் நினைவரோ கொன்றிட
மனதரிற் பதரென நினைசதையோ வெந்தனை (வி)

இராகம்—ஆனந்த பைரவி.

கற்றனேன் வருந்தி யாவும மற்றவர் பொருட்டேயன்றோ
முற்றவும் பயிலாயிதனை முடியுமே விபத்தாய் தேற்றம்
சொற்றிடு மியந்தனை நீந்து மாற்றிடு மருந்தின் றன்மை
கற்றிட நினைந்தேனன்றிச் செற்றிடக் கருதலுண்டோ !

ஆகா ! வாசுதேவா ? இதென்ன ஆச்சரியம ! உனது சந்தேகம மிக்க வியப்பைத் தருகின்றது மனிதர் நோயினாலடைந்த துன்பத்தைக்கண்டு மனம சகியாது என்றுலேன்ற வரையில் சிலரின் அவஸ்தையையாயினும் விலக்கவேண்டுமென்னும் நலல உத்தேசத்துடன் உன்னிடம் அநேக மருந்துகளைக்கற்று அவற்றைப பிர

துனை = துன்பம. வனிதை = பெண்.
சொற்றிடு = சொன்ன செற்றிட = கொல்ல.

யோகித்துவந்ததை யறிந்திருந்தும் இத்தகைய தீய காரி
யத்தை யான் செய்யக்கருதியதாய் நீ நினைத்தது பெரி
தும் என்மனத்தை வருத்துகின்றது. பிறரைக்கொல்வதி
னும் பாவத்தொழில் வேறுளதோ? அத்தகையோர்க்கு
என்றும் மீளா ஆரிருள் நரகமன்றோ கிடைக்கும். பிறர்
காலிற் சிறிய முள்ளொன்று தைக்குமாயின் கண்ணீர்
தானாய் ஓடிவிடுந்தன்மையையுடைய எம்போலிய பே
தைமைப்பெண்டிர் அக்கொடிய பாதகத்தைச் செய்யத்
துணிவரோ? எந்தவித்தையிலும் முற்றும் கல்லாமை
விபத்தாய் முடியுமன்றோ. யாவரேனும் விஷத்தினால்
தீண்டப்பட்டு என்னிடத்தில் வந்து அதை நீக்குமாறு
வேண்டுவரேல், யான் அதற்குப் பரிகாரம் செய்ய
அறியேனென்று கூறுதல் அழகாமோ?

என்னை நம்பிவந்த அவர்களுக்குத் தாமதத்தினால் விபத்
தன்றோ சம்பவிக்கும். இதை உத்தேசித்து யான் விஷத்
தைப்பெற்று அற்பப் பிராணிகளான நாய், பூனை, எலி, முத
லியவற்றிற் கீந்துமாளச்செய்து மாற்றும் மருந்தைப் பிர
யோகித்து அவைகளை உயிர்ப்பித்து அதன் தன்மையை
நன்றாயுணரலாமென்றே விஷத்தைச் சிறிது கொடுக்குமாறு
வேண்டினேன். இக்கருத்தை நீ யறியாது போனது மிக்க
ஆச்சரியகரமே."

வாசுதேவன்—"மன்னித்தருளுங்கள். இதோ இச்சிறு சிமி
ழில் ஒளித்த பாஷாணமிருக்கின்றது. அதை முதலிற்
பிரயோகித்தறியுங்கள். அற்பஜந்துக்களுக்காயினும்
அவையடையும் நிலைமையைக் கண்ணுற்றுக்காண்பது மிக்
கப் பரிதாபகரமாயிருக்குமாதலின் அச்சமயத்தில் நீங்
கள் கடினமனத்தைக்கொள்ள வேண்டிவரும்."

(ஓர் சிமிழைக்கொடுத்தல்)

சரசாங்கி—“மெத்த நல்லது. பின்னர் பலரினுயிரைப் பிழைப்பிக்கும் பெருந்தக நன்மையை உத்தேசிக்க இக் காரியமோர் கடினமானதன்று. நீ திரும்பவும் நாளை யதினம் இவ்விடம் வரவேண்டும்.”

வாசுதேவன்—“கட்டளையின்வாறு செய்கின்றேன். செல்ல விடையீயுங்கள். அரிசியே!”

சரசாங்கி—“செல்வாய் வாசுதேவா.”

வாசுதேவன்—(தனக்குள் சொல்லிக்கொள்ளுதல்) “இவள் கொடிய பாதகியென்பதை யானறியேனென இவள் நினைத்திருக்கின்றனள். இத்தகைய துர்மார்க்கியிடத்தில் பிறருயிரைக் கொல்லக்கூடிய விஷத்தை யான் கொடுப்பேனாயின் அப்பாதகத்திற்கு யானன்றோ இலக்காகவேண்டும். இப்பொழுது யான் கொடுத்த சிமிழில் விஷமிருப்பதாய் இவள் நினைத்துக்கொண்டிருக்கின்றனள். அதிலிருக்கும் மருந்து, உண்போரைப் பல நாழிகை நேரம்வரையில் உணர்ச்சியற்றுப்போமாறுபுரிந்து இறந்தோரைப்போலாக்கி விடினும் அவர் பின்னர் மயக்கநீதெளிந்து முன்னினும் திடசாலிகளாய் எழுந்திருப்பார். இவள் முதலில் நாய் பூனை முதலியவற்றிற்கீவள். பின்னர் மனிதருக்குப் பிரயோகிப்பள். மனிதர் சிலநாழிகை வரையில் உணர்வற்றுக் கிடப்பதினால் ஓர் கெடுதலுமில்லை. அவர் அவ்வாறு கிடத்தலைக்கண்டு, இறந்துவிட்டதாய் இதுதுஷ்டை நினைத்து ஏமாறுவள். அவள் என்னை ஏமாற்ற நினைத்தனள். யான் நரையினைத்தாங்கிய காலங்கண்ட ஜாம்புவந்தனென்பதை யறியாது இவளேமுட்டாளாயினள்.”

(சென்று விடுதல்)

(தாதி வருதல்)

தாதி—" அரசியாரே! கட்டளையின் வாறு புருஷோத்த மனை அழைத்து வந்திருக்கின்றேன்."

சரசாங்கி—" உள்ளேவர விடுவாய் தாதி—(தனக்குள்) இவன் முகஸ்துதியால் வயிறு வளர்த்து வரும் தீயோ னன்றோ! இவன் தனது எஜமானனை விசேஷித்துப் பேசுகின்றவனன்றோ. இவன் எனது அண்ணனுக்கு விரோதமானவற்றைப் புரிகின்றனன். முதலில் இவன் மீது இவ்விஷத்தைப் பரிக்ஷித்துப் பார்க்கின்றேன்."

(புருஷோத்தமன் வருதல்)

அடே புருஷோத்தமா! வருவாய் இன்னமும் சுந்த ராங்கி விசனத்திலிருக்கின்றனளோ?"

புருஷோ—" ஆம். மகாராணியாரே! அவர் படுந்துயரை யானென்னென விரிபபேன்! ஓயாது அழுது கண்ணீர் விடுத்து மதிவதனனையே சிந்தனை புரிந்த வண்ண மிருக்கின்றனர்."

சரசாங்கி:—

( இராகம்—தோடி, )

உயிருடல்போன்றநேய ரொருவரை யொருவர் நீங்கின்
துயரினுற் சின்னுள்வாடித் துன்புறலியற்கையேனுஞ்
செயிரிலா நன்றிமிக்கச் சேவகா வருந்தில்யாது
பயனெனத்தேற்றில்நாரி பரிபவம் விடுப்பளன்றே.

அடே நற்குணமுள்ள புருஷோத்தமா! உடலும் உயிரு மென ஒருவரை யொருவர் பிரியாது அன்புடன் நேசிப்பவர் ஒருவரை யொருவர் விடுத்துப் பிரிவரேல் ஆரம்பத்தில் இவ் வாறு ஓயாத் துயரிலாழ்ந்து வருந்துவது உலக வியற்

செயிரிலா=குற்றமற்ற. பரிபவம்=விசனம்.

கையே. நாட்கள் செல்லச் செல்லவும், பிறர் அவர்க் குறைக்கும் ஆறுதல்களினாலும் அவள் விசனம் வரவரக் குறுகிக் கடைசியில் முற்றும் ஒழிந்துபோம. அதன் பின் சென்றவர்க்குப் பதிலாய் வேறொருவரை உயிரென நேசித்தல் யாவரு மறிந்த விஷயம்.

இராகம்—மோகனம்.

ஆதலாலவள் பாலேகிப் பேதைமை யொழியுமாறே
யோதிநன் மாற்றஞ்சாலச் சுந்தரி மனதைமாற்றி
யாதரத்துடனே யெந்தன் சோதரன்றனைவிரும்புஞ்
சேதியைத் தருவையாயிற் செய்வதை மறப்பதுண்டோ.

ஆதலின் புருஷோத்தமா! நீ சென்று மதிவதனனை நினைப்பதினால் பயனில்லையென உரைத்துப் புத்தி புகட்டி அவளது பேதைமையை விலக்க முயல்வையேல், அவளது துயர் வரவர நீங்கிவிடுமென்பது துறுதி. அதலின், இவ்விஷயத்தில் முயன்று அவள் எனது மூத்தோனை மணக்க விரும்புகின்றனெனும் மொழியைக் கொணர்வையேல் நீ செய்த வுதவியை யான் ஒருக்காலும் மறப்பேனலலேன். உனக்கு என்ன கைம்மாறு செய்வேன், தெரியுமா? ''

நவின்றவக்கணமேயுன்னை நாதனைப்புரையசசெய்வ
லவனொரு வறியன்வீணன் புகழ்பெயர் நேயரில்லா
னவனியிற் பிறர்பாலேற்கு மாதுலப் பேதையின்பா
லெவன்நலம் பெறுவையென்று லவனிலு முயர்வையன்றே.

அக்கணமே உன்னை உனது நாயகனைப போலாககுவேன். அவனுக்குச செலவம் பெயர், புகழ், முதலிய

ஆதரம்=அன்பு. சோதரன்=சகோதரன்
நவின்ற=சொன்ன. நாதனைப்புரைய=உன் எஜமானனைப் போல். எற்கும்=யாசகம்வாங்கும். ஆதுலன்=தரித்திரன். எவன்=எப்படிப்பட்ட

ஒன்றுமிலது. அவனோர் ஏழை. அவனே பிறருதவியால் ஜீவிப்பவன். அவனை யடுத்திருப்பதினால் நீ யாது பயனைப் பெறக் கருதுகின்றனை ? எனது மொழிக் கிணைவையேல் உன்னை அவனிலும் மேம்பட்ட நிலைமைக்குக் கொணருகின்றேன். ”

(சரசாங்கி தன் கையிலிருந்த விஷச் சிமிழைத்
தவறிப் போடுபவள்போல பூமியில
நழுவ விடுதல், அதை அவளுக்காக
புருஷோத்தமன் எடுத்தல்.)

அடே புருஷோத்தமா ! நீ எடுத்த சிமிழிற்குள் இருப்பது யாதென்பதை யறிந்தனையா ?

புருஷோ—“ தெரிவியுங்கள் ! மகாராணியாரே ! ”

சரசாங்கி:—

(அரிச்சந்திர நாடகம்–தாயைவிட்டு வந்து காட்டில்)

எடுத்ததனை இன்னதென்றே—யியம்புவேன் கேட்பாய்
எந்தன் விருப்பினைச்செய்வாய். (எடு)

(1) நெடிய நாளாய்க்கற்றறிந்து முடித்தேன் யானதை
படியை யாளு மரசனுயிரை–க்கொடுதத சஞ்சீவி
யதைக்-கடுத்தவை யேது. (எடு)

(2) உந்தனு தவிக்குவந்தளிக்கும் கொடையைச் சுட்டிடுங்
குறியாயதை நீயே கொள்வாய்-கொண்டிடேன் யானே
வுன்னை வேண்டினேன் யானே. (எடு)

(3) சுந்தராங்கிக்குறிய வாறே யுறைப்பாயே யடா
சொல்வதினால் நீயும் சாலச்சுகம் பெறுவாயேயதை
யகத்தினால் தேரே. (எடு)

---

கடுத்தல்=ஒத்தல்

(இராகம்—முகாரி.)

தலைவியின் மனதை மாற்றித்தருவையே லினியமாற்றம்
விலையிலாத்தனிகனுவை தலைவியை யிழப்பதில்லை
நிலைபெறத் தமையனுன்னை நேசனுய்த் தொடர்வனெந்தன்
றலைவனுக்குரைப்பேனுன்னைத் தனதனுய்ச் செய்வேன்காண்
[பாய்

அடே நன்றி மிக்க புருஷோத்தமா! நீ எடுத்த சிமிழிற்குள்ளிருப்பது அமிர்தசஞ்சீவி என்னும் மருந்து. அதை யான் நெடியகாலம் பிரயாசைப்பட்டுக் கற்றுக் கொண்டு தயாரித்தேன். அது நமதரசனுயிரை நாலைந்து தடவைகளிற் காபபாற்றியது. இனி யான் உனக்கு அளிக்க நினைக்கும வெகு மதிக்குமுன்னறி குறியாய் இதை நீயே எடுத்துக் கொள்வாய். அதை என்னிடத்திற் கொடுக்க வேண்டாம். நீ சுநதராங்கி யிடத்திற்குச் சென்று அவள் மனதை மாற்றி இம்மணத்தினை முடிப்பையேல் உனது உதவியை ஒருபோதும் மறவேன். அப்படிச் செய்வதனுல் உனது எஜமாட் டியான சுந்தராங்கியை நீ இழபபதில்லை. அவள் உனக்கு எப்பொழுதும் எஜமாட்டி தானே. அவளுடன் எனது தமையன் ஜெயபாலனும் உன்னை விசேஷித்த அன்புடன் நேசிபபன். யான் அரசனிடத்தில உனது உதவியைப் பற்றியறிவித்து உன்னைக் குபேர சமபததுடையவனுக்குவேன். ஆதலின, யான் கூறியவற்றை சிநதனை புரிநது அவ்வாறே செய்வாய். உடனே அவளிடம் செல."

புருஷோத்தமன்:—"அவ்வாறே செய்கின்றேன். மகாராணியாரே" (தனக்குள் சொல்லிக்கொள்ளுதல்) "ஆகா! இவள் கூறுவது மிகவும் ஒழுங்கான விஷயம். எனது

தனதன் = குபேரன்

நாயகனுக்குத் துரோகம் புரிவதைக்காட்டிலும் யான் எனது யிரையே போக்கிக் கொள்வேன். பின்னது தான் யான் இவளுக்குச் செய்யக்கூடிய உதவி.''

(புருஷோத்தமன் சென்று விடுதல்.)

சரசாங்கி:—(தனக்குள்) ''இவனோர் ஆழ்ந்த வஞ்சகன். இவனது மனோவுறுதியை மாற்றல மிகக்கடினமான விஷயம். இவனிருத்தலே அவள் அடிக்கடி மதிவத னனை நினைப்பதற்குச் சாதனமாகின்றது. மதிவதன னது காரியம் கெடாது பாதுகாக்கும முககியத்தோ முன். இவன் இறப்பனேல் அவள் யாதோர் துணையு மற்றவளாவள். அதன் பின்னர் எனதெண்ணம் கைகூடுதலெளிது. சிமிழிலிருக்கும் விஷத்தை யுண் ணுவதற்கு இவனே தக்கவன்.'' (சென்று விடுதல்)

7-வது சீன் அரண்மனையில் ஓர் அந்தப்புரம்.

சுந்தராங்கி வருதல்.

சுந்தராங்கி :—

இராகம் காம்போதி—ஆதிதாளம்.

பல்லவி

என்ன என்விதியின்வலி - யெங்குசெல்லினு மொழிக்க
எவராலாகுமென் செய்குவேன். (எ)

அனுபல்லவி

மன்னவனுமெந்தன்றாதை - வன்னெஞ்செனுயினுன்
மாற்றாந்தாய் வஞ்சகியாம் — மணமகனோர் பேதை (எ)

சரணம்

மனமதிற் குடிகொண்ட - மதிவதனச்செம்மலை
தினமும் நினைந்துநினைந் தென்னெஞ்சம்பதைக்குதே
எனதிளஞ் சோதரரை - யெடுத்தேகியதைப்போல
வெனைக்கள்வரெடுத்தோடி யிருப்பரேலின்பமே. (எ)

(விருத்தம் காம்போதி)

மன்னவன் மகளாய்த்தோன்றி மனம்நனி வருந்திவாடி
யின்னலை நுகர்தலின்றி யேழையாமொருவன்செல்வக்
கன்னியாய்ப்பிறத்தல்நன்று கருதியபெருதலுண்டா
மென்னுளுமின்னுவின்றி யின்பமேபெருகுமந்தோ

ஐயோ! என்செய்வேன்? தந்தையோ கடின மனதைக் கொண்ட கொடியோனாயினன். எனது சிற்றன்னையோ வஞ்சகத்திற்கிருப்பிடமா யிருக்கின்றனள். மூடர்களிற்கு அதிபனான ஜெயபாலனோ பேதையினும் பேதை. பிறிதொரு புருஷன் மீது இச்சைகொண்டவென்னை மணக்க விரும்புகின்றனன். ஆகா! எனதாவியனைய சீலனை நகரை விட்டு விலக்கி விட்டனரே! ஐயோ என்செய்வேன்! என் சிந்தையிற் குடிகொண்ட மதிவதனனை ஓயாது நினைத்து நினைத்து என் மனமும் மெய்யும் புண்ணானவே! எனது சகோதரரை இளம்பிராயத்தில் திருடிச்சென்றவர் என்னையும் எடுத்துப் போயிருப்பாரேல் யான் மிக்க மகிழ்வைக் கொண்டிருப்பேனே. எப்பொழுதும் மேலான நிலைமையைப் பேணிப் பாராட்டுவது ஆராத்துயரிற் கன்றோ இடந்தருகின்றது. ஆகா! மன்னவன் வயிற்றில் மகளாய்ப் பிறந்து வருந்துதலினும் மிக்கத் தாழ்ந்தோனாகிய ஓர் ஏழையின் ஆசைமகளாயுதித்திருப்பேனாயின் நன்றாயிருந்திருக்குமே. அவ்வாறு பிறந்தோர் தம்மனதால் உண்மையில் எதை விரும்புகின்றனரோ அதைப்பெறுவது நிச்சயம். அவ்வாறு பெறுவதினால் அவர் அனுபவிக்கும் சுகததிலோர்வித விசேஷித்த இன்பந்தோன்றுமன்றோ! ஆகா! அதோ வருபவன் யாவன்! மதிவதனனோ! சே! அவனில்லை."

---

இன்னல், இன்னா = துன்பம். நுகர்தல் = அ

(புருஷோத்தமனும் சூரசேனனும் வருதல்)

புருஷோத்தமன்:—சிறந்த அரசி ! இவர் கலிங்க தேசத்திய ஓர் பிரபு. எனது எஜமானனது நண்பர். அங்கிருந்து கடிதங் கொணர்ந்திருக்கின்றனர்.''

சூரசேனன்:—''அரசி ! உனது முகம் மாறிவிட்டதே ! சீலனை மதிவதனன் க்ஷேமமாயிருக்கின்றனன். இக்கடிதத்தை யனுப்பினன்.''

(கடிதத்தைப் பெற்றுக்கொள்ளுதல்)

சுந்தராங்கி:—''அப்படியா ! மெத்த சந்தோஷம் உங்கள் சிரமத்திற்கு யான் நன்றி பாராட்ட மிக்கக்கடமைப் பட்டவள். நீங்கள் இங்கு வந்தது பெரிதும் மகிழ்வைத் தருகின்றது.

சூரசேனன்.—(தனக்குள்) ''ஆகாகா ! இவளது சுந்தரமே சுந்தரம். இப்பூமியில் இவளையொத்தவளையிலள். கோடி சூரியப்பிரகாச மென்ன எவ்வளவு ஜாஜ்வல்லியமாய்க் காந்தியைச் சொரிகின்றனள். இவள் மனதும் வெளித் தோற்றத்திற் கிணங்க, மிக்கச சிறந்த அழகைக்கொண் டிருப்பின் இவளை விலைமதிப்பற்ற நிதிக்குவியல். இவளே அருந்ததி. இவளே இரதி. யான் பந்தையத் தில் தோற்று விடுவதிலும் சந்தேகமேயில்லை. எனினும் தைரியத்தை முற்றுங் கொண்டு துணிந்து முயற்சி புரிந்து பார்க்கின்றேன். இவ்வமயத்தில் துணிவை விட்டு விடுவேனாயின் தோற்று ஓட்டம் பிடிக்க வேண்டியதாய் முடியும்.''

சுந்தராங்கி:—(அடியில் வருமாறு கடிதத்தை வாசித்தல்)

(இராகம்—தோடி)

ஆவியே சுந்தராங்கி யகமுறை யுருவே யுன்பால்
மேவுவோனெந்தன் நேயன் மேம்படு சிறப்பு வாய்ந்தோன்
பூவையே யவனாற் சால வுதவியைப் பெற்றேனீண்டே
யாவலனென் னைப்போல வன்புடன் மதிப்பாய்பேணி

எனது உயிரனையதோழி சுந்தராங்கி, இக்கடிதத்தைக் கொணருவோன் இத்தேசத்திறோர் பிரபு. மிக்க மேம்பாடுடையவன். அவன் எனது ஆழ்ந்த நண்பன். எனக்குப்பல உதவிகள் புரிந்தோன். ஆதலின் உனது ஆப்த நண்பனான வென்னை நீ எவ்வாறு மதிப்பையோ அவ்வாறே இவனையும் அன்புடன் உபசரித்துத் தேவையானவற்றை யளிப்பாய்."

பிரிய நண்பன்.

மதிவதனன்.

(இராகம்—தேசிக தோடி)

நண்பரேயின் பழுண்டேன் நல்கிய நிருபம் நோக்கக்
கண்ணிகர் தோழன் நேயர் கருதிட வெனாது நண்பர்
நண்ணிய வும்மைக்காண நான்நனியுவகை கொண்டே
னெண்ணிய வுதவியாவு மியற்றுவல் குறைவிலாது.

ஐயா! உங்கள் வரவு என்மனதிற்கு மிக்கப் பூரிப்பைத் தருகின்றது. எனதுயிர்த் தோழனாகிய மதிவதனனது நண்பர் எனக்கும் நேசரன்றோ. நீவிர் இங்கு இஷ்டம் போலத் தேவையான செளகரியங்களைச் செய்து கொள்ளுங்கள். என்னால் எத்தகைய உதவிகள் தேவையேனும் சந்துஷ்டியாய்ப் புரியச் சித்தமாயிருக்கின்றேன்."

அகம்=மனது உறை=வசிக்கும் மேவுவோன்=வருவோன் பூவை=பெண். ஆவலன்=சிநேகன்

நல்கிய=கொடுத்த நண்ணிய=கிட்டிய உவகை=சந்தோஷம் நனி=மிக

சூரசேனன்:—சிறந்த அரசியே! உனது அன்பிற்கு யான் மிக்க நன்றியுள்ளவனு யிருக்கின்றேன்.—ஆகா! மனிதருக்கு புத்தி மாருட்ட முண்டாய் விட்டதா? அவர்களது முகத்திலிருப்பது கண்களா, அன்றிப் புண்கள் தானே? இது ஆகாயம், இது நிலம், இது நீர் என நன்ருய் அறியக் கூடிய கண்கள் ஆகாயத்தில் மிக்கக் கம்பீரமாய்ப் பிரகாசிக்கும் சூரியனிற்கும், கடற்கரையில் எண்ணிக் கையற்றுக்கிடக்கும் கூழாங்கற்களுக்குமுள்ள வித்தியாசத்தை யுணராது போன தென்ன? இத்தகைய சிறந்த உறுப்புகளாகிய கண்களைக் கடவுள் நமக் கீந்திருக்கையில் இது அழகானது இது விகாரமான தென்பதை மனிதர் அறியக் கூடாமற் போனது மிக்க விந்தையே".

சுந்தராங்கி:—"ஐயா! என்ன விசேஷம்! எதைக்கண்டு வியப்படைகின்றீர்?

சூரசேனன்:—இல்லை, இல்லை, அது கண்களின் குற்றமன்று. பகுத்தறிவில்லாக் குரங்கு முதலிய விலங்குகள் கூடத் தமது கண்களாள் இத்தகைய மாதரிருவரை நோக்குமேல் விசேஷமாய்த் தோன்றும் மங்கையின் பக்கத்திலேயே பல்லிளித்துக் கொண்டு அன்புடன் நெருங்குமன்றி மற்றவளைக் கண்டு சீறித் தமது வெறுப்பைப் புலப்படுத்தும். அப்படியாயின் இது பகுத்தறிவின் பிசகாமோ. இல்லை யில்லை. ஏனெனில் புத்தி மாருட்டத்தைக் கொண்ட ஓர் உன்மத்தனும் இரு பெண்களில் மிக்கப் பிரகாசத்துடன் தோன்று பவளிடத்திலேயே நெருங்கித் தனது ஆசையைத் தோற்றுவிப்பன். அப்படியாயின் பிரிவினுலுண்டான ஆசையினுல் இக்காரியம் சம்பவித்திருக்குமோ? ஆகா! அதுவு மன்று.

இத்தகைய இன்பந்தரும் பரிசுத்த ஸ்வரூபியினிடத்தில் உண்டாகும் ஆசை, கேவலம் ஆபாசக் களஞ்சியமான ஓர் மங்கையிடத்துண்டாமோ? வெறுப்பேயுண்டாகுமன்றி ஒருபோதும் விருப்புண்டாகாது".

சுந்தராங்கி:—" நீர் எதைப்பற்றிச் சொல்லுகின்றீரென்பதை அறிந்தே னில்லை. தயைபுரிந்து நன்றாய்த் தெரிவியுங்கள்."

சூரசேனன்

(காவடிச்சிந்து—மூசுவண்டு.)

(1) மாதர்பணி கோதையே யோர்மறுவிலாத மாமணியே
மாந்தரின் செயலை யென்ன—சொல்லுவே—னவர்
வாய்மையே யில்லாத முழுப்—புல்லரே—யுந்தன்
மாழைவீசிடு போது தாமரையோடி வாடிடு பீடுநாறிடு
வாமமுகம் கண்டோர் மனம்—கல்லேனும்—பிற
மாதரின்வதனமதைப்—புல்லுமோ (மா)

(2) ஆசையான நேசனுலே மோசம்போவரே மனிதர்
ஆவிநிகர் தோழியரை நீங்கியே—யவர்
யாரொடும் பெருமகிழ்வு—வீங்கியே—பல
வாறுமேவியே நாணிலாமலேபேணி யேவர் பாணிகொள்ளுவர்
பாவையே புரிவர்பல—தீங்குமே—யதைக்
காணவன் பர்களினுயிர்—நீங்குமே. (மா)

மனிதரிற் சிலர் அவ்வாறு புரிகின்றனர். ஓர் விஷயத்தை எவ்வளவு அதிகமாய் அனுபவித்தாலும் அப்பொருளினிடத்து மேன்மேலும் பெருகுகின்ற ஆசையைக் கொண்டலைகின்றனர். அத்தகையோர் ஐவ்வாதையும் பூசிக்கொள்வர் சாணத்தையும் விரும்பி அணிவர்."

---

வாய்மை = உண்மை மாழை = அழகு போது = புஷ்பம் பீடு = பெருமை நாறிடு = தோன்றிடும் வாமம் = அழகு பேணி = மிகவும் விரும்பி பாவை = பெண்.

சுந்தராங்கி:—"ஐயா! எதைக் கண்டு இவ்வாறு மிக்க வியப் படைகின்றீர்? உமக்கு யாதாயினும் தேகத்தில் பிணி யுண்டோ ?"

சூரசேனன்:—"சிறந்த அரசி! எனது சரீரம் சரியான நிலைமையிலே தானிருக்கின்றது! நண்பா!—புருஷோத் தமா, என்னுடன் கூட வந்திருப்பவர் இந்நகரத்திற்குப் புதியவர். தயவு செய்து அவர்களுக்குத் தேவையான வற்றைப் புரிவையேல் மெத்த சௌகரிய மாயிருக் கும்"

புருஷோத்தமன் —"ஐயா! யானும் அதன் பொருட்டுச் செல்ல நினைத்தேன். அதற்குள் நீவிர் அதைத் தெரி வித்தீர், இதோ செல்கிறேன்"

(புருஷோத்தமன் சென்று விடுதல்)

சுந்தராங்கி:—

(நந்தன் சரித்திரம்—கண்டாமணியாடுது)

(1) என்னேயினித் தாமத இன்னுவினைக் கூறிட
என்னேயினி வீங்கிடும்—தாங்கிடேனோர் கணம் (எ)

(2) கண்கள் நிகர் நேசனும்—காந்தன் மிகக்ஷேமமோ
புண்ணிற் கொடுந்தீயினைப் போடாது பேசுவீர் (எ)

(3) பன்னிப்பல சாற்றினீ ரின்னதெனயானதை
யுன்னவொரு சாதனை—மோதிடாதே கினீர் (எ)

(இராகம்—கல்யாணி)

கலிங்கமாபதியிலெந்தன் கண்ணிகர் துணைவன் சாலச்
சலித்து மெய்யிளைத்து வாடிச் சார்வதா வருந்தினுனே
பலபல பகருகின்றீர் பதைக்குதேயெனது நெஞ்ச
மலைத்திடா தினியுமுண்மை யறைகு வீரரிய நண்ப

நோய்=துன்பம்
அலைத்திடல்=வருத்தல் அறைகுவீர்=தெரிவிப்பீர்

ஐயா! நண்பரே! நீவிர் ஏதேதோ பன்னிப் பன்னி வசனிக்கின்றீர். அதன் விவரத்தையான் அறியக் கூட வில்லை. என்ன விசேஷம்.? உனது கண்களை நிகர்த்த மதிவதனன் கலிங்கதேசத்தில் சௌக்கியமாயிருக்கின்ற ணு? அன்றி அவனுக்குயாதாயினும் பொல்லாங்குசம்பவித் ததா? தயவு செய்து எனது மனக்கவலையை மாற்றுவீர். அவனைப் பிரிந்ததனால் ஏற்கனவே புண்ணுயிருக்கும் என் மனதிற் கோலிட்டது போலிருக்கின்றதே. தயைபுரிந்து இனியாயினும தாமதமின்றி உண்மையைத் தெரிவிப்பீர்.

சூரசேனன்:—

(பஞ்சவர்ணக் கிளியே வாடி)

(பைரவி—ரூபகம்)

பல்லவி.

மங்கையர்க் கரசியே நாரிமிக்க—மனது நொ
ந்தனை மெத்தவாடி (ம)

அனுபல்லவி.

நங்கையே மதிவதனனுந்தனை-நீங்கியவ்விடம் வந்த முதலாய்ச்
சங்கையிற் பிணிகொண்டானில்லை-சார்வதா மகிழ் வெய்து
[கின்றனன்

சரணம்.

மாதர்களும் நயக்கும் கோதையாளே-யுந்தன்-மனதின் தூய்மையை
[முற்றுங் கண்டேனன்றே
பேதையரே கற்பிலுறுதியுள்ளா-ருயிர்-பெயரினும் நேயரை
[மறப்பதுண்டோ.
பேதையேயுனதரிய தூய்மையிம்—மேதினியினிற்காணற்
[பால்தோ
தீதிலா வினைநோக்க வென்மனம் வேதனையால்வருந்தி வாடுதே (ம)

சிறந்த அரசியே ! மதிவதனன் இங்கிருந்து கலிங்க தேசம்வந்தபின் சுகமாகவே யிருக்கின்றனன். அவன் விசனித்திருந்ததை யான் ஒரு நாளும் கண்டதில்லை. ஓயாது குதூகலத்தைத் தரும் காரியங்களேயே செய்து கொண்டு எப்பொழுதும் பெரும் சந்தோஷத்துடனே காலங்கழிக்கின்றனன். ஆகா ! மங்கையர்க்கரசி ! என்ன உனது தூய்மை என்ன உனது மாசிலாக்கற்பு ! அழகிலும், நற்குணத்திலும், கல்வியிலும், கற்பிலும், அன்பிலும் உன்னைப்போன்ற மாதர் இவ்வுலகத்திலேயே இலரெனயான் துணிந்து கூறுவேன். ஆகா ! உன்னைக்காண என்மனது வருந்திப் பதைபதைத் துப்பரிதபிக்கின்றதே! முற்றும் பரிசுத்தமே உருவாய் வந்த உன்னைக்கண்டு பசசாதாபபபடாதவர் கறகளும் மரக்கட்டைகளுமேயன்றி ஆறறிவுள்ள மனிதரன்று.''

சுந்தராங்கி :—

(இராகம்—செஞ்சுருட்டி)

ஏனையாநீவிரென்பா லிரங்கியேவருந்துகின்றீர்
சோனையாய் வசனிக்கின்றீர் சொற்றிடத்துணிவுமற்றீ
ரூனமதிருக்குமாயினுரைப்பதே யுதவியாகும்
யானதை விலக்கற்பால சாதனந்தேடல் நன்று.

ஐயா ! என்னைக்கண்டு நீவிர இவ்வாறு மனதிரங்கித் துன்புறுவதின் முகாந்திர மென்ன ? எனக்கு யாது தீமை சம்பவித்தது ? அன்றி என்னிடத்தில் யாது குறைபாடிருகின்றது ? நாம் எவ்விஷயத்திலும் அதை குறையாய் அறிந்துகொண்டு சந்தேகப்பட்டுக் கொண்டிருத்தல் பெருந்தீங்காய் முடியும். ஆதலின் யாதாயினுமோர் விஷயத்தில் சந்தேகமுண்டாகு மேல், அதை உடனே அற விசாரித்து உண்மையை உணர்வது நன்று. அதற்குப் பரிகாரம் செய்யக்

---

சோனை = மழை. சொற்றிட = சொல்ல. ஊனம் = குற்றம்.

கூடாவிட்டால் அது உமது குற்றமன்று. அது நிவர்த்திக்
கக்கூடியதா யிருக்குமேல் காலத்தில் தெரிந்து கொள்வதி
னால் அதை எளிதில் விலக்கலாமன்றோ. ஆதலின் தயை
புரிந்து உமது மனதிலிருப்பதைக் கூறுவீர்.

சூரசேனன்:—

(கல்யாணி—ரூபகம்.)

(தானன தன தானனா தானன தன
தானன தன தானனா)

பல்லவி

என்னென விரித்தோதுவே னேந்திழையாளே
என்மனமிக நோகுதே. (எ)

அனுபல்லவி

துன்னலராயினும் பின்னாலிருந்தவரை
தூற்றுதலழகன்று தோகையேயானதை. (எ)

சரணம்

மாலவன்மனைவியைப் போலப்போலியுமுந்தன்
சீலத்தைக் கண்டெந்தன் சிந்தைபொங்கியெழவே
சாலப்பலவுரைத்தேனெனு முண்மைநவிலேன்
சாலியைவதைப்போரைச் சகநாதன்செகுப்பனே. (எ)

(இரக்கத்துடன்) ஐயோ! சுந்தராங்கி! எவ்வாறு
கூறுவேன், என்மனமெழவில்லையே. மகாலக்ஷ்மிபோன்று
காணப்படும் உன்னை நோக்கவேயென்னை மறந்து என்மனது
பொங்கியெழ ஏதேதோ பற்பல சாற்றிவிட்டேன். எனினும்
உண்மையைத் தெரிவிப்பது பிசகு. பிறரில்லா விடத்தில்

---

துன்னலர்=பகைவர். மாலவன்=விஷ்ணு. நவிலல்=சொ
ல்லல். சாலி=அருந்ததி வதைத்தல், செகுத்தல்=வருத்தல்.

அவரைப் பற்றித் தூற்றுவது எனக்குத் தகாத காரியம். ஆகா! அருந்ததிபோன்ற உன்னை வஞ்சித்தோரை சிக்ஷிக்க கடவுளிருக்க அதை யானெதற்குத் தெரிவிக்கவேண்டும். யான் சுருக்கமாய்த் தெரிவிக்கக் கூடிய தென்ன வெனில் ஓர் தெய்வம் தனக்கு அருகமாய் நினைத்திருந்த வஸ்துவில் நாய்கள் வாய் வைத்ததுபோல காரியம்முடிந்தது. இதை விரிவாய்த்தெரிவிக்க எனக்கு இஷ்டமில்லை."

சுந்தராங்கி:—"ஐயா! எனது உயிர்த் துணைவனான மதிவதனனைப் பிரிந்ததினாலுண்டான ஓர் விதக் கவலையினாலேயே மனம் நொந்து வருந்திக் கிடக்குமென்னை ஓர் நாளும் நீங்காத புதியதோர் சஞ்சலததிற்குள்ளாக்கினீர். எனக்கு ஏதோ துன்ப மிருப்பதாய்த் தெரிநது கொண்டும் அதை இன்னதென அறிந்து கொள்ளா திருப்பதைப போன்ற கொடிய மனோ வேதனை வேறிருக்கின்றதோ! ஒருவன் பாதிக் கிணைரத் தாண்டி யுள்ளே விழுநது மீளாவிபத்திற் காளானது போல, என்னை யாக்கிவிட்டீர். இது உமககுத் தருமமன்று. பெரும்பாவம் சம்பவிக்கும். தயவு செய்து எனது மனோ சஞ்சலத்தை விலக்குமாறும்மைப் பெரிதும் வேண்டுகின்றேன்.

சூரசேனன்:—

(போவோம் வாரீர் சகிகாள் பூங்காவனந்தன்னைநாடி)

(1) கோதாய் மதிவதனன்சேதியை யெவ்வாறுரைப்பேன்
மாதொருவள் மையலினால் பேதித்திருக்கின்றனன்

(2) சூரியனை வென்றவுந்தன் ஜோதியினைக் கண்டவன்பின்
சேருவனோ நாறும்புகைத் தீபத்தினைத் தாபத்துடன்

கோதாய்=பெண்ணே. தாபம்=வேட்கை.

(3) ஐயயோ யுந்தன்முகம் செய்யசந்தத் தாமரையாம்
மைதவழு கண்களெந்தன் மனதைக் கொள்ளை
[கொண்டனவே

(4) தூய்மையே யுருவாய்வந்ததோகை நின்னைக்கண்டபின்னர்
சேய்மைதனி லேகிடினும் தேய்வதபிமானமன்று

(5) இத்தகைய யேந்திழையாமுத்தமியை யொருவிலொரு
நித்தம்பலபேர் மருவும் நீலியின்பாற் சேரலென்றே.

இராகம் = ஆனந்தபைரவி.

துடியிடைப் பெடையேதுப்பின் கொடியுனையடியேனில்லா
யடைதலைப்பெறவேணுயின் றொடியிடைவிடாது நின்னை
யடிதொழுதிடுவதன்றியகன்றிடல் செய்யேன் யாண்டு
மிடிபலயடியுமுந்தன் றொடர்பினை விடுத்தோர்மீதே.

ஐயோ! நீ இவ்வளவு தூரம் வருந்திக் கேட்கின்றனை யே! ஆகா! அதை யான் எவ்வாறு தெரிவிப்பேன்! அதைக் கேட்டபின் உன் மனம் சகிக்குமோ? இத்தகையவஞ்சகர் முகத்தில் இனி விழிப்பதே யில்லையென உறுதி செய்து கொள்வையே! ஆகா! என்ன உனது திரேக காந்தி! உனது குணம் எத்தகைய இரமணீயம். உனது வடி வழகு எத்த கைய நேத்திரானந்தம. சந்திர பிம்பமபோல் குளிர்ச்சியை யும், மனோல்லாசத்தையுந்தரும் உனது தாமரை முகத்தைக் கண்டோர் பிறமாதரை விரும்புவரோ! மதிவதனன் செய்த காரியம் எனக்கு வெட்கமா யிருக்கின்றது. சூரியனது ஒளி யை யனுபவித்தோரா. நாறும் புகை சூழ்ந்த இருண்ட சிறிய

---

செய்ய = சிவந்த. சந்தம் = அழகு. தூய்மை = பரிசுத்தம். சேய்மை = தூரம். தேய்தல் = குறைதல். ஒருவி = நீங்கி.

துடியிடை = உடுக்குபோன்ற இடுப்பு. பெடையே = பெண் அன்னம். துப்பு = பவளம். இல்லாய் = மனைவியாய். தொடர்பு = சினேகம்.

தீபத்தில் ஆசை கொண்டதுபோலச் செய்தனனே. பரத்தையர் கணத்துக்குக் கணம் ஆயிரம் பொய்யுரைப்பர். அவர் மனமோ பசோந்தியின் நிறத்தைப்போல க்ஷணத்திற்கோர் முறை மாறும். தினம் பலரை மகிழ்வித்து ஒவ்வொருவனிடத்தும் நீயே என் உயிரென்றும் உன்னையல்லாத மற்றப் புருஷர் எனக்குத் தகப்பன் ஸகோதரர் முதலியோருக்குச் சமம் என்றும் உன்னை ஒரு கணம், காணுவிடில் விஷம் தின்பேனென்றும் ஆணையிட்டுக் கூறுவர். இவ்வாறு கூறிக் கொண்டிருக்கையிலேயே, வீட்டின் அறைக்குள் ஒளித்து வைத்திருக்கும் வேறொருவன் மீது இவள் மனது சென்றிருக்கும். இத்தகைய மங்கை யொருவள் உனக்கு விரோதியாய் வந்த விஷயமே என்மனதை வருத்திப் பாகாய் உருக்குகின்றது."

சுந்தராங்கி.--(திகைத்து) "ஆ! மதிவதனன் மாளவதேசத்தை மறந்து விட்டனன் போலும்."

சூரசேனன்:—

(இராகம்—நாட்டைக்குறிஞ்சி.)

கயல்விழிகண்ணீர் பெய்யக்கரைந்து நீ கலங்குகின்றாய்
கயவரின்செயலா மிவ்வை தைக்கழறிட விரும்பாயென்னை
நயந்தனை நவிலு மாறுனை நந்து நீபலகால்வேண்டி
நயவனித்தேய மன்றி தன்னையும் மறந்தான் முற்றும்.

ஐயோ! சுந்தராங்கி! உனதழகிய கண்களினின்று கண்ணீர் ததும்புகின்றதே! ஆகா! அழவேண்டாம். பெண்மணி! கீழோர் செய்யத்தகுந்த இவ்விஷயத்தை உன்னிடமுரைக்க யான் இஷ்டப்படவேயில்லை. நீ என்னை வற்புறுத்திப் பலவாறு வேண்டியமையின் தெரிவிக்கும்படி

கரைந்து=அழுது கயவர்=கீழோர் கழறிட=சொல்ல நயந்தனை=விரும்பினை நவில=சொல்ல நயவன்=நேசன்.

நேர்ந்தது. மதிவதனன் இத்தேகசத்தை மாத்திரமன்று தன்னையும் முற்றும் மறந்தனன்."

சுந்தராங்கி:—

( அரிச்சந்திரநாடகம்—அதிபதி அரிச்சந்திர )
யதுகுலகாம்போதி-ஆதிதாளம்

மதிவதனன்புரிந்த திறவென் மனதைமுற்றும
வதைக்குதே யென்செய்குவேன் தெய்வமே தெய்வமே
[தெய்வமே

(1) பதியென வரித்துயான் சதமென நினைத்தனேன்
விதியின்வலியென்னே-புதுமை புதுமை யிதே.

(2) இதய மிரண்டாய்விண்டே யியம்பமொழியு மற்றேன்
அதிகமினிமேல்கவி ரறைதல் தேவையிலதே. (மதி)

(காதைக் கைகளால் மூடிக்கொண்டு)

ஆகா! எனது மதிவதனனும இவ்வாறு செய்திருப் பனோ! அவனையே எனது நாயகனென வரித்து அவனை எனக்கு முற்றும சதமென நினைத்திருந்தேன். ஆகா! அவ் வெண்ணம் மண்ணில் மடிந்ததே. எனது இருதயம இரண் டாய் வெடிக்கும்போ லிருக்கின்றதே. வசனிக்கவும ஒன் றையும் அறிந்தேனில்லையே. மேலும் அவன் செயல்களைப் பற்றி யறிய இஷ்டமில்லை. போதும, போதும்."

சூரசேனன்:—

( இராகம் - மோகனம். )

அரியவென் னுயிரையொத்த வரசிநின்னிலைமை காண
யிரங்கியென் மனதுநைந்தே யிடும்பையைக் கொண்டதையோ
தரணியிலுயர்ந்தவேந்தன்றன்னை யுமிரட்டிப்பாக்குந்
திருவுடையரசிவாமச் சித்திர மொளிரும்பூவை

---

இடும்பை = துன்பம் திரு = செல்வம் வாமச்சித்திரம் = விசே ஷித்த அழகு. ஒளிரும் = பிரகாசிக்கும்.

( இராகம் - தோடி )

உந்தனை விடுத்தோர்வேசை யுறவினைச்சாலப்பேணிச்
சந்ததமவள்பாலேகிச் சரணெனத் தொடர்தலின்றிச்
சிந்தனை பிரிதிலில்லை யுன்றனத் துதவிகொண்டே
யுந்தனை வஞ்சிக்கின்ற விந்தையே விந்தையந்தோ

ஐயோ! என்தாவியையொத்த பெண்மணி! உனது பரிதாபகரமான நிலைமையைக்காண என்மன மிரங்கி நைந்து வருந்துகின்றது. இவ்வுலகத்திய எல்லா அரசரிலும் மேலான மன்னனையும் இரட்டிப்புச் செல்வமுடையவனாகவும் பெருமையைக் கொண்ட மண்டலீகனது புதல்வியாயிருந்தும், சிறந்த கட்டழகையும் மினுவழகையும் உடையவளாயிருந்தும் உன்னை அலட்சியம் செய்து விட்டு காசின் பொருட்டு ஆசைகாட்டி யாவரையும் மகிழ்விக்கும் இழிந்த பரத்தையரின் மோகவலையிற் பட்டு சதா சர்வதா அவள் பாதங்களில் வீழ்ந்து கிடப்பது எத்தகைய அபசாரம். இவன் உனது பொருளைச் செலவழித்துக் கொண்டே உனக்கு வஞ்சகம் புரிகின்றனனே! ஆகா! இது எத்தகைய விந்தை!

(இராகம்-கானடா)

காசினைக் கருதும் வேசைக் கழலினைப் பணியும் மோச
நீசனுக் குரியவாறே நீபழி தேடலின்றேற்
காசினியாளும் மன்னன் காதலியாதலில்லை
மாசிலா மரபில் வந்த மங்கையு மாதல் சங்கை

ஏ சுந்தரி! இவனது மோசத்திற்குத்தக்கவாறு நீ பழிக்குப் பழிவாங்காவிடின், நீ அரசபுத்திரியுமன்று அரசர் குலத்தினுதித்தவ ளென்பதும் சந்தேகம்."

---

கழல் = பாதம். காசினி = உலகம். காதலி = பெ-
குற்றம். மரபு = குலம். சங்கை = சந்தேகம்.

சுந்தராங்கி:—

(இராகம்—ஆனந்த பைரவி)

செவிகளாலறிந்த போழ்தே சினமுடன் வெறுப்பைக்கொண்டு
நவையுள தெனவே தரி யெவரையும் வருத்தல் சாலப்
பவத்தொடு தவறாய் மாறும் பழிபெற மனத்துகொள்ளேன்
நவின்றன சரதமேனும் நான்றீ தெவ்வாறு செய்வல்.

ஐயா! எவ்விஷயத்தையும் செவிகளா லறிந்தவுடனே உண்மையென நம்பி அதன் பொருட்டுப் பிறர்மீது கோபங் கொண்டு அவரை வெறுத்துத் துன்பம் புரிய நினைத்தல் கெட்ட காரியமன்றோ? அவ்வாறு நினைத்தல் அனேக மாய்த் தவறாயும் பாவமாயும் முடியுமே. நீவிர் கூறியது உண்மையே யாயினும் யான் எவ்வாறு பழிக்குப் பழி வாங்க மனங் கொள்வேன்.

சூரசேனன்:—

(காம்போதி வர்ணம்—நீகே—தகுரா நீர-ஜாக்ஷா)
(இராகம் காம்போதி—தாளம்-ஜம்பை)

நீ-யே-னுருகு-கிறாய்-மானே (நீ)

(1) தானிபத மபனி-தானிபத சமனி, தானிபத
ரிசனி-தானிபத-சபனி-தானிபத-மபத (நீ)

(2) ஓதுவது-பகவத்-கீதைதனை-விரும்பி-நாடுவது
குடக்கள்-ளாகநடப்-பவரைப் போலப்புரி
கின்றனன் (நீ)

(3) பேடு நினைப்—புனித—மாக விருக் கநயந்
தேகிப்பிற மகளைப் பேணியுனை நினையாப்
பேதைதனை நினைந்து (நீ)

(4) தினைவ-னிலுயர்-யானேயுனை-மருவ
நீயுமருள்-புரியி-லாயுள்வரை-பிரிவ
தேதுயிது-சரதம். (நீ)

---

நவை = குற்றம். பவம் = பாவம். நவின்றன = சொன்னவை. சரதம் = நிச்சயம்.

(இராகம்—கானடா)

அவனிலுமுயர்ந்தேனுன்னை மணந்திடுந் தகைமையுள்ளே
னவனியில் வதியுமுற்று மகன்றிடேன் கணமுமன்னை
யவலமதொருவி யென்பாலன்பினை நிறுவிவேட்டி
னவணவண்புரிந்த தீதிற்கதுகுவதிலே கோதாய்.

எனதரிய பெண்மணி! சுந்தராங்கி! ஆகா! உன் விஷயத்தில் மதிவதனன் புரிந்து எவ்வாறிருக்கின்றதெனில் "படிப்பது பகவத்கீதை நடுப்பது குடந்தை" என்றவாறு பிறருக்குத் தீங்கிழைப்பதொன்றையே தாம் செய்வதொன்றுமாய்த் திருக்கின்றவாறாம் உனைப் பார்த்தவுடனழுந்தல் கூடாதென விரும்பிச் சென்ற அவனை நான் பாத்திரம் நினைத்தவாறு சேவையுடன் வந்து திரிகின்றனனே. யானோ எல்லா அம்சத்திலும் அவனைக் காட்டிலும் மிக்க மேம்பட்டவன். உனது கரத்தைப் பற்றுதற்கு முற்றும் தகுந்தவன் உனக்கும் ஆசையுண்டென் மீதிருந்ததாயின், ஆகா! யான் உன்னை விடுத்தொருபொழுதும் பிரிவதில்லேனே! இத்தகைய வஞ்சகத்தைக் கனவிலும் யான் நினையேனென்பது தேற்றம். என்னை நீ காதலுடன் கொள்ளாதாகில் அவன் அங்கு செய்தற்குரிய பதில்"

சுந்தராங்கி:—(கோபத்துடன்) "ஆகா! அப்பப்பா! யாரடா! அங்கே! அடே! புருஷோத்தமா!"

சூரசேனன்:—"அடி சுந்தராங்கி! கண்மணி! எனதருகில் வருவாய்! செந்தாமரை மலர்போன்ற மெல்லிய உனது கரத்தை யீந்து எனக்கு அபயமளிப்பாய்."

---

அவலம் = விசனம் யொருவி = நீங்கி. நிறுவி = வைத்து அவண் = அங்கே. வதில் = பதில்

சுந்தராங்கி:—(கோபத்துடன்)

இராகம்—மோகனம்.

சுடுசுடுநெடி துதீய சொற்களைக் கேட்டகாதைப்
படுபாவியிவனைத்தேடி நடுவதும் கூடிதமீந்து
விடுவதாமென்றோ வந்தோயிவன் மதிவதனன்றன்னைக்
கொடும்விடமெனவே கூடிக்கெடுப்பதிற் றடையுமுண்டோ.

(அரிச்சந்திர நாடகம்—போம் போம் இதுவுங்கனமா.)

(இராகம் மோகனம்—தாளம்—ஆதி)

பல்லவி.

சீச்சீ யெழுந்து நடடா-பெயரா விடிற்
சிறமிற ம்சுததக் கசடா

அனுபல்லவி.

எச்சினை மொழிந்தது மினியினை யிகழ்நதது
மேனே யெனவிருந்தேன் யானே யதையறிந்தேன் (சீ)

சரணம்

கோனவன் சுதையெனும் நினைவினை மறந்தாய்
மானெனும் தேனெனும் மொழிபல வீந்தாய்
மானமதை விடுத்து மதியைத்துறந்து வந்து
ஈனனும் நீயெனை மணவென மொழிந்தாய் (சீ)

(காதுகளிற் கையை வைத்துக் கொண்டு)

ஆகா! கா! கா! இவனது மொழிகள் எத்தகைய கர்ண கடூரமாயிருக்கின்றது. இதுகாறும் இவனது வார்த்தைகளைக்கேட்ட எனது செவிகளைத் தீயாற் சுடினும் தகும். அடே! படுபாவி! என்முன்னிருக்காது உடனே அப்பாற் சென்றுவிடு. நீ யோக்கியனாய் இருந்திருப்பையேல் மதிவதனன் சங்கதியை எனது நலத்தின் பொருட்டுமாத்திரம்

நெடிது=நெடியநேரம். நடுவதும்=சிநேகிப்பதும். விடம்=விஷம்.

தெரிவித்திருப்பையே யன்றி சுயநலம் கருதி இத்தகைய கேவலமான சோகத்துடன் மொழிந்திருக்க மாட்டாய். உனக்கும் சௌரசேந மென்பதற்கும் எவ்வளவு சம்பந்த மில்லாமலிருக்கின்றதோ அவ்வாறே இலறன எனது மதிவ தனனுக்கும் சேர்ப்பிக்கும் சோதைக் குறைமசமானதமிருக்கும். யாரோ ஒர் சிறந்த அரசன தடுத்ததென்பதை முற்றுமமறந்து மிக்கத் தானிவைக் கொண்டு என்னை யோர் சேவைக்கும் தாழ ந்தவனாய் மதித்து என்னிடம் வந்து இவ்வாறு பிதற்றுகின் றனையா ? அடேபதரே ! உன்னையும ஒர் துரும்பையும் சம மாகவன்றோயான் மதிக்கின்றேன். உனது தேசத்திய அர சனது மகளிரை இவ்வாறு தான் சந்தையிற் காய் கறிகளைக் கொள்வதைப் போல மணத்திற்கு வேண்டுவீர் போலும். அடே ! இதை இப்பொழுதே எனது தந்தைக்குத் தெரி வித்து துஷ்டனான உனது சிரத்தை வாங்கச் செய்கின்றேன் யாரடா அங்கே ! சேவகர்கள்."

(இராகம் —எதுகுல காம்போதி)

அகவல்

சூரசேனன்:—

மதிவதனப் பெயர்த் துதிபெறும் நண்பனே
நின்மதிப்பற்றபே— ரின்பமே யின்பமா
மரிய நின்றுணைவியி னகன்றிடா வுறுதிக்
குரியநற்றகை வினைக் கொண்டனை குறைவற
இருவருக் கிருவரே யிணைசொலத் தகியவர்
கசடிலாநற் குணம் கபடிலா நன்மையும்
வசையிலா மேன்மையு மிசைதரு மொழுக்கமு
மென்னெனப்புகலு வேனிவர் பெரும்பேற்றினை
வாடாத மகிழ்வுடன் நீடூழி வாழ்குவீ
ரன்னையே நிகரிலா வாசியே தயைபுரிந்
தென்னையே பொறையுடன் மன்னிப்பதுன் கடன்
மாறாத வன்புநின் மனதிலு ளதோவெனத்

*தேருவா னிவ்வாறு கூறினே னேகியான்*
*நிகழ்ந்ததை மொழிந்தவனை மகிழ்வுட னிறுத்துவே*
*னவனையிவ்வ வனியிலொப்ப வருமிக்கவரு*
*மெவரு மிலரென்பதே யென்மனத்துறுகாண்.*

ஆகா! என் அருமைத் தோழா! மதிவதனா! உனது பாக்கியமே பாக்கியம்! இவ்வரசிளம்பெண் நீ கொண்ட உறுதிக்குத் தக்கவாறே இவளும் உன்னை நன்கு மதித்திருக்கின்றனள். முற்றும் நற்குணமே உருவாய் வந்த நினைத்தற்கு அருந்த மனையாட்டியே இவள். உங்களிருவரையும் மணத்தற்குரிய நீங்களே ஒருவருக்கொருவர் தகுந்த யோக்கியதையுடையவரன்றி இவ்வுலகத்தில் பிறரில்லை. என்கண்ணே, சுந்தராங்கி! சிறந்த அரசியே! அவனிடத்தில் எப்பொழுதும் மாறாத வாஞ்சையை நீ கொண்டிருக்கின்றனையோ? வெளிப்படையாகச் சொல்லத்தகுமாறே யான் இவ்வாறு வினவினேன். என்மீது கொண்ட கோபத்தைத் தணித்துச் சாந்தியடைவாய். யானே உடனே அவனிடத்திற்குச் சென்று நிகழ்ந்தவற்றை உரைத்து அவனை இன்னும் அதிகம் சிறப்பிக்கின்றேன். ஐயோ! அவனது பரிசுத்தமான அன்புடன் உரையாடுவோரை வசீகரப் படுத்தும் சொல்லொழுக்கமும் புகலற்பாலதன்று. அந்நகரத்திலுள்ளோர் யாவரும் இவனைத் தமது உயிராய் மதித்து இவனை யோர் கணமும் விடுத்துப் பிரிகின்றாரில்லை.”

சுந்தராங்கி:—(கோபம் சிறிது தணிய) “ஆகா அப்படியா?”

சூரசேனன். (இராகம்—செஞ்சுருட்டி.)

*பொன்னுலகதனில் நின்று பொலிவுடனிழிந்த தெய்வ*
*மென்னவேயெமது நாப்பண்ணிசையுடன் வசிக்கின்றானல்*
*மன்னவர் பணியும் வேந்தனுன்னதப் புதல்வியாளே*
*யின்னலையகற்றி யுந்தன் சினத்தினை யொழிப்பாயன்னே.*

பொன்னுலகம்=தேவலோகம். இழிந்த=இறங்கிய. நாப்பண் =மத்தியில் இசை=கீர்த்தி.

யாவரினும் சிறந்த அரசி! மாசில்லாமணியே! மகவைதனன் எங்கள் பக்தியில் தெய்வ லோகத்திலிருந்திறங்கிய வோர் தேவனென்ன வெகு சிறப்பாய் விளங்குகின்றனன். அவன் தெய்வாம்சமாய் உதித்தவனாய்த் தோன்றுகின்றானேயன்றி மானிடனாய்க் காணப்படவில்லை. அவனிடத்திலுள்ள ஆழ்ந்த அன்பின் தூண்டலினால் யான் இவ்வாறு சோதனை செய்து பார்த்தேன். கடவுள் மற்றவரைப் படைத்திருப்பதைப் போலவன்றி உன்னை ஓர் சிறிய மாசுமின்றிப் படைத்திருப்பதைக் கண்டு பேரானந்தங் கொண்டேன். தயைபுரிந்து உனது கோபத்தை மாற்றி மன்னித்தருளுவாய். யாவரும் போற்றப்பட்ட அரசியே!

சுந்தராங்கி:—(சந்தோஷத்துடன்) "ஆ! அப்படியா! மெத்த சந்தோஷம். இவ்வரண்மனையில் உமக்குத் தேவையானவற்றை யுதவுதற்குத் தயாரா யிருக்கின்றேன். இங்குள்ள பணிபுரிவோரனைவரையும் உமதிஷ்டத்தின் வாறு ஏவலாம்."

சூரசேனன்:—"மெத்த நன்று அம்மை! யான் உன்னிடத்தில் சிறிய விஷயமொன்றிலொழிய உதவி வேண்ட மறந்து விட்டேன். விஷயம் சிறிதாயினும் அது மிக்க அவசியமானது. அதில் உனது துணைவனும் யானும், மற்றுஞ் சிலரும் சம்பந்தப் பட்டிருக்கின்றனம்."

சுந்தராங்கி:—"ஐயா! அத்தகைய விஷயம் யாது? தயை புரிந்து தெரிவியும்."

சூரசேனன்:—"உனது பிரிய நண்பனும் நாங்கள் சிலரும் ஒன்று கூடிக் கலிங்கதேசத் தரசனுக்கு ஓர் சிறந்த போர்க்கவசம் செய்து காணிக்கையாகத் தர நினைத் திருக்கின்றனம். அதைக் குந்தல தேசத்திலிருக்கு

மோர் சிறந்த கம்மியனைச் செய்வித்து அதை யோர் பெரும் பெட்டியில் வைத்து வாங்கிக் கொணர்ந்திருக் கின்றேன். அது மிகவும் அபூர்வமாய்ச் செய்யப் பெற்று, சிறந்த வைரம் பச்சை முதலிய இரத்தினங் கள் ஏராளமாய்ப் பதிக்கப்பெற்றுப் பலகோடிக திர வியம் விலை மதிப்புள்ளதா யிருக்கின்றது. இந்நகரத் திற்கு யான் புதியவனாதலின் இவ்விரவில் நாங்களிறங்கி யிருக்கும் விடுதியில் அதை வைத்திருக்க அஞ்சுகின் றேன். அதை இன்றிரவு மாத்திரம் தயை புரிந்து பாதுகாத்துத் திரும்பக் கொடுப்பையேல் பேருபகார மாகும்."

சுந்தராங்கி:—"அதற்கு ஆக்ஷேபணை யென்ன! அவ்வாறே செய்கின்றேன். எனது நாயகனவன் அதிற் சம்மந்தப் பட்டிருக்கின்றமையால் அதை மெத்த ஜாக்கிரதை யாய் எனது சயன அந்தப்புரத்திருள் வைத்துப் பாதுகாத்து உம்மிடம் ஒப்புவிக்கின்றேன்."

சூரசேனன்:—"அம்மா! அவ்வுதவி செய்தாற் போதும். அப்பெரும்பெட்டியை எனது ஆட்களின் மூலமாய் இன்றிரவு இங்கு அனுப்புகின்றேன். நாளைக் காலை யில் யான் கலிங்கத்திற்குச் சென்று விடவேண்டும்.

சுந்தராங்கி:—(அன்புடன்) "ஆகா! நாளைக்கே போய்விட வேண்டுமோவென்ன? இன்னம் இரண்டொரு நாட்க ளிருந்துவிட்டுச் செல்ல லாகாதோ?"

சூரசேனன்:—"நாளைக்கே போகவேண்டும். எனது பிர யாணம் நீடிக்குமாயின், யான் வாக்களித்ததற்குப் பழு துண்டாம். குந்தலதேசத்தி னின்று நின்னைக்காணும் அவாவினாலேயே இவ்வளவு தூரம் யான் வந்தேன்."

சுந்தராங்கி:—"உமது சிரமத்திற்கு மெத்த நன்றி பாராட்டு கின்றேன். எனினும் காலையிற் போவதில்லை."

சூரசேனன்:—(இறைஞ்சியவாறு) "அரசி! இல்லை யில்லை. யான் காலையிலேயே செல்லவேண்டும். இவ்வாறு யான் அவசரமாய்ச் செல்வதாய் நீ மனவருத்தம் கொள்ளக்கூடாது. இன்னும் இரண்டு நாட்களில் இக் காணிக்கையை அரசனுக் கீயவேண்டிய தினம் நிச்சயிக் கப்பட்டதாகையால் நான் காலையிற் புறப்பட்டாலன்றி குறித்த தினத்தில் யான் அவ்விடத்திலிருக்க லாகாது. ஆதலின் மதிவதனனுக்கு யாதாயினும் க்ஷேம சமா சார மெழுதுவதாயின் தயை செய்து இன்றிரவே எழுதி வைத்து விடுவாய்."

சுந்தராங்கி:—"அப்படியானால் எழுதிவைக்கின்றேன். உமது பெட்டியை நீர் கூறியவாறே இங்கு அனுப்பிடலாம். வெகு பத்திரமாய் காப்பாற்றி உமதுவசம் ஒப்புவிக் கின்றேன், மெத்த சந்தோஷம்."

சூரசேனன்:—"சென்று வருகின்றேன், பெண்மணி"

(சூரசேனன் சென்று விடுதல்)

## 2 வது அங்கம்

### 1—வது சீன்-மாளவ தேசத்தரசன் மனையிலோர் அறை.

*ஜெயபாலனும் அவன் தோழர்கள் அனுமந்தன் கருணாகரன் என்போரும் சம்பாஷித்தல்.*

ஜெயபாலன்:—'தோழர்காள்! என்ன எனது அதிர்ஷ்டம்! இன்று தமயந்தியைப் யான் கோரிய ஜாகிகள் மன்னிடத்தில் வைத்தையின் நானுமவன் பந்தயம் ஜெயித்தேன். அருகிலிருந்த ருகாடி வேளை மகனொருவன் யான் பிரமாணம் புரிந்தேனென்றும் அரச வம்சத்திலுதித்தோர் சத்தியம் செய்தல் கூடாதென்றும் கூறி அப்பந்தயப் பணத்தை அவன் எடுத்துக் கொண்டனன்."

அனுமந்தன்:—"அவனுக்கு அதற்காக ஒன்றும் கிடைக்கவில்லையா?"

கருணாகரன்:—"நானுமவன் கிடைக்க நன்றோ அது போதாதோ?"

அனுமந்தன்:—"இல்லையில்லை. நமது எஜமானன் அவனது கன்னங்களில ஒன்றுங் கொடுக்க வில்லையோ வென்றேன்.

ஜெயபாலன்:—"ஆமாம். கொடுக்க முயன்றேன். அதற்குள் அவன் எனக்கே சில கொடுத்து விட்டனன். உடனே கோபித்துக்கொண்டு எழுந்துவந்துவிட்டேன். அரச வம்சத்திலுதித்தோரே பிரமாணம் புரியச் சித்தங் கொள்வாரேல் அருகிலிருப்பவர் அதைப்பற்றி எதற்காக ஆக்ஷேபிக்க வேண்டும். பிரமாணத்தை

அவர்களிடத்திலிருந்து யான் கடன் வாங்கினேனோ? அதனால் அவர்களுக்கு நஷ்டமோ வென்ன?"

கருணாகரன்:—"அப்படியாயின் இன்றைக்கு உங்களுக்குப் பெருத்த இலாபம் கிடைத்தது போலும், ஆகா! மெத்த சந்தோஷம்."

ஜெயபாலன்:—"பெருத்த அதிர்ஷ்டமே. யான் சூதாட ஆரம்பித்த இத்தனை வருஷங்களாய் தினந்தினம் எத்தனையோ ஆயிரம் பவுன்களைக் கொடுத்தறிவேனே யன்றி வாங்கியறியேன். இன்றைக்குத்தான் நூறு பவுன் ஜெயித்தேன். ஜெயித்தேனென்றபெயர் கிடைத்தால் போதுமானதாதலினால் பவுன்களை வேறொருவன் கொண்டு போனதினால் விசனமில்லை."

கருணாகரன்:—"ஆமாம் மகாப பிரபு! இக்கலி காலத்தில் நீங்களே கர்ண மகாராஜனென்ன இசருத மகா சபையார் சொல்லி யுங்களைப் பலவாறு புகழுகின்றனர். இது வரையில தினம் பெருத்த பொருளை யீநது வநதது போலவே இனியும கடைசி வரையில கொடுத்து வருவதே தங்கள் உதாரததிற் கழகு. யாவரும உங்களை எப்பொழுதும் அவ்வாறே புகழுவர். நீஙகள ஏழைகளுக கிவ்வாறீந்து உதவாவிடில, நூற்றுக் கணக்கான சூதர்களும், அவர்களை நம்பிக் கள்ளு சாராயம் முதலிய கடைகளை இரவு முழுநாள் திறநது வைதுத வண்ணங் காத்திருக்கும ஏழைகளுக்கும் யார் கொடுத்துக் காபபாறறப போகின்றனர். உஙகளது ஈகையே ஈகை. அதை நிறுதத ஒருபோதும் மனங் கொள்ளாதீர் மகாப பிரபு!"

ஜெயபாலன்:—(சநதோஷத்துடன்) "அப்படியா! என்னைப் புகழுகின்றார்களா? மெத்த திருப்தி. யான்

அங்கு செல்லாவிடின் பகலில் எனக்குப் பொழுது எவ்வாறு கழியும். மிக்கக் கஷ்டமாயன்றோ முடியும்."

கருணாகரன்:—"சூதாடுதற்குப் பகற் பொழுது போதாமல் இரவிற்கூட கடன் வாங்கி விடுகின்றீர்களென்று உங்கள் பிராண சுந்தரி ஜெகன்மோகினி என்னிடம் அடிக்கடி தெரிவிக்கின்றனள்."

ஜெயபாலன்:—"ஆமாம். இனி அவ்வாறு செய்யாமலிருக்க முயலுகின்றேன். தாசி ஜெகன்மோகினி என்னிடத்தில் எவ்வளவு வாஞ்சையை வைத்திருக்கின்றனள். அவள் என்னையே உயிராய் மதிக்கின்றனள். யான் இரவிற் சிறிது தாமதித்து அவள் மாளிகைக்குச் செல்வேனாயின், அவள் என் மீது பெருத்த கோபங் கொள்கின்றனள். வாசற் கதவையும் நெடிய நேரம் திறக்காமலிருந்து தனது அன்பினாலுண்டான கோபத்தைப் புலப்படுத்துகின்றனள்."

அனுமந்தன்:—"ஆமாம். மகாப் பிரபு! அவள் உங்களைத் தனது உயிராய் மதித்திருக்கின்றனள். ஆதலின் அவள் உங்களைக் காணாது எவ்வாறு பொறுப்பள். நீங்கள் அவ்விதம் புரிவது தகுதியன்று."

கருணாகரன்:—"அது உண்மையென யானுங் கேள்விப்பட்டேன். அவள் வீட்டிற்கு அடுத்த வீட்டிலிருக்கின்ற அதிரூபன் என்னும் புருஷன் அதைத் தான் நேரிற் கண்டதாய் உறுதி கூறினன். இரவுகளில் நீங்கள் நெடிய நேரங்கழித்து அவள் வீட்டிற்கு வருவதாயும் அது வரையில அதிரூபன் உள்ளே யிருந்து அவளுடன் சூதாடிக் கொண்டிருப்பதாயும், நீங்கள் முதலி

மேலேய வந்துவிடாமல அவாகள சந்தோஷமாய ஆடிக் கொண்டிருக்கையில வருவதால், அவள் உங்கள் மீது கோபங்கொண்டு கதவைத்திறக்காமல் வெளியிலேயே நெடிய நேரம் நிறுத்திவைப்பது உண்மை யென்றும் அவன் தெரிவித்தனன்."

ஜெயபாலன்:—(சந்தோஷத்துடன்) "பார்த்தீர்களா! யான் சொன்னது உண்மையாய் முடிந்ததல்லவா! அவளது அன்பே அன்பு! என்னிடத்தில் எவவளவு மரியாதை யைய பாராட்டுகின்றனள் பார்த்தீர்களா? அதிரூப னோடு தான் குதாடுவதை யான் அறியாவாறு அவனை என் கண்ணிறபடாத வண்ணம தினம் அனுபபி விடுகின்றனளே! ஆகா கா! என்ன மரியாதை! யான் இதுவரையில் சிநேகித்த வேசைகள் யாவரினும் இவளை யொதத நற்குண முள்ளோரைக் கண்டதே யில்லை."

கருணைகரன்:—"மகாப்பிரபு! நீங்கள் உண்மையையே யன்றி வேறொன்றையுந் தெரிவிப்பதுண்டோ? ஒரு போது மில்லை. அவள் ஆழ்ந்த அன்பைக் கொண்டிருத்தலி னாற்றான் தினந்தினம் விலையுயர்ந்த பல புதிய புதிய ஆடையாபரணங்களை யணிந்து கொண்டு உங்களுக்கு முன் அழகாய்த் தோன்றுமாறு, அவற்றைக் கொண்டு வந்து கொடுக்கும்படி வேண்டுகின்றனள். இன்று அவள் எவ்விதமான நகைகளை யணியப்போகின் றனள்."

ஜெயபாலன்:—(விசனத்துடன்) "ஆகா! தோழர்காள்! அதே எனக்குப பெருத்த விசனமா யிருக்கின்றது. யான் இதுவரையில் எனது உடன் பிறந்தவளான சரசாங்கியின் பெட்டிகளிலிருந்த நகைகளை வாரிவாரிக்

கொணர்ந்து கொடுத்துக் கொண்டிருந்தேன். அதனால் இது வரையில் அநேகம் பெட்டிகள் காலியாய் விட்டன. இதையறிந்த மகாராணி அவற்றை இப்பொழுது தனது அந்தப்புரத்தில் வைத்துப் பூட்டி விட்டனள். இன்றைக்குக் கொடுக்க வழியில்லாது தத்தளிக்கின்றேன். நண்பர்காள என்செய்வேன் ?"

அனுமந்தன்:—"அப்படியாயின் இன்றைக்கு ஜெகன் மோகினி வீட்டிற்குப் போகாமலிருக்க நேருமோ ?"

கருணாகரன்:—"உங்கள் பிராணகாந்தையான சுந்தராங்கியின் அந்தப்புரத்திற் பல நகைப் பெட்டிகள் கிடக்கின்றன. அவற்றிலொன்றை எடுத்து வந்து விடுங்கள். மகாப் பிரபு !"

ஜெயபாலன்:—"ஆமாம். கருணாகர ! நீ கூறியது சமயோசிதமான தந்திரம். உனது புத்தி கூர்மையை என்னென்னப் புகழுவேன். இன்று அவ்வாறே செய்கின்றேன். யான் ஓர் நாள் ஜெகன்மோகினி வீட்டிற்குச் செல்லாவிடின் அவள் என் மீது சீற்றங் கொண்டு சுந்தராங்கியிடத்தில் வந்து உண்மையை முற்றும் தெரிவித்து விடுவதாய் கூறுகின்றனள். என்மீது கொண்ட ஆழ்ந்த அன்பினால் அவள் என்னைப் பயமுறுத்தியேனும் வரவழைத்துக் கொள்ளுகின்றனள்."

கருணாகரன்:—"அதற்குத் தடையென்ன ! எனினும் நீங்கள் நகைப் பெட்டியுடன் போதலே நன்று. இல்லையாயின் அவளது கோபம் தணியாது."

அனுமந்தன்:—"மகாப் பிரபு ! சுந்தராங்கியின் அந்தப்புரத்திற்கு யாரோ ஒருவன் புதிதாய் வந்திருக்கின்றனனே அதை அறிவீர்களா ?"

ஜெயபாலன்:—"ஆகா! அவன் யாவன்? எனக்குத் தெரியாதே!"

கருணாகரன்:—"அவன் கலிங்க தேசத்தானும், மதிவதனனது நண்பனென யாவரும் நினைக்கின்றனர்."

ஜெயபாலன்:—"மதிவதனன் ஓர் துர்த்தன் இவனும் அவனுக்குத் தோழனாயிருப்பன். அவன் வந்ததைப் பற்றி யார் உங்களுக்குத் தெரிவித்தது?"

கருணாகரன்:—"உங்கள் சேவகரில் ஒருவனே புகன்றனன்"

ஜெயபாலன்:—"ஆயடியா! மெத்த நன்று. நான் சென்று அவனைப் பார்ப்பது எனது கௌரவத்திற்குக் குறைவாகுமோ?"

கருணாகரன்:—"உங்களிடத்தில் அகௌரதை யிருந்தாலன்றோ அதை விட்டு இனி நீங்கள் கௌரதையைச் சம்பாதிக்க வேண்டும். ஆதலின் உங்களுக்குக் கௌரதையே தேவையில்லது. சென்று பார்க்கலாம்."

ஜெயபாலன்:—"அவனைப் பார்ப்பவனைப் போலச் சென்று அவனது நகைப் பெட்டிகளிற் பொன்னை எடுத்துக் கொண்டு வந்து விடுகின்றேன். நீங்கள் இவ்விடத்தில் இருங்கள்."

(ஜெயபாலன் சென்று விடுதல்)

கருணாகரன்:—"ஆகா! பேயினும் மிக்க வலியினையும், நரியினும் அதிகமான கபட தந்திரங்களையுங் கொண்ட இவனது தங்கைக்கு முன்னர் இவர்களின் தாய் இத்தகைய மகிஷத்தைப் புதல்வனைப் பெற்றது பெரும் விந்தையே! அவளோ தனது சிறந்த சாமர்த்தியத்தினால் மற்ற யாவரையும் தனக்குக் கீழ் அடக்கி யாளு

கின்றனள். இவன் எட்டும் இரண்டும் பத்தென்பதை யறியாத மூடர் சிரோன்மணியாய்ப் பிரகாசிக்கின்றனன். ஐயோ! தெய்வாம்சத்துடனுதித்த சுந்தராங்கி! உனது கதியும் இப்படி யாயிற்றே! தனது இளம் மனையாட்டியின் மைபவி லாழ்ந்த பேதையான அரசனால் உனக்கு எத்தகைய துன்பம் சம்பவித்தது! உனது மனதைக் கவராத சீலனாகிய மதிவதனனது மலத்திறகும் ஒப்பிலாத இவனை மணக்க நீ மனங் கொள்ளா திருப்பது தெய்வ கடாக்ஷமே. கடவுள் கடைசி வரையில் இவ்வாறே உன் மனதை உறுதிப்படுத்தி உனது அன்பனையும இப்பெரும இராசசியத்தையும் உனக் களிப்பாராக!"

(தோழரும் சென்று விடுதல்)

(2-வது சீன்—சுந்தராங்கியின் சயனவறை—
ஓர் புறத்தில் சூரசேனனால் அனுப்பட்ட
பெட்டி வைக்கப்பட்டிருத்தல்.)

சுந்தராங்கி தனது சப்பிரமஞ்சத்தில்
சாய்ந்து கொண்டிருத்தல்.

சுந்தராங்கி :—

(புரோவ சமய மீதே ராமையா)

பல்லவி.

ஆவி யென்னையே நீங்கி யகலுதே

அனுபல்லவி.

பாவி யெந்த னுயிர்—பதரித் தள்ளாடுதே
மேவுவது முண்டோ வெந்தன் தொல்லை நிலை (ஆ)

சரணம்.

நாட்களும பலவே—நடந்த விரைந்து
வேட்கை யென்னும் பிணி—வெதுப்புதே யுடலை
மாட்சியை யுடையான் மதிவதன னது
மீட்சி யென்றோ வென்ன வேங்குதே யென் மனம் (ஆ)

யாரங்கே! அடி பத்மாவதி!"

பத்மாவதி:—"அம்மா! இதோ வந்தேன்"

சுந்தராங்கி:—"இப்பொழுது நேரமென்ன?"

பத்மாவதி:—"அனேகமாய் கடுநிசியாயிற்று. அரசியே."

சுந்தராங்கி:—நான் இந்த மூன்று மணி நேரங்களாய் இப் புஸ்தகத்தைப் படித்துக் கொண்டிருப்பதினால், கண்கள் நோக வாரம்பிக்கின்றன. நித்திரையும் என் மீது தன் வலையை வீசி விட்டது, கண்ணிமைகள் தாமே மூடிக்கொள்ள வாரம்பிக்கின்றன. யான் சயனித்துக் கொள்ளுகின்றேன். இப்புஸ்தகத்தில் யான் படித்து நிறுத்திய விடத்திற்கோர் அடையாளம் வைப்பாய். ஓர் விளக்கைத் தவிர மற்றவற்றை அவித்து விட்டு நீயும் சயனித்துக்கொள். விடியற்காலை 5 மணிக்கு விழித்துக் கொள்வையாயின் தயவு செய்து என்னை எழுப்புவாய்."

பத்மாவதி:—உத்திரவின் வாறே செய்கின்றேன் அம்மா."

(பத்மாவதி ஏவப்பட்டவாறு புரிந்து விட்டு
ஓர் புறத்தில் நித்திரை செய்தல்)

சுந்தராங்கி:—(சப்பிரமஞ்சத்தில் சயனித்துக் கொள்ளுமுன்
கடவுளைத் தியானித்தல்)

(காம்போதி)

"இன்னமுது கனிபாகு கற்கண்டு சீனி தே
னென ருசித்திட வலிய வந்
தின்பங் கொடுத்த நினையெந் நேரநின் னன்ப
ரிடையரு துருகி நாடி
யுன்னிய கருத்தவிழ வுரைகுழறி யுடலெங்கு
மோய்ந் தயர்ந்த வசமாகி

யுணர்வரிய பேரின்ப வனுபூதி யுணர்விலே
யுணர்வார்க ளுள்ளபடி காண்
கன்னிகை யொருத்தி சிற்றின்பம் வேம்பென்னினுங்
கைக்கொள்வள் பக்குவத்திற்
கனைவ னருள்பெறின் முனே சொன்னவா றென்னெனக்
கருதி நகையாவ ளஃதுபோற்
சொன்னபடி கேட்குமிப் பேதைக்கு நின்கருணை
தோற்றிற் சுகாரம்ப மாகும்
சுத்தநிர்க் குணமான பரதெய்வமே பரஞ்
சோதியே சுக வாரியே"

(சுந்தராங்கி படுத்துக் கொண்டு நித்திரை செய்தல்).

கொஞ்ச நேரத்திற்குப்பின், பெட்டிக்குள் ளிருந்த சூரசேனன் அதைத் திறந்து கொண்டு வெளியே வருதல்.

சூரசேனன்:—(பிரமித்து) "ஆகா! என்ன! இவளது காந்தி!

(நந்தன்சரித்திரம்—இது தானோ தில்லைஸ்தலம்)

பல்லவி.

இவள் தானோ-பஞ்சபாணன்
இங்கித நாயகி ரதி. (இ)

சரணங்கள்.

(1) பவளக் கொடியோ யிவள் பஞ்சணையினும் மிக்கத்
தவள நிறமுடையாள் சந்தப்பதுமையோ. (இ)

(2) பாற்கடலதனிலே—பதுமமென்றே தவழ்
வேற்கண்ணியி னைக்கண்டு மிகமனஞ் சலிக்குதே

(3) அவனிதனிலேயுள்ள-சுவை முழுது மொன்றாய்
தவமியற்றிய தா-லிவளுருவாயிற்றோ. (இ)

ஆகா! என்ன இவளது கட்டழகு! இவள் இப்பூலோகத்து பனிதருகமே அருகலாகாள். இவளைக் கடவுளே

---

தவளம=வெண்மை. பதுமம=தாமரை மலர். வேற்கண்ணி=வேல போன்ற கண்ணையுடையவள்.

(2) பூரணசந்திர னென்ன முகம் மின்ன ஜடைப்பின்ன-லொடு
கோதையும் நாகமாய்த்தன்ன—வது
குளிர்மாமதி தனைமேவியே வளைகேதுவி னுருவேயெனக்
கோதையின் சுந்தர-வதனம்-தோன்றக்
கண்டிட விருசுதே-விதனம்.

ஆகா! இவள் முகம் பூர்ணசந்திர பிம்பமோ! சந்திரகிர கணம் பூமியிலேதா? இவள் தலைமயிரும் அதினின்று விசாலமாய்ப் பின்னி விடப்பட்டிருக்கும் பின்னலும் படத்தை விரித்துக் கொண்டு கேது இச்சந்திரனை விழுங்குவது போலத் தோன்றுகின்றதே! சே! இதென்ன பேதமை! யான் இவ்வாறு பிரமித்து நிற்பேனாயின் இவளது அழகை முற்றுங் கண்டனுபவிக்க ஓர் யுகமும் போதாது. ஆதலின் யான் வந்த காரியத்தைக் கவனிக்கின்றேன், இவளது சயன அறையிலுள்ள பொருட்கள் இன்னின்ன வென்பதை எழுதிக் கொள்ளுகின்றேன். 'இன்ன படங்கள் மாட்டப்பட்டிருக்கின்றன வென்றும் இன்ன விடத்தில் பலகணிகள், நிலைக்கண்ணாடிகள், சப்பிரமஞ்சம் முதலிய இருக்கின்ற வென்றும், அவை சயனித்திருக்கப் பெற்ற களிமட எவ்வாறிருக்கின்றதென்பதையும், எவ்வாறு அலங்கரிக்கப் பெற்றிருக்கின்றதென்பதையும் இவற்றைப் போன்ற மற்ற விவரங்களையும் தெரிந்து கொள்ளுகின்றேன். அடிக்கடி மாறக் கூடிய இவ்வகையும் பொருட்களை ஆயிரக்கணக்கில் அறிந்து கொள்வதினும் அவள் உடம்பில் இரகசியமான இடங்களில், இயற்கையில் யாதாயினும் அடையாளங்கள், அல்லது மச்சம் முதலிய ஒன்றிருத்தலைக் காணினும் அது போதுமான சாட்சியாம். அடி! நித்திராதேவியே! இவ்வமயத்தில் என் பக்கத்திலிருந்து உதவி புரிவாய். யான் அவளை யணுகி உற்று நோக்கிவிட்டுச் செல்லும் வரை நீ அவளை நன்றாய்ப் பற்றிக்கொள்வாய். ஆகா! இவள் கை விரலி

விருக்கும் இம் மோதிரத்தையும் எடுத்துக் கொள்ளுகின்றேன். விழித்துக் கொண்டால் என் செய்வது? கை தலையணையின் மீது தனியாய்க் கிடக்கின்றது. கையில் படாமல் மோதிரத்தை மெதுவாய் இழுத்துப் பார்க்கின்றேன். இலேசில் நழுவி விடுமாயின் எடுத்துக் கொள்ளுகின்றேன். ஆகா! தொடுவதற்குள் வந்து விட்டதே! இதுவும் எனது பாக்கியந்தான். இதைக் காட்டுவேனாயின் இவளது பிராண காந்தனான பதிவதனனுக்குப் பைத்தியம் பிடித்தற்குத் தடையென்ன? ஆகா! இவளது மார்பில் ஓர் சிறிய மச்சமிருக்கின்றதே! இம்மச்சத்தின் அழகே அழகு!! நீயோரும் நல்லோருக்குக் கிடையிலிருப்பரேல் நன்கு பொலிவரென்பதை இப்பொழுதே யான் பிரத்தியக்ஷமாய் அறிந்தேன். இவ்வடையாளம் ஒன்றே போதும், இதை அவனிடத்தில் உரைப்பேனாயின் யான் இவளது கற்பைக் களங்கப்படுத்தி விட்டதாகவே உறுதியாய் நிச்சயிப்பன். இதை நான் எழுதிக் கொள்வானேன்? இது என்றும் அழியாவாறு என் மனதிற் பதிந்து விட்டது. இவள் நெடுநேரம் இப்புஸ்தகத்தைப் படித்துக்கொண்டிருந்தாள் போலும். ஆகா! இது நளன் சரிதமன்றோ? அன்னம் வஸ்திரத்தை யபகரித்துச் சென்ற விடமாய்த் தோன்றுகின்றது.—போதும் போதும். எனக்குத் தேவையானதிற்கு அதிகமாய்ச் சாக்ஷிகள் சம்பாதித்து விட்டேன், நேரமாகின்றது. யான் பெட்டிக்குட் சென்று மூடிக்கொள்ளும் விசையை அழுத்துகின்றேன். ஐயோ! பயம் என்னை எவ்வாறு நடுக்குவிக்கின்றது! இலக்ஷ்மி போன்ற இப் புண்ணியவதியின் சுவர்க்கத்தை யொத்த இனிய அந்தப்புரத்தி லிருப்பினும் நரகமேதனை இப் பெட்டிக்குள்ளே தானிருக்கின்றது. உள்ளே செல்லுகின்றேன்"

(பெட்டிக்குள் சென்று திரும்ப மறைந்துகொள்ளுதல்)

3—வது சீன்—சுந்தராங்கி சயன—
அந்தப் புரவாசலிலுள்ளதோர் மண்டபம்.

ஜெயபாலன்; அனுமந்தன், குணசேகரன்
மூவரின் சமபாஷணை.

அனுமந்தன்:—"நேற்றிரவு ஜெகன்மோகினி என்ன அவதார மெடுத்தனள்."

குணசேகரன்:—"நமது எஜமானனது வாடிய வதனத்தை நோக்க அவள் நரசிம்மாவதாரமே எடுத்திருப்பளென்பது புலப்படுகின்றது. எனினும், உண்மையை யானறிந்தேனில்லை. நான் யூகித்துச் சொன்னது குறைவாய்க் கூறியதாய் ஏற்பட்டாலும் ஏற்படலாம். ஏனெனில் அதற்கு மேலும் யாதாயினும் நடந்திருக்கலாம். அதை நமது எஜமானரே தெரிவிக்க வேண்டும்."

ஜெயபாலன்:—"ஐயோ! நண்பர்காள்! அதை என்னெனத் தெரிவிப்பேன். நேற்றையதினம் சுந்தராங்கியின் அந்தப்புரத்திலுள்ள நகைப் பெட்டியை எடுக்க எவ்வாறு முயன்றும் சரிப்படாது போயிற்று. அப்படுபாவி பத்மாவதி நாயைப்போல அவளுடைய அந்தப்புரத்தை விடுத்தகலாதிருந்தனள். அதனால் ஒன்றும் எடுக்க முடியாமற் போயிற்று. என் செய்வேன்! "இன்றிரவு நகைகள் கொண்டு வரச் சரிபடவில்லை. ஆதலின் நேற்றுக் கொடுத்த நகைகளையே இன்று அணிந்து கொள்" ளென யான் ஓர் சேவகன் மூலமாய் ஜெகன்மோகினிக்குத் தெரிவித்தேன். அவள் தனக்குடம்பு அசௌக்கியமா யிருப்பதாயும் இரவில் வரவேண்டா மென்றும் நாளைய தினம் வரலாமென்றும் பதில் சொல்லியனுப்பினள். எனது உயிரைப் போன்ற அவளது திரேகம்

அசௌக்கியமா யிருக்கையில் நான் அவளுக்கு அருகிலிருந்து அவளுக்குத் தேவையான உபசரணை புரிவதே உத்தம மென நினைத்து யான் வழக்கம் போல அவள் இல்லத்திற்குச் சென்றேன். நேற்றிரவு வழக்கத்திற்கு விரோதமாய் மிக்க இருட்டா யிருந்தது. ஆகா! அவள் வீட்டு வாயிற்கதவை யான் எவ்வித மிடித்தும் அவள் கதவைத் திறக்கவே யில்லை. அவளது தேக அசௌக்கியத்தினால் எழுந்து வந்து திறக்க முடியவில்லை போலிருக்கின்றது. யான் நடுநிசி வரையில் இடித்தும் பயன்படவில்லை அதன் மேல் அரண்மனைக்குத் திரும்பி வர நினைத்தேன். சேவகர் அரண்மனை வாயிற் கதவைத் திறவாராதலின், திரும்பிச் செல்ல முடியவில்லை அவள் வீட்டுத் திண்ணையில் மருந்தம் முதலியவை ஒன்றுமின்றிச் சயனித்திருந்தேன். இரவு முழுதும் நித்திரையே கிடையாது.

கருணாகரன்:—"மகாபிரபு! இன்று காலையில் யான் ஓர் விசேஷம் கேள்விப்பட்டேன்."

ஜெயபாலன்:—(முகம் மாறி) "என்ன விசேஷம்?"

கருணாகரன்:—"விசேஷம் ஒன்றுமில்லை. லோகத்து சுற்றி வரும் பாராக்காரர்களால் இதைப்பற்றிக் கேள்விப்பட்டேன்".

ஜெயபாலன்:—(முற்றும் முகம் மாறிக் கோபத்துடன்) "அந்தப் போக்கிரிகள் சொல்லுவது சுத்தப்பொய்."

கருணாகரன்:—"யான் தெரிவிப்பதற்குள் அது இன்னதென்பதை எப்படி அறிந்தீர்கள்."

ஜெயபாலன்:—(தடுமாறிய குரலுடன்) "இல்லையில்லை, அவர்கள் போக்கிரிகளா யிருக்கலா மென நினைத்தேன்.

ஆதலின் அவர்கள் சொன்னது பொய்யா யிருக்க வேண்டு மென்பது எனது எண்ணம். எனினும் அதை இன்ன தென அறியேன். அவர்கள் என்ன சொன்னார் கள்?''

கருணாகரன்:—'' அவர்கள் லோர்ந்து சுற்றிவரும் போது, ஜெகன் மோகினியின் வீட்டுத் திண்ணை மூலையில் யாரோ திருடன் மறைந்து கொண்டிருந்ததாயும் அவனையவர் பிடித்து யாரெனவினாவ அவன் ஒன்றும் பதிற் சொல்லவில்லையாம். அவர்கள் உடனே சந்தேகித்துத் தமது குட்டைத் தடிகளினால் அவனை நன்றாய் மொத்தி டாணாவிற்கு இழுத்துக்கொண்டு போனபின் அங்கிருந்த வெளிச்சத்தினால் பார்க்க அவன் எங்கள் எஜமானராய் மாறிவிட்டனனாம். ஆகா! அந்த அயோக்கியப் பேதைகள் பொய் சொல்லி யிருக்கலாமெனவுந் தோன்றுகின்றது.''

ஜெயபாலன்:—(வெட்கித் தலைகுனிந்து) ''ஆமாம் அவர்கள் என்னை அதிகமாய் அடிக்கவில்லை. என்னைப் பிடித்துக் கொண்டவுடன் யான் இன்னானெனத் தெரிவித்தேன். உடனே என்னை விட்டு விட்டுப்போயினர்''

கருணாகரன்:—'' நீங்கள் நித்திரை செய்ய இடமில்லாது வருந்துகின்றீர்களென நினைத்து அவர்கள் உங்களை அதன் பின்னர் டாணாவிலாவது சயனித்துக் கொள்ளுமாறு அழைத்துப் போயிருக்கலாம்.''

ஜெயபாலன்:—''ஆமாம்! குணசேகரா! டாணாவிலிருந்தோர் பாய் தலையணை முதலியவற்றைக் கொடுத்தனர். விடியற்காலையில் எழுந்து யாருமறியாவாறு எனது அந்தப்புரத்திற்கு வந்து சயனித்துக் கொண்டேன். உடனே பொழுது விடிந்துவிட்டது.—இந்த அறிவில்

லாத பேதை சுந்தராங்கியை யான் மணக்க விரும்பு வதின் காரணமென்ன அறிந்தீரா? தினமும் சூதாடு தற்கும், ஜெகன்மோகினிக்குக் கொடுத்தற்கும் தேவை யான பொருளையும் நகைகளையும் அவளிடத்திலிருந்து பெறலாமெனும் நோக்கத்துடனே தான். அதன் பொருட்டுத்தான் யான் இவ்வளவு பாடுபடுகின்றேன். அதிகாலையில் அவளுடைய அந்தப்புரத்தின் வாயிலில் வந்து இனிய வாத்தியங்களுடன் சங்கீதம் பாடி அவ ளைத் துயில் நீக்கின் அவள் மனதிரங்குமெனக் கேழ் விப்பட்டு அவ்வாறு செய்துவருகின்றேன். அதினாலே தான் எனது படுக்கையை விட்டுவிரை மனமற்றவனு யிருந்தும் அதிகாலையில் எழுந்துவந்தேன்.''

அனுமந்தன்—'' ஆகா! இப்பொழுது அனேகமாய்ப் பக லாய் விட்டதே, மகாபிரபு! சுந்தராங்கி இன்னம் எழுந்திராதிருப்பளோ வென்ன!''

ஜேயபாலன்—'' ஏன் இன்னமிந்தப் பாடகர்கள் வரவில்லை?''

(ஓர்புறத்திலிருந்து பாடகர்கள்வாத்தியங் களுடன் வருதல்).

பாடகர்—'' மகாப்பிரபு! நாங்கள் காலையிலிருந்து நெடிய நேரமாய் உங்கள் வரவை எதிர்பார்த்தவண்ணம் இங் கேயே இருக்கின்றோம்.''

ஜேயபாலன்—'' மெத்த சந்தோஷம்.'' எங்கே! ஆரம்பம் செய்யுங்கள் பாா்க்கலாம். வாத்தியத்தினைத்தடவும் சாமர்த்தியத்தினாலும், வாய்ப்பாட்டின் இனிமையினா லும், அவள் மனதைக் கவரவேண்டும். அப்பாட்டி லடங்கிய சொற்களும் பொருளும் மிக்கச் சுவையுள் ளனவாயிருத்தல் வேண்டும்.''

பாடகர்—(பாடுதல்)

(இராகம்-பிலஹரி)

ஆதவ னுதித்தன னுலகடல் விலகின
னட ரிருளகன்றது சுடரொளி விரிந்தது
போதுகள் நகைத்துமே மதுவினை யுகுத்தன
பொதுளிய பரிமளந் தூவின மாருதம்,
கீதமெழுந்தது யாழ்முடிவோ டிமிழ்
கின்னர முதலிய சொரிந்தனவமுத
மோதிம மாடின வொலித்தன குயிலினம்
சுந்தராத தெரிவையே துயிலெழல் புரிவாய்.

ஜெயபாலன்—"பேஷ்! பேஷ்! பலே! இப்பாடலால் அவள் மனதிளகுமேல், அப்பொழுதுதான் இது இனிமை யுடையதென்று நினைப்பேன். இல்லையேல் உமது வாத் தியங்களின் கம்பி முதலியவற்றை அறுத்து ஆற்றிற் போடுங்கள். உங்கள் குரலையும் கழுதைக் குரலாய் மதிப்பேன் செல்லலாம்."

(பாடகர் சென்றுவிடுதல்)

(அரசனும் சரசாங்கியும் வருதல்)

அனுமந்தன்—"மகாப்பிரபு! அதோ நமது வேந்தனும் மகா ராணியாரும் வருகின்றனர்."

பிரதாபசிம்மன்—"ஜெயபாலா! குழந்தாய்! யான் கூறிய வாறு செய்துகொண் டிருக்கின்றனையோ? மெத்த சந் தோஷம்! இன்னம் என்று புத்திரி பிடிவாதத்துட னிருக்கின்றனளோ? அவள் இன்னும் வெளியில் வர வில்லையோ?"

---

ஆதவன்=சூரியன் போதுகள்=புஷ்பங்கள் உகுத்தன= சொரிந்தன பொதுளிய=நெருங்கிய யாழ்=வீணை முழவு=மத்த ளம் இமிழ்=இனிமை ஓதிமம்=அன்னம்.

ஜேயபாலன்—" யான் சங்கீதப் பிரயோகம் செய்தும் அவள் சிறிதும் கவனித்ததாகப் புலப்படவில்லை."

பிரதாபசிம்மன்—" அப்படியா! அவளுடைய தோழனாகிய அவ்வேழை சமீபத்தில் நகரத்தைவிடுத்துச் சென்றது இன்னம் இவளை வருத்துகின்றது போலும். அவனை இன்னம் மறக்கவில்லை. சிறிதுகாலம் செல்லச் செல்ல அவன் நினைவு இவள் மனதைவிட்டுப் படிப்படியாய் ஒழியும். அதன் பின்னர் இவள் உனக்கே உரியவள்."

சரசாங்கி—" எனதரிய சகோதரா! நமது அதிபர் உன் விஷயத்தில் புரியும் உதவி எல்லையற்றது. அதற்கு உனது ஆயுட்காலம் முற்றும் நீ நன்றிபாராட்டற்குரியவன். தனது செல்வி உன்னை விரும்புதற்குரிய பல சாதனங்களையும் புரிந்து வருகின்றனர். நீ சுந்தராங்கியிடத்தில் முரட்டுத்தனமாய் நடந்துகொள்ளாமல் மிக்க மரியாதையைப் புலப்படுத்தி அவளுடைய மனப்போக்கிற்கியைய சமயோசிதமாய் நடந்துகொள்வாய். அவளிடத்தில் நீ செய்யும் மரியாதை உபசரணை முதலியவற்றை இயற்கையாய்ச் செய்வதைப்போலத் தோற்றுவிப்பாய். வேணுமென்று நலிந்து செய்வதாய்ப் புலப்படுத்தல் கூடாது. அவள் யாது பணிக்கின்றனளோ அதைச் செய்யத் தவறாதே. உன்னை அவள் மணக்காதிருக்க நினைத்துவிடும்படி நீ இடங்கொடுப்பையேல் நீ பெரும் பேதையே."

ஜேயபாலன்—" பேதையா? அப்படியில்லை."

(ஓர் சேவகன் வருதல்)

சேவகன்—(பணிந்து) " இராஜாதிராஜனே! கலிங்கதேசத்திலிருந்து தூதுவர் வந்திருக்கின்றனர். அவர்களிற்

பராக்கிரமபாகு வென்பவன் முக்கியஸ்தன்."

பிரதாபசிம்மன்—"ஆகா! பராக்கிரமபாகுவா! அவன் மிக்க யோக்கியன், எனினும் இப்பொழுது வந்திருப்பது நமக்கு விரோதமான விஷயமாயிருக்கலாம். அது அவனுடைய குற்றமன்று. அவனை அனுப்பினவனது மேம்பாட்டிற்கிணங்க இவனுக்கு யான் உபசாரணைபுரிய வேண்டியதவசியம். பிறகு; இவன் இதற்குமுன்னர் என் விஷயத்திற காட்டியிருக்கும் அபிமானத்தை யுத்தேசிக்க, இவனுக்கு உபசாரணை செய்ய யான் கடமைப் பட்டிருக்கின்றேன்.—அடே! குழந்தாய்! ஜெயபாலா! நீ உனது நாயகியைக் கண்டு உனது அன்பைப் புலப்படுத்திவிட்டு எங்களிடம் வரவேண்டும். இக்கலிங்கத்தானிடம் யான் உன்னை அனுபபவேண்டும்?—பிரிய சுந்தரி! சரசாங்கி, நாம் செலவோம வருவாய்."

(ஜெயபாலனைத்தவிர மற்றவர் யாவரும் சென்றுவிடுதல்).

ஜெயபாலன்—(தனக்குள்) "இவள் விழித்துக்கொண்டிருப்பளாயின் யான் அவளுடன் உரையாடுகின்றேன். இல்லையேல் அவள் சுகமாய் நித்திரை செய்யட்டும். நான் எழுப்புவதில்லை—அடி! பத்மாவதி! அடி! பத்மாவதி! (கதவைத் தட்டுதல்) இவளிடத்தில் அநேகம் தாதியரிருக்கின்றனர். ஒருவளாயினும் கதவைத் திறந்தாளில்லையே! ஆகா! அவர்களில் ஒருவளை யாதாயினும் இலஞ்சம் கொடுத்தாயினும் என் வசப்படுத்திக் கொள்ளலாமென நினைக்கின்றேன். பணம் எக்காரியத்தையும் முடிக்குமன்றோ, அதனால் எச்செயல்தான் பலியாது!

(இராகம்—தோடி)

" திருமகள்கடா க்ஷமுண் டானு லெவர்க்குஞ்
சிறப்புண்டு கனதை யுண்டு
சென்றவழி யெல்லாம் பெரும்பாதையாய்விடுஞ்
செல்லாத வார்த்தை செல்லும்
பொருளொரு தரும்புமரி யாதையாஞ் செல்வமோ
புகல் பெருக்காறு போலாம்
புவியின் முன் கண்டுமறியாதபேர் பழகினவர்
போலவே நேசமாவார்
பெருமையொடு சாதியிலுயர்ச்சி தருமனுதினம்
பேரும் பிரதிஷ்டையுண்டாம்
பிரியமொடு பகையாளி கூடவுறவாடுவான்
பேசினிற் பிழைவராது
வருமென நினைத்த பொருள் கைகூடிவருமதிக
வல்லமைகண் மிகவுமுண்டாம்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே."

என்று பொருளினுற் கிடைத்தற்பால வற்றைத்தெரிவிக்கின்றன ரன்றோ. பணம் எதையும் செய்யும், எதையும் வெல்லும், எதையும் அழிக்கும். அது கொலை புரிந்தோனைத் தப்பிக்கும். குற்றமற்றவனைத் தூக்கில் மாட்டுவிக்கும். அதனாலாகாத காரியமுண்டோ ! இததாதியரி லொருவனை எனக்குப் பதிலாய் வக்கீலாய் நியமித்து விடுகின்றேன். ஏனெனில் எனது விவாதத்தையானே நன்றுயறிந்தேனில்லை அடி பத்மாவதி !"

(திரும்பக் கதவிடித்தல்)

பத்மாவதி:—"யாரங்கே"

ஜெயபாலன்:—"நான்தான்"

பத்மாவதி:—"நான்" என்ற அந்த அகங்காரப் பேய் இன்னதென புலப்பட

ஜெயபாலன்:—"அடி பத்மாவதி! என்னை யறிந்தாய் இல்லையா? உயர்ந்த அந்தஸ்துடைய என்னை இவ்வாறு நீ தடை செய்து அவமானமாய் மொழிகின்றனையா உடனே கதவைத்திற."

பத்மாவதி:—"என்னை" என்னும் மொழி ஓர் ஆணையும் சுட்டும், பெண்ணையும் குறிக்கும், அலியையும் சுட்டும், மிருகங்கள் சம்பாஷிக்குமாயின் ஓர் நாயையும் குறிக்கும். அவ்வார்த்தை இங்கு யாறைக்குறிக்கின்றதென் பதேஎனது சந்தேகம். நீர் உயர்ந்தஅந்தஸ்துடையவரா யிருப்பின், தாழ்ந்த அந்தஸ்திலிருக்கும் என்னிடத்தில என்ன காரிய மிருக்கின்றது. போகலாம்."

ஜெயபாலன்:—(கெஞ்சியவாறு) அடி பத்மாவதி! யான் உனது நாயகியின் பிரிய காந்தனல்லவா! என்னை யறிய வில்லையா?"

பத்மாவதி:—"நீ பெரும் புளுகனென்ப தொன்றையே யறிந்தேனன்றி உண்மையில் யாவனென்பதை யான் அறியக்கூடவில்லை."

ஜெயபாலன்:—"ஆகா! புளுகனா?"

பத்மாவதி:—"எனது அரசி சுந்தராங்கிக்கு இன்னம் கலியாணமாக வில்லை. அங்ஙன மிருக்க, அவளுக்கு நாயகனேது? நிற்க, அவளாற் கணவனென வரிக்கப்பட்டவரும், இந்நகரத்திற்கு நெடிய தூரத்திலிருக்கின்றனர். ஆதலின் நீ சொல்லுவது முற்றும்பொய்."

ஜெயபாலன்:—"அடி பத்மாவதி ஏன் வீண் விவாதம் புரிகின்றனை? யான் ஜெயபாலனன்றோ? அடி உனக்கு வேண்டிய பொருள் இறைமளிக்கின்றேன் கயைசெய்து எனக்குத் தேவையானதைச் செய்வாய்."

பத்மாவதி:—"ஆகா அப்படியா! நீங்களா! உங்களுக்கு என்ன தேவை?"

ஜெயபாலன்:—"உனது நாயகியே தேவை."

பத்மாவதி:—"எனது நாய் உங்களுக் கெதற்காக? அது எனது வீட்டிலன்றோ இருக்கின்றது. அது உம்மைக் கடித்து விடுமே."

ஜெயபாலன்:—(கோபத்துடன்) "அடி, நிர்மூடி! என்ன என்னுடன் பரிகாசம் புரிகின்றனை? (அதட்டிய குர லில்) கதவைத்திறக்கின்றனையா? இல்லையா? (சப்தத் தைக் கேட்ட சுந்தராங்கி கதவண்டை வருதல்)

சுந்தராங்கி:—"யாரடி அது கதவைத்திறந்து விடு."

(பத்மாவதி கதவைத்திறத்தல்)

ஜெயபாலன்:—

இராகம்-ஆனந்த பைரவி.

கண்மணி சுந்தராங்கி கயல்விழிப்பார்வை பாய்ந்து
புண்ணெனத்துளைத்த நெஞ்சைப் புகலிடம் பிறிதுமற்றேன்
மண்ணினில் நின்னையொத்த மங்கையருளரோ சோமன்
தண்ணளிவதனந் தோற்றத்தயையினையற்ற வென்னே.

எனதுயிரை யொத்த ஏந்திழாய்! அடி சுந்தராங்கி! இன்னம் உன் மனதிளக வில்லையா! யான் எவ்வாறு கெஞ் சியும் உனக்கு என் மீதிரக்க முண்டாக வில்லையோ! உன் மனதென்ன கல்லோ! ஆகா! உனது முகம் சந்திர பிம்ப மென்ன மிக்க குளிர்ச்சியையும் அன்பையும் புலப்படுத்து கின்றதாயினும் உன் மனது மாத்திரம் சிறிதும் ஈரமற்றுக் கொடியதாயிருத்தல் எத்தகைய விந்தை! என்னை மணப்பை யேல் நாமிருவரும் இரதியும் மன்மதனு மென்னக் காலங் கழிக்கலாமே. உனது கனிவாயால் ஓர் இனியமொழி யுரை ப்பையேற் போதுமடி, அடி கட்டழகி."

8

சுந்தராங்கி:—

(இராகம்-மோகனம்)

ஏதேது யின்னமென்னை விடுத்தனையிலையோ மாந்தர்
மாதரின் காதல்கொண்டு மதியிழந்தலை தலுண்டோ
நீதிது மணக்கவென்னைச்சிந்தனை புரிந்துளுற்ற
வேதமுந்துன்பமின்றிப் பிறிதொரு நலமீயும்மோ.

ஆகா! ஜெயபாலா! இன்னமும் இப்பைத்தியத்தை விட்டனை யில்லைபோலும்! ஐயோ! இவ்வாறு பெண்களின் மோகத்தைக் கொண்டு அலைபவர் பெருந்தூர்த்தரன்றோ. இதென்ன விந்தை! உன்னைப்போல எவரேனும் மானத்தை விடுத்துக் காமாதுரராய் அலைவரோ! என்னை மணக்கலா மென்று மனப்பால் குடித்துக்கொண்டு அதன் பொருட்டு மேன்மேலும் முயலலினுல் உனக்குத் துன்பமும் சிரமமு மின்றி வேறொரு பிரதி பலனும் கிடைக்காது. உன்னை மணப்பதறகுச் சிறிதும் எனக்கு மனமிலது.”

ஜேயபாலன்:—“உனக்கு எவ்வாறு மனமில்லா திருப்பினும் யான் உன்னையே மணக்க விருப்பங்கொண்டுளேனென் பது சததியம். நீ எப்படியாயினும் என்மீது பிரியததை உண்டாக்கிக் கொள்ளவேண்டும்.

சுந்தராங்கி:—“நீ என்மீது காதல்கொண்டிருப்பதாய்ச் சாதாரணமாய்ச சொன்ன போதிலும் அதையான் முற்றும் உண்மையென நம்பக்கூடியவள். அதைப் பிரமாண பூர்வமாய் நீ உறுதியாய்க் கூறுவதினுல் யாதொரு வித்தியாசமுமில்லை. நீ இவ்வாறு உறுதி புகன்றதின் முடிவும் யான் உன்னை முற்றும் மதிக்கவில்லை யென் பதே யென நீ அறிந்து கொள்ளவேண்டியதே யன்றி வேறிலது.”

---

உளுற்றல் = பிரயாசைப்படுதல். ஏதம் = விசனம்.

ஜெயபாலன்:—"நீ இவ்வாறு கூறுவது சரியன்று."

சுந்தராங்கி:—"நான்பதில் மொழியாதிருப்பின் உனது விருப்பத்திற் கிணங்கி விட்டதாய் நினைப்பாயென வெண்ணி விடையீந்தேன். அவ்வாறு நீ நினையாதிருபபையென அறிந்திருப்பேனுயின் விடையேயீந்திரேன். ஜெயபாலா! என்னை அனுவசியமாய் வருத்தி உபதிரவிப்பதிற் பயனிலது. தயைபுரிநது எனது நினைவை முற்றும் விட்டுவிடுமாறு வேண்டுகின்றேன். இல்லையேல் நீ என்னிடத்தில் எவ்வளவு அன்பையும் மரியாதையையும் புலப்படுத்தினும் அதற்குப பதிலாய் உன்னை முறறும் அவமானமே செய்வேன். உன்னைப்போன்ற கற்றவர்கள் தமது மனதைத் தம் வசபபடுத்தவேண்டாமோ!"

ஜெயபாலன்:—"ஆகா! உன்னைவிடுத்துச செல்லவா? இவ்வாறு பைத்தியத்தில் உன்னை விடுத்துச் செல்லுதல எனக்குப் பெரும் பாவமன்றோ. உன்னை விடுத்துப் போகேன்."

சுந்தராங்கி:—"ஆனல் மூடர்கள் பைததியக் காரராகார்."

ஜெயபாலன்:—"அப்படியானல் என்னை மூடனென்கின்றனையோ?"

சுந்தராங்கி:—"யான் பைத்தியங் கொண்டவளாதலின் உன்னைமூடனென்றே மதித்தேன். இன்னம் சில நிமிஷங்கள் செல்லுமாயின் எனக்குப் பைத்திய மில்லையென்பதை நீயே யறிவாய். நீ இவ்வாறு தாறுமாறுய்ப் பிதற்றுவையின் யான் இனிஎனது பெண்தன்மையை மறக்க நேருமோ வெனநினைத்து விசனிக்கின்றேன். என்மனதிலுள்ளதையான்உன்னிலும நன்றுய் அறிவே னல்லவோ? நான் உன்னைச் சிறிதும இலக்ஷியம் செய்

தேனில்லை. ஏதடா இவள் இவ்வளவு தாக்ஷண்ய மின்றி உரையாடுகின்றனளே யென நினைப்பதற்குரிய மொழிகளைக் கூற நேரிடுகின்றது. உன்னிடத்தில் எனக்கு முற்றும் வெறுப்பேயன்றி விருப்பமேயிலது. இதையானே தெரிவித்துக் கொள்வதினும் எனது நடவடிக்கைகளிலிருந்து நீயே அறிந்து கொண்டிருக்க வேண்டியதன்றோ.''

ஜெயபாலன்:—''நீ இவ்வாறு கூறுவது உனது தந்தையின் கட்டளைக்கு முறறுங் கீழ்ப்படியாக் குற்றமாமன்றோ. ஆகா! கேவலம தாழ்ந்தவனொருவனை மணப்பதாய் வரித்து விட்டனையென்று அதையே பாராட்டிப் பேசுகின்றனை. அவனோர் பரமதரித்திரன். அவன் அரண்மனையிலுள்ளோரர் உண்டு மிஞ்சிய எச்சிலைத் தின்று வயிறு வளர்த்து உயர்ந்தவனன்றோ. அவனை மணக்க நினைத்தது பலிக்குமோ? நீயும் கேவலமோர் ஏழையாயிருநதால் அது உறுதிதான். இத்தேசமாளும் அரசனை உத்திரவளித்திருக்க, இவ்வேற்பாடு இன்னம் நிற்கின்றதாமோ! ஐயோ! கேவலம் அடிமையினும் கீழ்பபட்ட யாசகனை மணப்பதினால் இவ்விராஜாங்கத்தின் கௌரதைக்கு எவ்வளவு ஈனம் வந்து சம்பவிக்கும்.''

சுந்தராங்கி:—

(இராகம்—கானடா)

கசடனேபதரேகுதக் கள்வனேமடையா தூர்த்தா
வசையிலாவெனதுதோழனச் சுவமலம்பித்தேய்த்து
விசித்திடவருகனோநீ வெள்ளியமதியைக்கொண்டாய்
விசையினிலிவிடம்நீங்கி யேகலேயுரியதாகும்.

---

வசை = குற்றம் அச்சுவம் = குதிரை விசித்திட = கட்ட வெள்ளியமதி = அற்பபுத்தி.

அடே! துன்மார்க்கா! நீ எவனுயிருந்தாலென்ன. எனது மதிவதனனுடைய குதிரையைத் தேய்த்துக் கட்டும் வேலைக்காரனுயிருத்தற்கும் நீ அருகனன்று. உனது யோக்கியதைக்குரிய நிலைமையாது தெரியுமோ? அவன் அரசாளும் தேசத்திலுள்ள கொலையாளிக்குக் கீழ்வேலைக்காரனாய் நீ ஆவதே இவனுக்கும் இத்தகைய உயர்ந்த நிலைமைகிடைத் ததாவெனக்கண்டோர் உன்மீது பொறாமைகொண்டு அதன் பொருட்டு உன்னை விரோதிக்கக் கூடியதுமான விசேஷித்த பதவி."

ஜெயபாலன்:—(பெருமூச்சு விடுத்துக்கொண்டு) "ஐயோ! அவன் நாசமடையானோ!"

சுந்தராங்கி:—"அடே! நீ அவனுடைய பெயரைச் சொல்வதைத் தவிர அவனுக்கு வேறு யாதொரு பொல்லாங்கும் சம்பவியாது. உனது சிரசிலுள்ள உரோமங்களின் இலக்கம் எத்தனையோ அத்தனை மனிதர் உன்னுடைய போக்கியதைக் கொண்டவர் ஒன்றாய்ச்சேர்க்கப்பட்டாலும், அவனது பாதத்தில் ஒட்டியதோர் தூளிக்கு மொப்பாகார்.—அடே புருஷோத்தமா!"

(புருஷோத்தமன் வருதல்.)

"நல்ல சமயத்தில் வந்தனை! எனது சயன அறைக்கு விரைந்தோடி அங்கிருக்கும் தாதியை அழைத்து எனது மோதிரமொன்று மஞ்சத்திற் கிடக்கும். அதைத்தேடிப் பார்த்துக்கொண்டு வருவாய். அது நழுவி விழுந்து விட்டது போலிருக்கிறது. அதற்குப் பதிலாய் இவ்வுலகமே கிடைப்பினும் யான்பின்னதைவேண்டேன். அது மதிவதனனுற் கொடுக்கப்பட்ட மோதிரம். காலையிலெழுந்த போது அதை விரலிற் கண்டதாக நினைப்பில்லை: நேற்றிரவு அதைக் கண்டது நிச்சயமாய் ஞாபகமிருக்கின்றது."

புருஷோத்தமன்:—"அது காணமற் போயிராது. மஞ்சத்தின்மீது நழுவி விழுந்து கிடக்கலாம்."

சுந்தராங்கி:—"நானும் அப்படியே நினைக்கின்றேன். சென்று பார்த்துவா."

(புருஷோத்தமன் சென்று விடுதல்)

ஜெயபாலன்:—(கோபத்துடன்) "ஆகா! என்னை அவனுடைய பாததூளியாகவா மதித்தனை! ஆகா!"

சுந்தராங்கி:—"அடே நிர் மூடா! உனது கோபமும் பயமுறுத்தலும் என்னை என்ன செய்யும்."

ஜெயபாலன்:—(துடி துடித்து) "ஆகா! என்னை நீ இவ்வாறு தூஷிக்கத் துணிந்தனையா! அவனது பாததூளியா!"

சுந்தராங்கி:—(அழுத்தமாய்) "ஆமாம். யான் அவ்வாறு சொன்ன துண்மையே. நீ செய்வதை உடனே போய்ச் செய்து கொள்ளலாம்."

ஜெயபாலன்:—"இதை உனது தந்தை யிடத்தில் தெரிவிக்கின்றேன்."

சுந்தராங்கி:—"உனது தாயிடத்திலும் கூடத் தெரிவிக்கலாம். அவள் மிக்க நற்குணமுடையாள். ஆதலின் அவள் என்மீது முற்றும் விரோதமான எண்ணங்களைக் கொள்வதிற் றுடையிலது. என்மீது நீ எவ்வளவு அதிகமாய் அதிருப்தி யடையக் கூடுமோ அவ்வளவும் அடையலாம்."

(சுந்தராங்கி தனது அந்தப்புரத்திற்குள் சென்று விடுதல்)

ஜெயபாலன்:—"ஆகா! அவனது பாத தூளியா! நல்லது! இதற்குத் தக்கபடி செய்விக்கின்றேன்."

(ஜெயபாலன் செல்லுதல்)

4 வது ஸீன்—கலிங்கதேசம்.

பலராமன மாளிகை.

(பலராமனும்—மதிவதனனும் சம்பாஷித்தல்)

மதிவதனன்:—"நீவிர் அதைப்பற்றிச் சிறிதும் சந்தேகிக்க வேண்டியதில்லை. அவளுடைய மனோவுறுதிக்கு ஒரு போதும் குறை வுண்டாகாதென்பது நிச்சயம். ஆகா! அவள் என்மீது கொண்ட பிரியம் அரசனுக்கு மாத்திர மிருக்குமாயின் எனது பாக்கியத்தை என்னெனச் சொல்வேன்!"

பலராமன்:—"அரசனை உன் வசப்படுத்த என்ன செய்யலா மென உத்தேசிக்கின்றனை?"

மதிவதனன்:—"ஒன்றும் செய்ய நினைக்கவில்லை. யான் பொறுமையுடன் இத்துன்ப காலத்தைக் கழித்து நற் காலத்தை எதிர் நோக்கி யிருக்கவேண்டியதே யன்றி வேறிலது. எனதெண்ணம் பலியாமற் போமாயின் யான் உமது பல நன்மைகளையும் பெற்ற கடன்காரனாய் இறக்கவேண்டியதே."

பலராமன்.—"யான் உனக்குச் செய்பவைகளினும் உனது நற்குணமும், சினேகமும் எவ்வளவு விசேஷித்தவை. ஆதலின் பின்னவையே அரியவையன்றி முன்னது ஓர் பொருட்டன்று—நிற்க, இக்கலிங்கதேசத்தரசன் அதிவீரனைப்பற்றி உனதரசன் கேழ்விப்பட்டிருப் பான். பராக்கிரமபாகு மிக்க சாமர்த்திய முடையான். தனது காரியத்தை நன்றாய் நிறைவேற்றுவான். உன தரசன் கொடுக்கவேண்டிய கப்பங்களை இன்னமும் பாக்கியாய் வைத்துக் கொள்ளானென நினைக்கின்றேன். ஏனெனில் இக்கலிங்கதேசத்தின் சேனைகளுடைய

பராக்கிரமத்தை அவனறியாதவனன்று. இவர்களா லடைந்த புண்ணையும், விசனத்தையும் இன்னம் அவன் மறந்திரானெனத் தோன்றுகின்றது."

மதிவதனன்:—"யான் அவ்வாறு நினைக்கவில்லை. இருவர் சேனைகளின் சங்கியை, பலாபலம், தாரதம்மியம், முதலியவற்றைப் பற்றிய விவரங்களையானறியேனாயி னும், இதனால் பெரும் போரே உண்டாகுமென நினைக்கின்றேன். நடுவழியில் நிறுத்தப் பட்டிருக்கும் கலிங்கதேசத்துச் சேனைகள் மாளவ தேசத்திற்குச் சென்று விட்டதாய் நீவிர் விரைவிற் கேழ்விப்படுவீர். மாளவதேசத்தினர், இக்கலிங்கதனைப் பற்றிச் சிறி தும் அஞ்சுவதாய்த் தோன்றவில்லையாதலின் ஓர் சிறிய காசும் இவர் பெறுவதில்லை. மாளவதேசத்திய சேனை கள் இப்பொழுது மிக்கத் தைரியத்தையுடைய வையா யும் நன்றாய்த் தேர்ச்சி பெற்றவையாயு மிருக்கின்றன. அவருடைய சௌரியம் விரைவில் வெளியாகும்"

(சூரசேனன் வருதல்)

பலராமன்:—"அதோ! சூரசேனன் வந்தனன்!"

மதிவதனன்:—"ஆகா! காற்றினைவாகனமாய்க் கொண்டு வந்தீர்போலும்! எவ்வளவு விரைவில் திரும்பி வந்து விட்டீர்.

பலராமன்:—"நண்பா! சூரசேனா! வருவாய்."

மதிவதனன்:—"அவ்விடத்திற் கிடைத்த சுருக்கமான மறுமொழி உம்மை இவ்வளவு துரிதத்தில் திரும்பி வந்து விடுமாறு புரிந்ததுபோலும்."

சூரசேனன்:—"ஆகா! உமது பிரிய சுந்தரியைப் போன்ற கட்டழகியை யான் இது வரையிற் கண்டதேயில்லை!"

மதிவதனன்:—" அவள் யாவரினும் சிறந்த அழகியாயினும் என்னைத் தவிர மற்றவருக்கு முற்றும் வஞ்சகியாயிருப்பளென்பதுறுதி"

சூரசேனன்:—"இதோ! உமக்கோர்கடிதங் கொடுத்தனள்."

மதிவதனன்:—(கடிதத்தை வாங்கியவண்ணம்) இதில் எழுதப்பட்டிருப்பது நல்ல சங்கதி தானே?"

சூரசேனன்:—அப்படித் தானிருக்க வேண்டும்"

பலராமன்:—" நீ அங்கிருந்தபோது பராக்கிரமபாகு அவ்விடம் வந்து விட்டனரா ?'

சூரசேனன்:—" அவன் வரப்போவதாய்ச் சொல்லிக்கொண்டனர். நான் அங்கிருந்த வரையில வரவில்லை."

மதிவதனன்:—(கடிதத்தைப் படித்து விட்டு) " எல்லாம் நல்ல சமாசாரமே—நண்ப ! நிகழ்ந்த விருத்தாந்தம் என்ன ? அவள் உம்மிடத்தில் எவ்வாறு நடந்து கொண்டனள்? அவள்தனது இயற்கை ஒளியுடன் பிரகாசிக்கின்றனளா ! அல்லது உம்மைக்கண்டு அவ்வொளி மழுங்கிற்று ?"

சூரசேனன்:—" ஆகா ! யான் தோற்றிருப்பேனாயின் எனது ஆஸ்தி முழுதையு மன்றோ இழக்க நேர்ந்திருக்கும். ஐயோ ! இன்னமோர் நாள் மாளவதேசத்திலிராது வந்து விட்டதைப்பற்றி மனம் சஞ்சலப்படுகின்றது.! மதிவதன நண்ப ! உமது மோதிரத்தை யான் ஜெயித்து விட்டேன். "

மதிவதனன்:—( ஆத்திரத்துடன் ) " அப்பெண்மணியை நீ வெல்வது ஒருபோதும் பலியாக் காரியம். "

சூரசேனன்:—" இல்லவே யில்லை. அவள் வெகு சுலபத்தில என வல்லயிற பட்டனள "

மதிவதனன்:—" கீழே விழுந்தவன் தனது வெட்கத்தை மறைத்தற்காகச் சிறிப்பதைப்போல நீர் தோற்று வந்ததைப் பரிகாசமாய்த் தெரிவிக்கின்றீர் போலும். நீர் எவ்வாறு நட்பாய்ப் பேசினும், நாம் இருவரும் வாள் யுத்தம் செய்யவேண்டு மென்பதை மறைப்பேனென நினையாதீர். இனி நாம் நண்பரன்றென்பதையும் நீர் அறியவேண்டியதன்றோ. "

சூரசேனன்:—" நற்குணமுள்ள நண்பரே! நாம் முதலில் ஏற்பாடு செய்து கொண்டதற் கிணங்க நாம் இனி நட்பாயிருத்தலே வேண்டுமென்றி வேறிலது. நான் அவளை வென்று வராவிடிலன்றோ நாம் போரைப்பற்றிப பேச வேண்டும். நான் அவளது கற்பையும் உமது மோதிரத்தையும் வென்று விட்டதாக இன்னொரு முறை உறுதியாகத் தெரிவிக்கின்றேன். அவளுடைய இஷ்டத்தின் பேரிலும், உமது சம்மதியின் பேரிலும் இவ் விஷயம் நிகழ்ந்தமையின் யான் உங்களிருவருக்கும் எப்படித் தீமை புரிந்தவனுவேன் ? "

மதிவதனன்:—" நீர் சொல்வது சரிதான், யான் முதலிற் கூறியதை மறந்தேனில்லை. அவளை நீவிர் உமது வசப் படுத்தியதாய் ஏதாவது அடையாளங்கள் கொணர்ந்திருப்பீராயின், எனது மோதிரமும் சினேகமும் உமக்குச் சொந்தமே. இல்லையாயின், நீர் அவளுடைய கற்பைப்பற்றி இகழ்ச்சியாய்க் கூறியதற்கு உம்மைச் சும்மா விடேன். நாமிருவரும் வாளுடன் சண்டை செய்தலேயுறுதி. "

சூரசேனன்:—" நான் தெரிவிக்கும் அடையாளங்கள், என் வார்த்தைகளை அனேகமாய் உண்மைப் படுத்தும்,

எனது பிரமாணத்தால் மேலும் அதை உறுதிப்படுத்தத் தயாரா யிருக்கின்றேன். எனினும் நீர் இவ் வடையாளங்களைக் கேட்ட பின்னர் என் பிரமாணத்தையே வேண்ட மாட்டீர்."

மதிவதனன்:—" எங்கே! தெரிவியும்! பார்க்கலாம்."

சூரசேனன்:—" முதலில் அவளுடைய சயன அறையைப் பற்றித் தெரிவிக்கின்றேன். அவளது சப்பிர மஞ்சம் தங்கத்தினாலும் தந்தத்தினாலும் இயற்றப்பட்டு இடையிடையே வைரம் பச்சை முதலிய சிறந்த கற்களாலிழைக்கப் பெற்றிருக்கின்றது. அவ்வோர் மஞ்சத்தின் விலைக்கும், வேலைத் திறத்திற்கும் இவ்வுலகம் முற்றும் பொருமான மாவதில்லை."

மதிவதனன்:—" இது உண்மையே யாயினும், இதை அறிவது வெகு எளிது. இதை இவ்விடத்தி லிருந்தவாறே என் மூலமாயோ அன்றிப் பிறர் வாயிலாயோ தெரிந்து கொண்டிருக்கலாமே. இதற்காக நீர் அவ்வளவு தூரம் சென்றிருக்க வேண்டியதில்லையே."

சூரசேனன்:—" இன்னமுந் தெரிவிக்கின்றேன். அப்பொழுதாவது உண்மையாய்த் தோன்றுமென நினைக்கின்றேன்."

மதிவதனன்:—"எங்கே பார்க்கலாம்"

சூரசேனன்:—"அவளுடைய மஞ்சத்திற்குத் தென்புறத்தில் ஓர் பலகணி இருக்கின்றது. அதன் வேலைத்திறனை என்னெனச்சொல்வேன்! அது மனிதனது கைகளாலும் அறிவினாலும் இயற்றப்பெற்றதே யன்று. இயற்கையாய்க்கடவுளால்நிர்மாணம் செய்யப்பட்டதென்றே தோன்றுகின்றது. சிறுசிறு நவரத்தினக் கற்களிற்

செதுக்கப்பட்ட அழகிய பதுமைகள் அதிலிழைக்கப் பெற்றிருக்கின்றன. ஆகா! அவைகளை இன்னோர் முறைகாண எனக்குப் பெரும் அவா தோன்றுகின்றது என் செய்வேன்!"

மதிவதனன்:—"இது யாவராலும் மிக்கப்புகழ்ந்து கூறப்படுதலால், இதுவும் பிறர்சொல்லித் தெரிந்துக்கொள்ளக் கூடியதே."

சூரசேனன்:—"அவளது மஞ்சத்திற்கு மேல தங்கத்தினாற் செய்யப்பட்ட நான்கு கந்தருவப்படிவங்கள் சாய்ந்த வண்ணம் புஷ்பமாரி பெய்வது போலிருக்கின்றன."

மதிவதனன்:—"நீர் கூறிய இவைகளெல்லாம் அவளுடைய கற்பிற்கு யாதொரு ஹானியையும் சுட்டவில்லை. அவளுடைய சயன அறையிலிருப்பவைகளைச் சரியாய்த் தெரிவித்தீர். இவைகள் யாவும் உமது சிறந்த ஞாபக சக்தியைப் புலப்படுத்துகின்றதே யொழிய பந்தையத்தை வெல்லவில்லை."

சூரசேனன்:—(சுந்தராங்கியின்மோதிரத்தைக்காட்டிய வண்ணம்) "ஆகா! நண்பரே! இம்மோதிரத்தைப்பாரும். இப்பொழுது உமது முகம் வாட்டமடைவது நிச்சயம். நீர் முன்னர் கொடுத்த மோதிரத்தையும், இதையும் ஒன்றாய்ச்சேர்த்து மணம் புரிவிக்கின்றேன். இவை இரண்டும் இனி எனக்கு ரியனவே."

மதிவதனன்:—(திகைத்து) "எங்கே! எங்கே! அதை இன்னோர் முறை பார்க்கின்றேன். இது என்னாலீயப்பட்டதைப்போலிருக்கின்றதே."

சூரசேனன்:—"அது உம்மால் சுந்தராங்கி யிடத்திற்கொடுக்கப்பட்டதே. நீர் அவ்வளவு தூரம் ஒப்புக்கொண்

டதே போதும். அவள் இதைத்தனது சுண்டுவிரலி னின்றி கழட்டி எவ்வளவு குளிர்ந்த இனிய வதனத் துடனீந்தனள். அவள் அவ்வாறு இன்னம் கொடுப் பதுபோலவே எனது கண்களுக்கு முன்னர் தோன்று கின்றனள். அவளீந்த நிலைமையாகிய அவ்வழகிய தோற்றம் இவ்வாபரணத்தின் விலையை எவ்வளவு உயர் த்தியது. அதைத்தான் இதற்குமுன் விலைமதிப்பற்ற தாய் மதித்ததாயும் இப்பொழுது அவ்வாறு நினைக்க வில்லையென்றும் புகன்ற வண்ணமிதைச் சுந்தராங்கி கொடுத்தனள்.

மதிவதனன்:—"அதை என்னிடத்திற் கொடுக்குமாறு கழ ட்டி யனுப்பியிருக்கலாம."

சூரசேனன்:—"அவள் உமக்கெழுதியிருக்கின்ற கடிதத்தில் அவ்வாறு யாதாயினும் தெரிவித்திருக்கின்றனளோ? அதில் இவ்விஷயமே இராதென்பது நிச்சயம்"

மதிவதனன்:—(முகம்மாறி) "இல்லை யில்லை. அவ்வாறு எழுதவில்லை. இம்மோதிரத்தை நீரே எடுத்துக்கொள் ளும். எனக்கு இனி அது தேவையிலது. இம்மோதிரம் கண்குத்தி நாகத்தைப்போல அதைக்காணுமென்னைக் கொல்கின்றது."

(இராகம்—மோகனம்)

அழகினிற் கற்பேயின்று நடலத்திலுண்மையின்று
விழைவுடன் விரும்பல் வேறோர்விடன் வரவிரைவிலேசும்
மழைவிழிமடவோர் முற்றும் வஞ்சகருறுதியற்றோ
ரிழுதையேயறியவொண்ணு நீலியேயறிந்தேனுன்னை.

ஆகா! அழகு எவ்விடத்தில் அதிகமாயிருக்கின்ற தோ, அங்கு கற்பும், அதிகப் பாசாங்கு எவ்விடத்திலு

இழுதை = பேய்.

ளதோ அங்கு உண்மையும், வேறு ஆடவரிருக்குமிடத்தில் சிறுமியர் தமது காதலரிடத்திற்கொண்ட ஆழ்ந்த அன்பும் இராதுபோலும். மகளிர் எத்தகைய உறுதி புகன்றாலும் அவையாவும் வேஷமேயன்றி வேறன்று. ஆகா! சுந்தராங்கி! பிறரால றியக்கூடாத மனதைக்கொண்ட நீலியாயன்றோ முடிந்தனை!"

பலராமன்:—"என தரிய நண்பா! மதிவதனா! ஆத்திரப்பட்டு இதற்குள் என் மனங்கலங்க விடுகின்றனை? உனது மோதிரத்தைத் திரும்ப வாங்கிக்கொள். இதற்குள் சூரசேனன் ஜெயித்து விட்டதாகுமோ? அவள் இம்மோதிரத்தை எங்கேயாயினும் மறதியாய்ப்போட்டிருக்கலாம். அல்லது அவளுடைய தாதியரில் ஒருத்தியைத் தனத்தின் மூலமாய் வசப்படுத்தி யிருப்பின், அவள் இதைத்திருடிக் கொணர்ந்து கொடுத்திருக்கலாம்."

மதிவதனன்:—"உண்மைதான். அவ்வாறேநடந்திருப்பதாய்த்தான் எனக்குத் தோன்றுகின்றது.—இம்மோதிரத்தைக் கொடுத்துவிடும். இது போதாது. அவள் உடம்பிலுள்ள அடையாளம் யாதாயினும் தெரிவிப்பீர். இது களவாடப்பட்டதா யிருக்கலாம்."

சூரசேனன்.—"தெய்வத்தின் மீது பிரமாணமாய்த்தெரிவிக்கின்றேன். இதை அவளிடத்திருந்தே வாங்கினேன்."

மதிவதனன்:—(பதைபதைத்து) "ஆகா! கடவுள்மீது ஆணையிட்டுத் தெரிவிக்கின்றனரே. அப்படியாயின் உண்மையாய்த்தானிருக்க வேண்டும். நீரே மோதிரத்தை வைத்துக்கொள்ளும். அவள் அதை ஒரு போதும் இழப்பவளன்று. அவளது தாதியர் அவளிடத்தில்

முற்றும் அபிமானம் அன்பு முதலியவற்றைக்கொண்டவர். ஒருபோதும் பொய்யுரையார். அவளை உயிரென மதிப்பவர். வேறோர் தேசத்திலிருந்து வந்த அன்னியனொருவன் மொழியின் பேரில் அவர் ஒருபோதும் திருடுவதற்கிணங்கா ரென்பது நிச்சயம். இவர் அவளை வென்றது உண்மையே:—இம்மோதிரங்களை நீரே எடுத்துக்கொள்ளும். அவள் வேசையென்னும் அறிய மேன்மையை மிக்கப்பிரயாசைப்பட்டுத் தேடிக்கொண்டனள். பாழும் நரகங்கள் எனக்கு உனக்கென இவளைப்பாகித்துக்கொள்ளட்டும்."

பலராமன்:—"மதிவதனு! சற்று பொறுமையைக் கொள்வாய். இதையே உறுதியான சாக்ஷியாய்க் கொள்வதற் கிடமில்லை. இது யாவும் சூதாயிருக்கலாம். நீ மனந் தளராதே."

மதிவதனன்:—(உறுதியாய்) "இல்லை யில்லை. இவரிருவர்க்கும் ஆழ்ந்த நட் புண்டானது நிச்சயமே."

சூரசேனன்:—"இன்னும் இவ்விஷயத்தில் திருப்தியடைய நினைப்பீராயின் மேலும் தெரிவிக்கின்றேன். அவளது அழகிய மார்பின் வலப்புறத்தில் ஓர் சிறிய மச்சமிருக்கின்றது. அது யாதாயினும் அழுக்கோ அல்லது மச்மந்தாளோவென யான் முதலிற் சந்தேகித்து அதைத் தீண்டிப் பார்த்தேன். மச்சமென்றே உறுதி கொண்டேன். ஆகாகா! அக்காட்சி எனது கண்களிற் கெதிரில் நிற்கின்றது. அம்மச்சத்தை நீவிரும் பார்த்திருக்கலாம்."

மதிவதனன்:—"ஆகா! இது ஒன்றே போதும். இது பொய்யென்று இவ்வுலகத்தினர் யாவரும் சாக்ஷி சொல்வரேனும் பின்னதை யார் நம்புவார். !"

சூரசேனன்:—" இன்னம் தெரிவிக்கட்டுமா ? "

மதிவதனன்:—" போதும் போதும். இதுவே போதும், மேல் நடந்தவற்றை யொன்றையும் விவரிக்கவேண்டாம். "

சூரசேனன்:—" இவை உண்மையெனப் பிரமாணம் தேவையானாலும் செய்யத் தயாரா யிருக்கின்றேன். "

மதிவதனன்:—" தேவையில்லை. நீர் இவ்வாறு செய்யவில்லையென இனிப் பிரமாணம் செய்தாலும் யான் அதை நம்பேன். உம்மைக் கொல்வது முறுதி "

சூரசேனன்:—" யான் செய்ததை எதற்காக இல்லையென மறுக்கப் பொகின்றேன். "

மதிவதனன்:—(பொங்கி எழும்கோபத்துடன்) ஆகா ! யான் இப்பொழுது அங்கிருப்பேனுயின் அவளைத்துண்டுதுண்டாய்க் கிழித்தெறிவேன். எனினும் யான் இப்பொழுதே அங்கு சென்று அவளுடைய தந்தைக்கு எதிரிலேயே அவளைக் கண்ட துண்டமாய் வெட்டியெறிகின்றேன்."

(மதிவதனன் விரைவில் தனது அறைக்குட்
செல்லுதல்)

பலராமன்:—" அடடா ! மதிவதனன் அடக்க முடியாக் கோபத்தினைக் கொண்டு செல்கின்றனனே. ஐயோ, இதனால் என்ன தீங்கு விளையுமோ தெரியவில்லையே ! தனக்கே யாதாயினும் பொல்லாங்கிழைத்துக் கொள்வன். நாமும் தொடர்ந்து சென்று அவனுடைய கோபத்தை மாற்றுவோம். "

சூரசேனன்:—" ஆகா ! அப்படியே செய்யலாம். "

(இருவரும் பின்னுற் செல்லுதல்)

5 வது சீன்: —அதே மாளிகையில் மதிவதனனுடைய அறை.

மதிவதனன்:—

(அரிச்சந்திரநாடகம்—வாவாவா
வெனக் கூவியழைத் தேமேறுடி)
(இந்துஸ்தான் சுருட்டி—தாளம் சாப்பு)

பல்லவி

ஆகாகா மடவோரை விரும்புவோர்க
ளறிஞரோ—அவர்—பெரியரோ (ஆ)

சரணங்கள்

(1) நீயே யெனதுயிர் நாதனெனவேயவர்
நேரில் மொழிவர் மிகு—நேராய் நடிப்பரவர்
நீலியரே-பெரும்-ஜாலியரே (ஆ)

(2) எந்தன் கருவையன்னேயேற்ற சமயமெந்தை
யெங்கோ ! பிறன்மருவி யீன்றகுழவியானேன்
மெய்யேயாகும் எனினுமவள் கற்பினளே (ஆ)

(3) அங்ஙனமே சுந்த-ராங்கி நடித்தனள்
ஆதலின் முறைமுறை வருமிது தவறுமோ
அன்பேயாமிது—மாதர்களின் பண்பேயாமிது (ஆ)

ஆகா ! பெண்டிரே இவ்வுலகத்தில் இல்லாமலிருக்கக் கூடாதோ ! ஐயோ கடவுள் ஆண்பெண் என்ற இருவகுப்பி னரை எதற்காகப் படைத்துப் பற்பலதுன்பங்களை யுண்டாக் கியிருக்கின்றனன்.

(இராகம்—நாதநாமக்கிரியை)

உலகினில லகிலாதகொலைபகை களவுகாமங்
கலகமோடிடும்பை நோயுங்கழறிடு மவத்தமோசஞ்
சலனமே வறுமையாசையவமானம் பருகல்பாவம்
நிலைத்திடல் தெரிவையாலில்லையேற்றுறக்க மீதே.

அலகிலாத = எண்ணிகையற்ற. தெரிவை = பெண் துறக்கம் = சுவர்க்கம்

இப்பூலோகத்தில் கொலை களவு, காமம், துன்பம்வியாதி மோசம், சஞ்சலம், தரித்திரம், மானஹீனம், குடித்தல், முதலிய எல்லாத் தீமைகளும், அவற்றின் பயனான பாவமும் உண்டாவது இப்பெண்களிருப்பதினாலன்றோ. இவரே இல்லாதிருப்பரேல் இவ்வுலகமே சுவர்க்கமாம். கடவுள் இவ்வுலகை அபிவிர்த்தி செய்ய வேண்டுமாயின் இவ்வாறு இருபாலாராய்ப் படைக்காது வேறுயாதாயினும் சூசனை செய்திருக்கலாகாதா? நாம் யாவரும் வேசையரின் மக்களே. யான் எனதன்னை வயிற்றில் கருவாய்த் தரிக்கவாரம்பித்த போது எனது தந்தையென யாவராலும் அழைக்கப் பட்டவன் எங்கிருந்தானோ! என்னைச் சிருஷ்டிக்கும் தொழிலை வேறு எவன் ஏற்றுக் கொண்டனனோ! எனினும் எனதன்னை கற்பில அருந்ததியென யாவராலும் மதிக்கபபட்டிருந்தனளாம். யாவும் மோசம். இவ்வாறே இப்பொழுது சுநதராங்கியும் ஒப்பற்ற சிறப்பினளாய்த் தோன்றினள். கற்பென்பதற்கே பிறப்பிடமாய்க் காணப்பட்டனள். யான் தூர தேசத்திலிருந்து திரும்பி வருவது சந்தேகமென அறிந்தமையின், இப்பேதையான சூரசேனனுக்கு ஓர் கணத்தில் வசியமாயினள். ஆகா! விலங்குகளுக்கே ஒன்றினிடத் தொன்று இவ்வளவு விரைவில் மனப்பற்றுண்டாகும். ஐயோ! மனிதரிடத்தில் பெண்தன்மைகள் எத்தனை யிருக்கின்றன! மனிதராலியற்றப்படும் பாவச் செயல்கள் யாவும் பெண்மையே. பொய் சொல்வது பெண்தன்மை. அவ்வாறே, பிறரை ஸ்தோத்திரம செய்வது, மோசம், மோகம், பழிக்குப்பழி வாங்குதல், பேராசை, பிறர் பொருளிலாசை கொள்ளுதல, தற்புகழ்ச்சி, பிறரை இகழ்தல், சிற்றின்பப் பிரியம், புரளி, அடிக்கடி மனம் பேதித்தல், முதலிய குற்றங்கள் யாவும் பெண்தன்மைகளே. அடிக்கடி ஓர் பாவச்

செயலிலிருந்து மற்றோர் பாவத்தொழிலிற்குத் தாண்டியவா றிருந்து மனிதருக்குப் பலதுன்பங்களை யுண்டாக்குவதாலும், மாதர்களின் முற்கூறப்பெற்ற பெண்தன்மைகள் ஆடவரிடத் திற் பிரதிபிம்பித்தலாலும், அவர் மனிதருக்கு எத்தகைய விரோதிகளாகின்றனர்.! ஆகா! அதோ பலராமனும் சூர சேனனும் வருகின்றனரே! எதற்காக? ஆறுதல் கூறி என்னை உபத்திரவிக்கவோ? நான் கதவைத் தாளிட்டுக் கொள்கின்றேன்.

(பதிவதனன் உள்ளே தாளிட்டுக் கொள்ளுதல்)

## 3-வது அங்கம்

### 1-வது சீன்:—மாளவதேசத்தரசனது கொலுமண்டபம்.

பிரதாபசிபன், சரசாங்கி, ஜெயபாலன், மந்திரி
முதலியோரும் மற்றவரு மிருத்தல்.

இராகம்-கல்யாணி.

அரசன்:—

தாணியில் மகிபனாகிச் சகமெலா மடக்கியாள
லரிதினுமரிதே யஃது கடவுளிற்கடுத்த தானம்
பெரிய விந்நிலைமை யிந்தப்பேதையின் பாலதாதல்
பரமனே தருளேயன்றிப் பகர்தலுக் கேதுவென்னே.

ஏ! மந்திரி! இங்கரா விஷயங்களைச் சரியாய்ப் பார்த்து
வருகின்றீரையா?

மந்திரி—"ஆம! அரசே! யாவற்றையும் ஒழுங்காய்ப் பார்த்
துவருகின்றேன்."

அரசன்—

இராகம்-மோகனம். தாளம்-ஆதி.
(கபாகரி-சரிகாரிசா-சரீசதசா-கபதரி.)

பல்லவி.

மந்திரியென — சங்கைகளை — யந்து நீக்குவாய்
மகிழ்ந்து (ம)

சரணங்கள்

(1) அந்தணர் முதலானோர் — தந்துறைவழுவாமல்
அமரவர் நிற்கின்றாரா அறைகுவாய் தெரியவே (ம)

(2) மற்சனசாலைகையில் — மேசர்செழித்து வளர்ந்தே
யெதநைகைத் துன்பமின்றி யிருக்கின்றதாவுரை (ம)

மந்திரி—"வேந்தே! நமது நாட்டிலே நற்காரியங்கள்
யாதொரு குறைவுமின்றி நடந்தேறிவருகின்றன. நீய

வை யாவும் சூரியனைக்கண்ட இருளைப்போல விலகி, இருந்தவிடந் தெரியாமல் ஒடுங்கிக் கிடக்கின்றன. அரசே! நமது தேசத்திய அந்தணரின் மேன்மையை என்னென விரிப்பேன்!

(இராகம்-தோடி)

துதிகொண்ட மறையோர்கள் நதிசென்று திரிகரணந்
துகள் செல்ல முழுகி யெழுவார்
துதைகின்ற வினைதீர மனதைந்து ஜெபஹோம
முதலுற்ற கருமம புரிவார்
விதியொப்ப விதிக்கசு முடிவற்ற பலவேத
மிணையற்ற பதினெண கலைகடா
மெனுமிக்க வொளிர்ஞானம் விகசிக்கும் வழிபாரா
விவைமுற்றும் படனம் புரிவா
ருதயன்ற னுருபாதை விலகிட்டு நிவர்த்தி
முறைதப்பி வழுவ லுளதோ
முடியற்று விழுமேறு மொழிதப்பி யொழுகார்க
ளொழிவின்றிக் கடவுள் தெளிவா
ரதிதிக்கு மனதோடு துதிசெய்தே புரைவீவ
ரழிவற்ற பதவி யடைவார்
தலைவன்றன் நிலைபேறு மழைபெய்தல் செழிதேய
மவரின்றி யணுவு மிலவாம்.

சிறந்த அண்ணலே! நமது தேசத்த தந்தரைப் போல எத்தேசத்திலுமே கிடையாா. இவர் காத்தகைய சீலர். அவரில்லையாயின் இப்புவியே நிலைத்தலரிது."

அரசன்—"ஆகா! அப்படியா! மெத்த சந்தோஷம்."

---

மறையோர்=பிராமணன் துகள்=குற்றம் துதைகின்ற=நெருங்கிய விதியொப்ப=சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டவாறு விகசிக்கும்=புஷ்பிக்கும். உதயன்=சூரியன். முடி=சிரசு. தலைவன்=அரசன்.

விகடகவி—"இராஜாதிராஜனே ஓர் சிறிய விண்ணப்பம்."

அரசன்—"என்னடா ஆரம்பிக்கப் போகின்றனை ?"

விகடகவி—"மகாப்பிரபுவே! நமது தேசத்திய சில பிராமணரின் தன்மையையான தெரிவிக்கின்றேன் செவிசாற்றி யருளுங்கள்.

(இராகம்—ஆனந்தபைரவி.)

கலிகால மறையோர்க ளதிகாலை சென்றிடுவர்
காபி டீ விற்கு மிடமே
கலவாது பலச்சா கழுவாத வெச்சில்தனிற்
காதலோ டுண்டு மகிழ்வார்
தலைபோடி மேலங்கி கீழங்கி கொண்டிடுவர்
ஆங்கிலே யாகள் போல்வார்
சதாகாலம் லெமனேடு மியர்சோடா நெட்டிடுவர்
சார் மிஸ்ட ரென்று சொல்வார்
சிலைமீது ம செம்பிலும் தெய்வமிலை யென்றிடுவர்
வேதமோ டாம்லை யென்பார்
சேவகா நிலைமையைத தலைமையாயேற்பரே
கேவலம் பல்லி ளிப்பார்,
அலகிலாப் புளுகோ டழுக்காறு சுயநன்மை
மோசமுங் கோளு முடையார்
பலபாஷை கலவாது மொழியார்கள் கலிகால
வாரியோ ரென்ன விந்தை.

அரசன்—"சே! மூடா! நமது தேசத்து அந்தணர் ஒருபோதும் அவ்வாறு செய்யார். அவர் இவ்வாறு நீசராய் மாறுவரேல் நமது தேசம் க்ஷீணித்து க்ஷாமத்திற்—அன்றோ இருப்பிடமாய் நாசமடையும். அவர் மற்ற ஜாதியாரிலும் அதிகோசர புத்தியை யுடையோரா

சிலை=கல் அலகிலா=எண்ணிக் கையில்லாத, அழுக்காறு=பொறாமை.

யிதுவரையிலிருந்து வந்ததாகத் தெரிகின்றதே அதன் காரணமென்ன! அவர்களது ஆசார சீலத்தினாலும் மனோதேகத் தூய்மையினாலும் ஆழ்ந்த வித்தையினாலு மன்றோ அவர்கள் முற்கூறியவாறு, தமது தன்மைக்கு விரோதமாய் ஒழுகி மலினமடைவரேல், இத்தகைய பல சிறப்புகள் வெகு துரிதத்திலில்லையா மன்றோ. ஆதலின் அவர் ஒருபோதும் அவ்வாறு செய்யாரென்பது தேறும். சே! நீ இனி இவ்வாறு இவரைப் பற்றிப் புரணி கூறப்போகின்றனை. ஜாக்கிரதை."

(ஓர் சேவகன் வருதல்)

சேவகன்—"மகாராஜனே! கலிங்கதேசத்திலிருந்து வந்த பராக்கிரமபாகு சபைக்குவர ஏவலை எதிர்பார்க்கின்றனன்."

அரசன—"வரவிடு."

(சேவகன் செல்லப் பராக்கிரமபாகு வருதல்)

பராக்கிரமபாகு—"அண்ணலே வந்தனம."

அரசன்—"மெத்த சந்தோஷம். உனது தேசத்தரசன் அதிவீரன் சௌக்கியமாயிருக்கின்றனா?"

பராக்கிரமபாகு—"யாவரும் சுகமே."

அரசன்—"நீ வந்த விசேஷமென்ன? அதிவீரன் நமக்கு யாது சமாசாரமனுப்பினன்?"

பராக்கிரமபாகு:—"சிறந்த மன்னனே! மன்னித்தருளுவீர்' அதிவீரனது தந்தையின் பராக்கிரமத்தையும் வீரதீரச் செயல்களையும் எவ்விடத்திலும் அறியாதாரிலர். அவர் இறந்தும இவ்விஷயம் இன்னம் புகழ்ந்து கூறப்படுகின்றதல்லவோ? உங்களது தாதை அவருடன் சண்டை

செய்து, மிக்க சௌரியத்துடன் போர்புரிய, அதைக் கண்டு வியப்படைந்த அதிவீரனது பிதா இவரோடு ஓர் உடன்படிக்கை செய்து கொண்டனர். ஒவ்வொரு வருஷமும், தலைமுறை தலைமுறையாய் இத்தேசத்தரா சர் கலிங்க தேசத்திற்கு ஓர் லக்ஷம் பொன் கப்பம் கட்டி வருவதென்றும் இனி எமதரசர் இத்தேசத்தின் மேற் சண்டைக்கு வருவதில்லையென்றும் ஏற்பாடு செய்து கொண்டனர். அவ்வாறே உங்களது தாதையின் கடைசிக்காலம் வரையில் திறைசெலுத்திவந்தனர். நீங்கள் அரசியலை ஏற்றுக்கொண்ட முதல் அவ்வாறு நடவாமல் நின்று விட்டதன்றோ.

சரசாங்கி:—"இனி எப்பொழுதும அவ்வாறே பணம் செலுத்தப்படாமல நின்றுவிடுமேல், இதுவும் வழக்கமாய்ப் பழமையாய் விடுகின்றது. பணம்பெறவில்லையேயெனும் உங்களுடைய கவலையும் நீங்கி விடுகின்றது. ஆதலின் இவ்வாறே இனியும நடந்து வரட்டுமே.

ஜேயபாலன்:—"இதுகாறும இந்த அதிவீரனைப்போல எத்தனையோ மகா அதிவீரரைக் கண்டிருக்கும். மாளவ தேசத்திற்கும் உங்களுக்கும் யாது சம்பந்த மிருக்கின்றது? இது பிரத்தியேகமான இராஜ்ஜியம். எக்காரியத்திற்காயினும் யாம் உங்களது உதவியைத்தேடுகின்றோமா ஒன்றுமில்லை. ஆதலின் நாங்கள் ஓர் செல்லாத காசும் கப்பமாகக் கொடோம்."

சரசாங்கி:—"நீ குறிக்கும் உடன்படிக்கையைப்பற்றி நாங்கள் நன்குயறிவோம். அப்பொழுது நிகழ்ந்த வற்றையும் கேழ்வியுற்றிருக்கின்றனம். அதிவீரனது தகப்பன் இங்கு வந்து பிரமாதமாய்ப் போர்செய்து தனது வெற்றிக்கொடியை நாடி இத்தேசத்து வேந்தனை ஜெயித்தா

னில்லை. அவன் இலக்ஷக்கணக்கான சேனைகளுடன் இத்தேசத்திற்கு வந்தது மாத்திரம் உண்மை. அச் சேனைகள் இத்தேசத்து வீரர்களுக்கு முன்னில்லாது தோற்று விழுந்திறந்தனர். அதைக்கண்ட எமதரசன் மிகுந்தோராகிய எளிய அச்சேனைகளினிடத்துப் பச் சாதாபங்கொண்டு இவ்வாறு பணமாவது கொடுத்து விடுவதாய்ப் புகன்று உங்கள் சேனையைத் திருப்பி யனுப்பிக் காப்பாற்றினராம். அதிவீரன் இதையோர் பெரும்வெற்றியாய் மதித்தனன்போலும்?”

ஜெயபாலன்:—“ இல்லை யில்லை. நாங்கள் இனிக் கபடமே கொள்ளோம். இத்தேசம் முன்னிருந்ததைக் காட் டிலும் இப்பொழுது மிக்க பலசாலிகளை யுடைத்தா யிருக்கின்றது. பிறகு, அதிவீரன் அவனுடைய தந்தை யாகான். தாதையினுடைய சௌரியத்தை மாத்திரம் பெறாமல் அவனைப் போலப் பணத்தாசையை மாத்திரம் கொண்டால் காரியம் எவ்வாறு பலிக்கும் ? ”

அரசன்:—“ குழந்தாய் ! உனது தங்கை முற்றும் தெரிவிக் கட்டும். ”

ஜெயபாலன்:—“ உங்களுடைய அதிவீரனையும் அவனது தந்தையையும் ஓர் நொடியில் மேற்கொள்ளக் கூடிய பலவீரர் இத்தேசத்தி லிருக்கின்றனர். இதனால் யானென்னைத் தற்புகழ்ச்சி செய்து கொண்டதாய் நினைக்கக் கூடாது. எனினும் அவ்வீரர்களில் யானும் ஒருவனே. ஏன் கப்பம் ? எதற்காக யாம் கப்பம் செலுத்துவது ? அதிவீரன் இத்தேசத்திற் பிரகாசிக் கும் சூரியனை ஓர் துப்பட்டியால் மறைப்பதற்கோ அல் லது சந்திரனைத் தனது சட்டைப் பையில் வைத்துக் கொள்வதற்கோ சாமர்த்திய முடையவனா யிருப்ப

னேல், எங்களுக்கு வெளிசச மில்லாமற் போமோ வென அஞ்சி நாங்கள் அவனுக்குக் கப்பம் கட்டவேண்டியதே. அப்படி யில்லாம லிருக்கையில் நாங்கள் ஒரு போதும் கொடோம். நீர் தயவு செய்யலாம். ”

அரசன்:—“ அதிவீரனது தந்தைக்கு இக்கப்பம் கட்டியதற்கு முந்தி இத்தேசத்தார் யாதொரு கப்பமும் கட்டியதில்லை. என்னுடைய பிதா ஏதோ தயா விஷயமாய்க் கொடுத்து வந்ததை நீங்கள் ஒரு பெரிய ஜெயத்தின் பலனாய் நினைத்து அதனால் உங்களிடத்தில் ஏதோ விசேஷித்த பலமிருப்பதாய் எண்ணி எங்களை அடக்கியாள முயலுகின்றீர். தயா விஷயமாய்ச் செலுத்தி வந்ததை ஏதோ கேவலமாய் மதித்து விட்டீர்கள். நாங்களும் உங்களைப்போன்ற பலசாலிகளென்றே எங்களை மதிக்கின்றோம். எனது தந்தைக்கு இத்தகைய களங்கமுண்டாக்கியதை நான் ஒருபோதும் ஒப்புக் கொள்ளேன். ”

பராக்கிரமபாகு:—“ அரசனே! எனக்குப் பெரிதும் விசனமாயிருக்கின்றது. உங்களுக்கு எத்தனை சேவகர்களிருக்கின்றார்களோ, அதிவீரனுக்கு அத்தனை சிற்றரசர்களிருந்து அடி தொழுகின்றார்கள். இத்தகைய இராஜாதி ராஜனுக்கு நீங்கள் பகைவராக வேண்டும். கப்பங் கொடுக்கச சம்மதியாவிடின் போரும் கலகமும் நேருமெனத் தெரிவிக்குமாறு அவன் எனக்குக் கட்டளை யளித்தனன். அவனுக்கு விலக்க முடியாத கோபமும் வீராவேசமும் உண்டாவதிற் சந்தேகமிலது. அவன் பணித்ததை யறிவித்தேன். பிறகு உங்கள் சித்தம், யான் திரும்பிச்செல்ல விடையீயுங்கள். என்

விஷயத்தில் நீங்கள் அன்பு பாராட்டியதற்கு யான் மிக்க நன்றி செலுத்துகின்றேன்."

அரசன்:—"மெத்த நல்லது. அதிவீரன் எங்களிடமிருந்து கப்பம் பெறுவதற்கு யோக்கியதையுடையவனெனத் தோற்றுவிப்பனேல், நாங்கள் அவனைக் கௌரவப் படுத்துவதிற் சந்தேகமில்லை."

பராக்கிரமபாகு;—"கூடிய சீக்கிரத்தில் அது உள்ளங்கை நெல்லிக்கனியாகும்."

ஜெயபாலன்:—"நமது அரசர் யாவறறையும் நன்றாய்த் தெரிவித்தனர். உனக்கு இஷ்டமாயின் சிநேக பாவமாய் இன்னம் இரண்டொரு நாள் இங்கு மகிழ்வுடனிருந்து செல்லலாம். எங்களுக்கும் அது இன்பந் தரும். அதன் பிறகு நீங்கள் வேறுவித சம்பந்தத்துடன் எங்களிடம் வருவீராயினும் இருதேசத்தாரும் சமர்க்களத்திற் சாதிக்கலாம். அதில் எங்களை வென்று துரத்திவிடுவீர்களாயின் எல்லாம் உங்களுடையதே. அன்றி நீங்கள் விழுவீர்களாயின் அதுவும் நன்றே. எங்கள் தேசத்திய காகம், பருந்து, நாய், நரி முதலியவற்றிற்கு உங்களாற் பெரும் விருந்து கிடைக்கும். அத்துடன் நமமுடைய வழக்கும் முடிவு பெறறு விடும்."

பராக்கிரமபாகு;—"முற்றும் சரியான விஷயமே! செல்லுகின்றேன். நகரை விட்டுப் புறப்படுகையில் திரும்பவந்து விடைபெற்றுக் கொள்ளுகின்றேன்."

(சென்று விடுதல்)

2-வது சீன்—அரண்மனையில் சுந்தராங்கியின் அந்தப் புரத்தின்வாசலில் புருஷோத்தமன் விசனத்துடன் நிற்றல்.

(கண்ணிலுறக்க மில்லை)

புருஷோத்தமன் :—

" ஆகாகா வென்ன சொல்வேன் அரசியொரு வேசையானள்
நோகுதே யெந்தன் சிந்தை நகலொணுத் துயரதனல் (ஆ)

(2) ஒகோமதிவதனு வுண்மையெனச் சொன்னவர்யார்
வேகமாய் நம்புவது-விவேகியர்க்கழகாமோ (ஆ)

(3) மங்கையரிலிவளை யொத்த பங்கமில்லா ரெவருமுண்டோ
இங்கிருந்து நெடிகறிந்தும் எங்ஙனமிதை நம்பினீர் (ஆ)

(தனக்குள் ஆசிரியத்துடனும் துக்கத்துடனும்)
அடடா? விபசாரமா! பிரேமா! இவ்வாறு எழுத எவ்விதம் துணிந்தீர்! எந்தத் துஷ்டன் இவள் மீது இவ்வாறு தோஷம் கற்பித்தனனென்பதை ஏன் எழுதாது விடுத்தீர். ஆகா! பிறர் சொல்வது முற்றும் உண்மையென எளிதில் நம்பக் கூடிய உமது செவிகளில் இத்தகைய கொடிய விஷத்தைப் புகட்டினவன் எந்தப் பாதகன்?

(இராகம்-முகாரி)

அவனியின் முழுது மிந்த வரசியைப் புரைவோருண்டோ
தவப்பயன் முழுதுங்கூடி நவையிலாப் புனிதமேயா
மிவளுரு வெனவே தோன்றியிருப்பதையறிந்து முற்றும்
பவமொழி விடுத்தீர் மேலும் பற்பல புதுமை சொற்றீர்.

வேசையா? ஒருபோது மிலது. பரிசுத்தமே உரு வெடுத்ததென வந்த மங்கை யன்றோ! இங்கு நெடிய கால மாயிருந்து இதை நன்றாயறிந்த நீவிர் இந்தப் புறணியை எவ்

பவம்=பாவம

வாறு நம்பினீர்! ஆகாகா! இவளது பரிசுத்தத்திற்காக இவளை இவ்வாறு தண்டித்தீர் போலும். ஐயோ, இவள் கற்பே வடிவாயன்றோவிருக்கின்றனள். இவளை மகாலக்ஷ்மி என்று சொல்லத் தடையென்ன! ஐயோ, எனதரிய தலைவ! காலத்திற்கேற்ற மதியென்பதைப் போல், இப்பொழுது உமது நிலைமையும் செல்வமும் எவ்வளவு தாழ்ந்திருக்கின்றனவோ, அவ்வாறே உமது புத்தியும் மழுங்கி விட்டதோ? இவளைக் கொல்வதா! ஆகா!

( இராகம்—தோடி. )

தலைவனென் பணியைநீக்கித் தரித்திரனுக் கிட்டாலு
மலைகிலாத்துயரை யீந்தே யலக்கணிற் புகுத்திட்டாலுந்
தொலையவென் னுடலைவெட்டித் துண்டுகள் செய்திட்டாலுங்
கலைமகளனையவெந்தன் றலைவியைத் தொலைத்தல் செய்யேன்.

ஆகா! சுந்தராங்கியை எனதுயிரினும் அதிகமாக வன்றோ மதித்திருக்கின்றேன். இம்மதிவதனையே யன்றி என்னைப் படைத்த கடவுளே நேரில் வந்து தேட்களும், பாம்புகளும், நெருப்புத்தணல்களும் நிறைந்த நரகத்தை எனக்கு முன் காட்டி அதற்குள் என்னைத் தள்ளி விடுவதாய்ப் பயமுறுத்தினும் யான் இவளைக் கொல்ல மனங்கொள்வேனோ! ஒருபோது மில்லை. ஆகா! அவளே மாளவ தேசத்தைவிட்டுப் புறப்பட்டு வருவாளாம. நடு வழியில் யான் அவளைக் கொன்றுவிட வேண்டுமாம். இல்லையாயின், யான் அவரிடத்தில் உண்மையாய் நடந்து கொள்வதாய்ப் பிரமாணம் புரிந்திருப்பதற்கும் எனது அபிமானத்திற்கும் தவறுகுமாம். ஆகா! என்ன விந்தை! எனது அபிமானத்தை அறிவதற்கு நல்ல காரியத்தைச் செய்ய ஏவினீர்! விஷப் பரிக்ஷை நன்றா யிருக்கின்றது! உமது சேவகத்தை

யான் இழந்து பிழைத்தற்கு வேறு மார்க்கமின்றி யான் தரித்திரனாய் யாசகம் வாங்க நேரினும், எனக்கு இதனால் பல துன்பங்கள் சம்பவிப்பதாயினும், எனது உடம்பையே அணுவணுவாய் வெட்டிக் குறைத்துச சித்திரவதை புரிந்தாலும் யான் பதமாசனையை நிகரத்த பரிசுத்த வடிவான சுந்தராங்கியின் சிரத்தின் உரோமத்திலுள்ளதோர் தூசிக்கும் தீங்கு செய்ய நினைப்பேனோ? ஒருபோது மில்லை. இக்கொடிய கருத்தைக் கொண்ட இக்கடிதத்தைத் தீக்கிரையாக்க என் மனது நினைக்கின்றது. ஆகா! அதோ மான தன்னை வருகின்றனள்!

(சுந்தராங்கி வருதல்)

(திருப்புகழ்)

சுந்தராங்கி.—

(1) கண்ணாறக் காதலனைக் காண்பதினி மேலெவனோ
புண்ணாகப் போகுதெந்தன் மேனியொடு பாழ்மனமும்
பெண்ணாக யானுதித்த பேறெனது தீயவினைப்-பயனாகும்,

(2) கொங்கடூது தாமரையின் கோடவிழு மாமலரும்
மங்கிட வாதுபுரி மாதுதவழ் வாயமுகஞ்
சிங்கார மாகவெழில் சீதளமுமே பொலியும்-இனியோனே,

(3) தள்ளாடுதே யுடலந்தாளவினி மேலுளதோ
விள்ளாத வாஞ்சையுடன் வேதனெம்மையேன் படைத்ததே
யெள்ளளவு மாசைநிறை வேறலிலதாகச் சதி-செய்தானே.

(4) எங்கேகினாேபோயென்னை வேங்குதெந்த னேழை நெஞ்சம்
தங்காதென் னாவியினித் தாவியுன்னை யானணுகப்
பொங்கூதே யாசைமிகப் போகுமிட மேதெனக்குப்-புக
[ழோனே.

( மாத்தாட பாராமேதனே )

சுந்தராங்கி:—

என்றுநான் காண்பேனடா-என் காந்தனே. (எ)

(1) சென்றமுதலா வுன்னைச் சிந்திப்பதன்றி யொன்றும்
செய்தறியேன் பேதையையோ மனம் பதைத்தேன் (எ)

(2) நீரில்லாப் பயிரானேன் நிலவில்லா விரவானேன்
நிகரில்லா நேசனே-நீங்காதோ வென்துயர் (எ)

ஆகா! புருஷோத்தமன் ஏன் விசனமுட னிருக்கின்றனன்!—அடே! புருஷோத்தமா! என்ன விசேஷம்? உன்னுடைய வதனம வாட்ட முற்றிருக்கக் காரணமென்ன?"

புருஷோத்தமன்:—"அரசி! எனது எஜமானனிடத்திலிருந்தோர் கடிதம் வந்திருக்கின்றது."

சுந்தராங்கி—"யார்? உனது எஜமானனு! எனது எஜமானனன்றே!—ஆகா! அந்த ஜோஸ்யன் தெரிவித்தது சரியாய் முடிந்ததே. அவன் எதிர்காலத்தில நடக்கப் போகும விஷயங்களைத் தெரிவிப்பதாய்ச சொன்னதை யான் நம்பினேனில்லையே—அடே! புருஷோத்தமா! இக்கடிதத்திலிருப்பது க்ஷேமசங்கதியா? அன்றித் துன்பகரக்கூடியதோ? நாங்கள் இருவரும் பிரிந்திருக்கும இவ்வோர் விஷயத்தைத தவிர மற்ற விஷயங்களில் அவன் மனோசஞ்சலமின்றி யிருப்பதாய் எழுதியிருப்பனேற் போதும். அவ்வோர் விஷயத்தில் மாத்திரம வருந்தியவாறிருத்தலே நலம். ஏனெனில் இம்மனோவமைதியின்மையே எமது காதல் அழியாதிருப்பதற்கும் நியவிஷயங்கள் அதனைத் தொடாமல் விலகுதற்கும் சாதனமன்றோ. சில விசனம் அனுகூலத்தைச் செய்கின்றது. சிலது பிரதிகூலத்தைப் புரிகின்றது. காதலர் விஷயத்தில் முந்தியதே நன்மை பயக்கின்றது.

ஆகா! இவ்வரிய கடிதத்தில் எனதுயிரனைய மதிவதன ஹுடைய ஹிருதயமன்றோ அடங்கியிருக்கின்றது. இது எவ்வளவு ஒப்பற்ற வஸ்து. இதை எனது கண்களில் ஒற்றிக்கொள்ளுகின்றேன். இதில் அரக்கு முத்திரை வைக்கப்பெற்றுளது. ஆகா! அரக்கே! நீயும் உன்னை யுண்டாக்கிய தேனீக்களும் எத்தகைய பேருப காரிகள். காதலர் ஒருவருக்கொருவர் தமது ஹிருத யத்திலுள்ள இரகசியங்களை யெழுதி யனுப்புகையில் அதைப பிறர் நோக்காதிருக்குமாறு காவல்புரிந்து காப் பாற்றுகின்றனையன்றோ. உனது உதவியை என்னெ னத் தெரிவிப்பேன்! ஆகா! இவ்வளவு உதவிபுரிகின்ற நின்னைக் காரியம் ஆயிற்றென, விலக்குவதாய் நினைத்து என்மீது கோபங் கொள்வையோ! நன்மையுள்ள அரக்கே!"

(கடிதத்தை முத்தமிட்டு உடைத்துப் படித்தல்)

(கடிதம்)

(இராகம்-ஆனந்தபைரவி.)

அனைத்தினுமரிய வெந்தனுவியே சுந்தராங்கி
நினையொரு முறையேகாண நினைத்தனென் கலிங்கம் விட்டேன்
துறைமுகமிருக்கு மூர்க்குத் துன்னுவையாயிற் காண்பாய்
குறைவிலா விருப்பைக் கொண்டேன் கூறிய பிழைத்தேநல்லேன்.

எனதரிய சுந்தராங்கி! நினது தந்தை என்மீது கொண்ட பெருங்கோபமும் அவர் என் விஷயத்திற் புரிந்த அநியாயமும் என்னை வருத்துவதினும், உன்னைப் பலநாட் களாய்க் காணாதிருந்ததலே, அதிகமாய்த் துன்புறுத்தி வதைக் கின்றது. யான் துறைமுகப்பட்டினத்தி லிருக்கின்றேன். என்மீதில் நீ கொண்ட அன்பு உன்னை எவ்வாறு தூண்டு கின்றதோ அவ்வாறு புரிவாய். உன்மீது யான் கொண்ட

வேட்கை மேன்மேலும் அதிகரிக்கின்றதன்றிக் குறைந்த தில்லை. யான் வாக்களித்து வந்ததற்கு முரணாயும் யான் இதுவரையில் ஒழுகினேனில்லை. உனக்குச் சகல சுகமுமுண் டாவதாக.

இங்ஙனம் அன்பன்,

மதிவதனன்.

(விரைந்து)

ஆகா ! இறக்கைகளைக் கொண்ட ஓர் குதிரை எனக் குக் கிடைக்கு மாயின் யான் உடனே பறந்து சென்று அவ் விடத்திலிருப்பேன் ! புருஷோத்தமா இக்கடிதத்திலெழுதப் பட்டிருப்பதைக் கேட்டனையா ? எனது பிராணகாந்தன் மதி வதனன் துறைமுகப்பட்டினத்திற்கு வந்திருக்கின்றனன். இதைப்படித்துப்பார். அவ்வூர் இங்கிருந்து எவ்வளவு தூரத் திலுள்ளது ? சாதாரணமான அலுவலின் பொருட்டுச்செல் வோர் அவ்விடத்திற்கு, ஓர் வாரத்திற் செல்வாராயின் யான் வாயுவேகமாய் ஓர் நாளிற் செல்லலாகாதா ? என்னைப்போல நீயும் உனது எஜமானனைக்காண ஆவல் கொண்டிருப்பாய். எனினும் என் மனது இவ்வாசையினால் துடிதுடிக்கின்றது. பெரும்பாக்கியத்தைச் செய்த இத்துறைமுகம் இவ்விடத்தி லிருந்து எவ்வளவு தூரத்திலிருக்கின்றதென்பதை விரைவில் தெரிவிப்பாய். ஆகா நாம் ஒருவருக்கும் தெரியாமல் அரண் மனையிலிருந்து எவ்வாறு வெளிப்பட்டுச் செல்வது ? நாம் அங்கு சென்றுவிட்டுத் திரும்பி வரும் வரையில் நாம் இங் கில்லாதிருந்ததற்கு யாது முகாந்திரம் தெரிவிப்பது? முதலில் ஒருவரும் அறியாவாறு நாம் எப்படிப் புறப்பட்டுச் செல்வ தென்பதைக் கூறுவாய் ! நன்மை மிக்க புருஷோத்தமா ! நாம் ஓர் மணியில் எத்தனை காததூரம் செல்லலாம் ?"

புருஷோத்தமன்:—"அம்மா! காலையிலிருந்து மாலைக்குள் இரண்டு காதம் செல்வதே உங்களுக்கு மிக்க சிரமத்தைத் தரும்."

சுந்தராங்கி:—"புருஷோத்தமா! யான் பத்மாவதி யிடம் சென்று, கேட்போர்க்கு உடம்பு வெளியில் வருவதற்கு முடியாமற் சிறிது அசௌக்கியமாயிருப்பதால் உள்ளே சயனித்துக் கொண்டிருப்பதாய்த் தெரிவிக்குமாறு ஏற்பாடு செய்கின்றேன். நீ சென்று எனக்குச் சவாரிக்குத் தகுந்ததோர் உடைதயாரித்துக் கொண்டுவருவாய். அது சாதாரணமான நிலைமையிலிருக்கும் ஸ்திரீயின் உடை போலிருக்கட்டும், விரைவிற் சென்று வா."

புருஷோத்தமன்:—"எனதரிய அன்னை! இவ்விஷயத்தைச் செய்வதற்கு முன்னர் சிறிது நன்றாய் ஆலோசனை புரிந்து அதற்குமேற் செய்யுங்கள்."

சுந்தராங்கி:—"புருஷோத்தமா! இதில் யான் ஆலோசனை செய்வதற்கு யாது சந்தேக மிருக்கின்றது. எனது உயிர் நிலையையொத்த மதிவதனனது உருவம் எனது கண்ணிற்கு முன்னர் நிற்கின்றது. எனது மனம் மற்றெதையும் நினைக்கவில்லை. உடனே சென்று அவனைக் காணமல் இனியோர் கணமும் யான்பொறேன். துறைமுகப்பட்டினத்திற்குச செல்லும் வழியில் என்மனது செல்லுகின்றதன்றி வேறு எத்தகைய மார்க்கத்திலும் செல்ல மாட்டாது. ஆதலின் வேறொன்றும் புகலாமற் செல்வாய்."

(புருஷோத்தமன் செல்லுதல்)

3—வது சீன்:—மலையடர்ந்த பயங்கரமானதோர்
ஆரண்யத்தின் மத்தியிலுள்ள குகை.
நரசிம்ம வீரன், சந்திரன் சுந்தரன்-
மூவரின் சம்பாஷணை.

நரசிம்ம வீரன்:—எனதரிய பாலகர்காள்! இன்று காலைப் பொழுது எவ்வளவு இனியதாயிருக்கின்றது! மிக்கச் சிறிய இக்குகையின் தாழ்ந்த வாசலினிடத்து நன்றாய்க் குனிந்து வெளியே செல்லுங்கள். ஆகா! இக்குறிய வாயில் நமக்கு எத்தகைய நன்மை புரிகின்றது! காலையி லெழுந்தவுடன் கடவுளுக்கு முன்னர் எவ்வாறு குனிந்து வழிபாடு செய்யவேண்டு மென்பதைக் கற் றுக்கொடுப்பதோடு ஒவ்வோர் நாளும் நாமெழுந்திருந் தவுடன் கடவுளிடத்தில் நாம் செலுத்த வேண்டிய இக்கடமையை நினைப்பூட்டுகின்றதல்லவோ! வேந்தர் களின் அந்தப்புரத்தின் வாயில் மிக்க உயர்ந்த பெரும் இராக்ஷசன் கூடத் தனது அபரிசுத்தமான முடியை எடுக்காமலும் குனியாமலும் செல்லக் கூடிய அவ்வளவு உயரமுள்ள தாயிருப்பதால் அது இக்கடனை ஒரு போதும் நினைப்பூட்டாதன்றோ. நாம் இக்குகையி லிருப்பினும் நமக்கு மன்னரும் நிகராவரோ செல்வக் குழந்தைகாள்! கடவுளை ஸ்தோத்திரம் செய்யுங்கள். யான் கற்றுக் கொடுத்தவற்றை மறவாமல் தினம் செய் யுங்கள்.

சுந்தரன், சந்திரன்:—“ அவ்வாறே செய்கின்றோம், பிதா!

(வெண்ணிலாவே வெண்ணிலாவே)

பல்லவி.

மன்னே யெங்கு மொளிர்தேவே
துன்னியெம்மை யாளுங்கோவே (ம)

அனுபல்லவி.

இன்னலா மிம்மண்ணின் வாழ்வு
இன்னமே னுயரண்ணலே (ம)

சரணம்

உம்மை யொருபோதும் நீங்கோம்
எம்மையாளல் நும்பொறையே
இம்மையோடெம் வினைபோக்கிச்
செம்மலே யருள் புரிவீர் (ம)

நரசிம்ம வீரன்:—"பேஷ்! வேறொன்று பாடுங்கள்."

சுந்தரன் சந்திரன்:—

(இராகம்-பாதி சாவேரி பாதி எதுகுல காம்போதி)

"பொய்யினேன் புலையினேன் கொலையினே னின்னருள்
புலப்பட வறிந்து நிலையாப்
புன்மையேன் கல்லாத தன்மையேனன்மை போற்
பொருளலாப் பொருளை நாடும்
வெய்யனேன் வெருளியேன் வெறியனேன் சிறியனேன்
வினையினே னென்றென்னை நீ
விட்டுவிட நினைவையேற்றட்டழி வதல்லாது
வேறுகதி யேது புகலாய்
துய்யனே மெய்யனே யுயிரினுக் குயிரான
துணைவனே யிணையொன்றிலாத்
துரியனே துரியமுங்காணு வந்தனே
சுருதிமுடி மீதிருந்த
வையனேயப்பனே யெனுமறி ஞரறிவை விட்
டகலாத கருணை வடிவே
யண்ட பகிரண்ட முமடங்க வொரு நிறைவாகி
யானந்தமான பரமே."

நரசிம்ம வீரன்:—ஆகா! கண்மணிகாள்! எத்தகைய கவலைக
ளிருப்பினும் துக்கம் நம்மை எவ்வாறு வருத்திலும் கட

வுளைத்தோத்திரஞ்செய்த மாத்திரமே அவைகள்யாவும் தீயின் முற்பஞ்செனை நீங்கி மனதில் ஓர்விதச சந்தோஷ்டியும், நம்பிக்கையும், ஊக்கமுமுண்டாகின்றன வல்லவா ! ஐயோ ! கடவுளது நாமமே பெரும் மருந்து, அமிர்த பானம். பாலகர்காள் ! நாம வேட்டையாடச் செல்வதற்கு நேரமாகின்றது. போவோம வாருங்கள். நீங்கள் மிக்க பாலியர்களாதலின் உங்களுடைய கால்கள் இச்சிறிய குன்றின் மேலுறுவதினால் நோகா. நீங்கள் அங்கு சென்று மிருகங்களைக் கலைத்துவிட்டு வேட்டையாடுங்கள். நான் இக்கீழ்த் தரையிலுள்ள ஆரண்யத்தில் வேட்டையாடுகின்றேன். அக்குன்றின் மீது நீங்கள் ஏறுவீர்களாயின், யான் உங்களுடைய கண்களிற் கோசிறிய காகத்தினைப் போலப் புலப்படுவேன். அவ்வாறே ஒருவர் மேலான நிலைமைக்குச் செல்ல அவர் கண்ணிற்கு மற்றையோர் மிகச அற்பராய்த் தோன்றுவர். அதன் மேலும் செல்லுவரேல், பிறர் இவரின் கண்ணிறகே புலப்படமாட்டார். இக்குன்றின் மீது செல்லின் அரசரது சபைகளில் நடந்துவரும அக்கிரமச் செயல்கள் அரசரின் பக்ஷபாதமான காரியங்கள், முதலியவற்றைப்பற்றி யான் தெரிவித்திருக்கும் கதைகள் உங்கள் ஞாபகத்திற்குவரும். அரசரிடத்திற் சேவகம் புரிதலு மோர் தொழிலாமோ ! அவர்கள் பெறுவதொன்று, புரிவதொன்றல்லவோ ! நாம் இங்கிருத்தலைப் போன்ற பரமானந்த மெதிலுமில்லை யென்பது நிச்சயம். இங்கு எதைக்காணினும் அதனால் மனதிற்குத் திருப்தியும் ஆனந்தமுந் தெய்வ பக்தியு முண்டாகின்றன. ஓர் மரப் பொந்திற்குள் ஒருவருங் காணுவாறிருக்கும் வண்டி

ளைக் காட்டினும் ஆகாயத்திற் பறக்கும் கழுகிற்கே விப
த்ததிகம். நமக்கு இராஜனது தயவினால் ஏற்றமு
மில்லை. அவனுடைய கோபத்தினால் தலை கீழாய்ப்
பாதாளத்தில் விழும் விபத்து மில்லை. அவனுடைய
சமுகத்தை எதிர் நோக்கிப் பணிந்து கேவலமாய் வண
ங்கி யிருத்தலான ஈனமுமில்லை, இங்கு நமக்கு நாமே
பெரும் அரசர். எனினும் பிறதேசத்து வேந்தரால்
நாம் புடையுண்பதுங் கப்பங்கட்டுதலு மில்லை.''

(இராகம் - மோகனம்.)

சுந்தரன்:—

அத்தனே குடம்பை நீங்கா ப்பறவையின்பார்ப்பை யொத்தோ
மெத்தகை யுணர்வு மற்றோம் பேதைமைக இருக்கையானோ
மொத்த னஞ்சிறைபுக் கோரைத்துன் பழுந்துயருங் கொள்வி
ருத்தருக்குரித்தே யாகுஞ்சுக மெனச் சரதந் தோன்றும்.

எனதரிய பிதா! 'நீவிர் கூறுபவையாவும் உமது அனு
போகப் பயன்களே யன்றி வேறில்லை யென்பதுண்மை.
நாங்கள் கூட்டை விட்டகலாததும், இறக்கை முளைக்கப்
பெறாததுமான எளியபறவைக குஞ்சுகளைப்போல விருக்
கின்றோம். இவ்வரணியத்திற்கு அப்புறம் எவ்வாறிருக்
கின்றதென்பதைக் கண்டறியாதவர்கள், சாந்தமாய்க் காலங்
கழித்தல் நல்லதாயின், நமது நிலைமை உசிதமானதே. இத
ற்கு முன்னர் பல துன்பங்களையும் துயரத்தையும் அனுப
வித்தவரும், உமதிஷ்டப்படி உடம்பு வளையாத வயது முதி
ர்ச்சி பெற்றவருமான உமக்கு இந்நிலைமையே பேரானந்த
முடைததா யிருக்கலாம். எங்களுக்கோ இது அஞ்ஞானம்
முற்றும் நிறைந்த அறையா யிருக்கின்றது. இவ்விடத்தில்
நாம் செய்யுங் காரியம் படுக்கையின் மீது பூப்பிரதக்ஷிணம்

குடம்பை=கூடு. பார்ப்பு=குஞ்சு.

செய்வதை யொத்ததே. வறையறுக்கப் பெற்ற ஓரெல்லைக்கு அப்பாற் செல்லற்கும் செயலற்ற கைதிகளின் சிறைச்சாலையைப் போலல்லவோ இவ்விட மிருக்கின்றது.”

சந்திரன்:—

(இராகம் - கானடா)

தாதையே முதுமை தன்னிலறைவதற் கொன்றுங் கல்லாப்
பேதையாய் விலங்கை யொத்துப் பிறந்தவா றிருக்கின்றோமால்
தீதிலாவுயிரைக் கொன்றுதின் பதுந்துயின்று நாளும்
போதினைக் கழிப்பதன்றிப் புரிவது பிறிது முண்டோ.

எனதரிய பிதா! நாங்கள் உம்மைப் போல வயது முதிர்ந்தோராய்ஆனபின்எதைபபற்றிஉரையாடுவோம்! நாங்கள் ஒன்று மறியாப் பேதையராய்ப் பிறந்த நிலைமையிலேயே யிருக்கின்றோமே! பிதா! மாரிகாலங்களில் சிலமாதங்களுக்கு ஓயாது காற்றடித்து, மழையும் பனியும் பெய்து குளிரினால் நாம் வருந்தி யிருக்கையில் நாங்கள் எதைப் பற்றிச் சம்பாஷணைபுரிந்து எங்கள் பொழுதைப்போக்குவோம். எங்களுடைய இப்போதிய நிலைமைக்கும் மிருகங்களின் நிலைமைக்கும் யாதொரு பேதமுமில்லை. வேட்டையாடுவதிலும், இறை தேடுவதிலும், புலி, ஓனாய், நரி, முதலிய வற்றின் கொடிய தொழிலேயே நாமும் பின்பற்றி வருகின்றோம். எது நமக்கு முன்னால் ஓடுகின்றதோ அதைத்துரத்துவதே நமது பராக்கிரமச்செயல். மனிதராற் பிடிக்கப் பட்டுக் கூண்டுகளில் அடைபட்ட பறவைகள் அதையே இன்பமுடையதாய் நினைத்துப்பாடிக் களிப்படைதலைப்போல இச்சிறைச்சாலையை நாம் பெரும் மோக்ஷலோக மென மதித்து நம்மினும் சுயேச்சையா யிருப்பவர் இவ்வுலகத்தி லெவரு மிலரென நினைத்துப் பூரிப் படைகின்றோம்,'!

நரசிம்ம வீரன்.—(சந்தோஷத்துடன்) “ ஆகா! குழந்தை

காள்! நீங்கள் எவ்வளவு அழகாய்ச் சம்பாஷிக்கின்றீர்கள். புல்லாங்குழலும், வீணையும், தேனும், கற்கண்டும், தேவாமிர்தமும், மாதுரியமானவை யென்போர் மடையரே. குழந்தைகளின் மழலைச் சொல்லைக் கேட்பதினும் இவை இனியவையாமோ! குழந்தைகளையின்று இவ்வுண்மையை அறிந்தோர் அவ்வாறு ஒருபோதும் தெரிவியார். பாலகர்காள்! நீங்கள் உலகத்தின் விஷயங்களை நேரிற் கண்டனுபவிக்கா விடினும் நீங்கள் அங்கு சென்று சிலகால மிருப்பீராயின் நீங்களும் எனதபிப்பிராயத்தையே கொள்வீர். அரண்மனைகளில் நடந்தேறிவரும் அக்கிரமங்களை என்னெனப் புகலுவேன்! கண்மணிகாள்! அது வாளின் நுனியிலிருந்து விளையாடுவதை யொத்தது. அங்கிருந்து உத்தியோகம் புரிவது மெத்தக்கடினம். அதைவிட்டு விடுவதும் துன்பம். அவ்விடத்திற் பெரும்பதவி யடைபவன் பாதாளத்தில் விழுந்து துன்புறுவது நிச்சயம். கீழே விழாவிடினும் அந்நிலைமை நெடிது நிலைப்பது துர்லப மாதலின் எப்பொழுது விபத்துச சம்பவிக்குமோ வென நினைத்துச சர்வதா சஞ்சலப் படுவது அவ்வாறு விபத்தை யனுபவித்தலினும் கொடியதன்றே, போரின் விஷயமோ கூறலே அனுவசியம், புகழையும் கௌரவத்தையும் உத்தேசித்து நமது உயிரையும் மதியாது பல அவஸ்தைகளுக் கிலக்காகின்றோ மாயினும் நமக்கு ஏற்கனவேயுள்ள புகழும் கீர்த்தியும் அழிந்துபோய் அவமானமும் தூஷணமும் வந்து சம்பவிக்கின்றன. ஒவ்வோர் சமயங்களில் நமது வீரச் செயல்களுக்கு, நன்றியற்ற தீமையே கைம்மாறாய்க் கிடைக்கின்றது. இவைய

னைத்திலும் கொடியது யாதெனில் நமதுமேலோர் நம்மை அனுவசியமாய்த் தூஷிப்பதை நாம் முறுமுறுக்காமலும் அது அக்கிரமமென்று சொல்லாமலும் சந்தோஷமாய் ஏற்றுக்கொள்ளவேண்டும். ஆகா ! தனையர்காள்! இவைகளின் உண்மையை எனது அனுபோகத்திலிருந்தே நீங்கள் தெரிந்து கொள்ளலாம். எனது தேகம் முழுதிலும் கலிங்க தேசத்தாரின் வாள் வெட்டிய தழும்புகள் நிறைந்திருத்தலை நீங்கள் இதோ பாருங்கள். சிறு வயதில யான் மிக்கக் கீர்த்தி பெற்றிருந்தேன். மாளவ தேசத்து அரசனாகிய பிரதாப சிம்மன் என்னை மிக்க அன்போடு பாராட்டி வந்தனன். யாதாயினும் போர் சம்பவிக்குமாயின், என்னையே முதலில் அழைப்பான். யான் பல போர்களில் மிக்கப்பராக்கிரமத்தைப் புலப்படுத்திப் பெரும்புகழ் பெற்றிருந்தேன். அப்பொழுது யான் எவ்வாறிருந்தே னெனில், ஒவ்வோர் கிளையும் பழச்சுமையைத் தாங்கலாற்றாதுவளைந்திருக்கப்பெற்றோர் பெரும் மரத்தை யொத்திருந்தேன். ஆகா ! மரத்தின் கிளைகளை ஓர் இரவில் புயற்காற்றோ அல்லது திருடர்களோ உலுக்கிப் பழங்களையும் இலைகளையும் கீழே வீழ்த்தி மொட்டையாக்கி விடுவதைப்போல, என்னைத் தழுவிய பெருத்தபுகழும் எனது இயற்கைச் சிறப்பும் மண்ணோடு மண்ணாய் ஓர் நொடியில் மறைந்தது. அதன் பின்னர் யான் ஓர் மொட்டை மரத்தைப் போல வெயிலாற் காய்ந்தும்,மழையால் நனைந்தும், காற்றால் மோதப்பட்டும், வருந்துவதைப் போலப்பல துன்பங்களுக்கு ஆளாகினேன்."

சுந்தரன்:—(விசனத்துடன்) "ஆகா ! உண்மையில் அது நிச்சயமற்ற வாழ்வுதான்."

நரசிம்மவீரன்:—" இவ்வாறு நிகழ்தற்கு யான் செய்த பிழை தானென்ன? ஒன்றுமே யில்லை. எனது விரோதிக ளான இரண்டு பாதகர் பிரதாப சிம்மனிடத்திற்சென்று யான் உண்மையிற் கலிங்க தேசத்தாரோடு நட்பா யிரு ப்பதாயும் மாளவதேசத்தாரைத் தொலைத்துவிட இரக சியமாய் எண்ணங் கொண்டிருப்பதாயும் பிரமாண மாய்த் தெரிவித்தனர். அப்பொய்ச் சத்தியத்தின் முன் னர் எனது யோக்கியதாபக்ஷம முழுதும் மழுங்கிப் பிர யோசனப் படாமற் போயிற்று. இதைக் கேட்ட அர சன் உடனே என்னை நகரைவிட்டுத் துரத்தி விட்ட னன். இந்த இருபது வருஷங்களாய் இக்குகையும் இதைச சுற்றிய கானகமுமே எனது இராஜ்ஜியமாய் நினைத்துக் கொண்டு காலங் கழித்து வருகின்றேன். இங்கு யான் யாதொரு தவறுமின்றிச் சுயேச்சையா ய்க் காலங்கழித்து வருகின்றேன். எனது முந்திய நாட்களில் கடவுளை நினைப்பதற்கே அவகாசத்தைக் கண்டேனில்லை. என்னுடைய அரசனது நினைவும், போரின் ஞாபகமுமே, என் மனத்தை விட்டகலாப் பெருந் தெய்வங்களா யிருந்தன. இப்பொழுதோ அப் பாவங்களை நிவர்த்திக்கும் மார்க்கந் தேடப் போதிய காலம் கிடைக்கின்றது. இப்பொழுது யான் கடவுளை நினையாத நேரமேது ?—பாலகர்காள்! இவ்வாறு நாம் உரையாடி நமது அரியகாலத்தை வீண்செய்வது நாம் செல்ல நினைத்தகாரியத்திற்கு கெடுதலானது. விரைவில் மலைக்குச் செல்லுங்கள். நம்மில்யாவன், ஓர் மானை அடி த்து முதலிற் கொண்டு வருகின்றானோ அவனே இன் றைய விருந்திற்குத் தலைவன். அவன் சும்மா யிருக்க மற்ற இருவரும் அதைச் சமைத்துப் பரிமாச

வேண்டும். நானும் சுற்றிக்கொண்டு வந்து மலையடி வாரத்தில் உங்களைச சந்திக்கின்றேன்.''

சுந்தரன் சந்திரன்:—

(நந்தன் சரித்திரம்—பழனை மருங்கணையும்)

(1) தந்தையேயாம் செல்லுகின்றோம்-வேட்டம்
தந்திடுவீர் விடைசந்தோஷமா யங்கு

(இருவரும் போதல்)

(2) ஓடுதேயொரு புலியே யதை
யூடுருவ விட்டோ-மோர் சரமே-யங்கு

(3) பாயுதே யொருகலைமான் ஆகா!
பாதி வழியினில் தாண்டியதே புதர்

(4) துள்ளுதே முயலினமு மெமந்தை
யெள்ளளவு மதைதநின் பானன்று-கொல்லோம்

(5) பேர்த்தன மரங்களை யும் பல
பேருருவங் கொண்டமுள்ளம் பன்றியின்ம்

(6) தூங்கினபல மதயானைகள்
ஜோடிப் பிடியுடனே பிணங்கியெங்கும்

(7) மாசுணம் பெரும் பரம்போலெங்கும்
வாயைக் குகையெனவே திறந்த சீறி

(8) பேரிடியெனப் பல சிங்கங்கள்
பிளிறியெழுப்பின பேரரவமின்!

(9) ஏறுவோம் மலைச்சிகரம் அங்கு
எத்தகைய மிருகங்களுள கூடி

நரசிம்ம வீரன்:—(தனக்குள்) '' ஆகா பிறவிக்குணத்தை மறைத்து வைப்பது எவ்வளவு கடினம். இச்சிறுவர் தாம் அரசபுதல்வரென்பதைச் சந்தேகியாமலே யிருக்கின்றனர். பிரதாப சிம்மனும் இவர்கள் இங்கு உயிரு

பிடி = பெண்யானை. மாசுணம் = மலைப்பாம்பு.

டனிருப்பதாய்க் கனவிலும் நினைக்கின்றானன்று. இவர்கள் என்னையே தந்தையென வெண்ணிக் கொண்டிருக்கின்றனர். ஆகா! இவர்கள் இக்குகையில் தாழ்ந்து செல்லுமாறு கேவலமாய் வளர்க்கப் பெற்றிருந்தும் அவர்களுடைய எண்ணங்களோ அரண்மனையின் உச்சியை எட்டுகின்றன. அவர்கள் அற்பவஸ்துவையும், அரசபுதல்வரின் கண்ணியத்திற்குரியவாறு மதிக்கின்றனர். பிரதாபசிம்மனது மூத்த புத்திரனும் அவனுக்குப்பின் அரசுறுதற்குரியவனுமான இசசுந்தரன் என்ன செய்கின்றனன்! ஆகா! இக்குகையில் யான் இவர்களை உட்கார வைத்துக் கொண்டு, யான் இவ்வாறு பகைவரைக் கீழேதள்ளி அவர்கழுத்தில் இவ்வாறு எனது காலையூன்றினேனென்று கூறும்பொழுது இசசுந்தரனது முகத்தில் இரத்தம் சூழ்ந்து கொள்ள, இவனோ படபடப்பைக் கொண்டு கைகால்களை முறுக்கிக்கொள்ளுகின்றதோடு ஓர்வித வீராவேசத்தையும் கொள்கின்றனன். அவனுடைய உடம்பு வியர்த்து விடுகின்றது. சிறியவனோ மூத்தவனிலும் அதிகத் தீவிர புத்தியையும் பராக்கிரமத்தையும் உடையவனாகவிருக்கின்றனன். அவன், யான் விவரிக்கும் காட்சிகளை நேரிற் காண்பவன் போல, அப்பொழுது செய்யவேண்டிய பல சூசனைகளை வெகுவிரைவில் தெரிவித்து விடுகின்றனன். ஆகா! பிரதாபசிம்மா! என்னுடைய நிலங்களைப் பிடுங்கிக்கொண்டு என்னை அநியாயமாய் நீ நகரைவிட்டு விலக்கியதற்குப் பதிலாய் உனது நகரையாளுதற்கு யாதொரு சந்ததியுமில்லாது போமாறு, மூன்று வயதும், இரண்டு வயதுமாயிருந்த இவ்விருவரையும் யாரு மறியாவாறு கொணர்ந்து விட்டேன்.

இவர்களை இதுகாறும் தனது குழந்தைகளைப்போல வளர்த்து வந்த எனது மனைவியும் இறந்து விட்டனள். ஆகா! யான் இவ்வாறே காலங்கழிக்க வேண்டியது தான்.—அதோ இவர்கள் மிருகங்களைக் கலைத்துவிடு கின்றனர். யானும் செல்லுகின்றேன்."

(சென்றுவிடுதல்)

4-வது சீன்-துறைமுகப் பட்டினத்திற் கருகிலுள்ள கானகம்.

புருஷோத்தமனும் சுந்தராங்கியும் வருதல்.

சுந்தராங்கி:—

காம்போதி—ஆதிதாளம்.

பல்லவி

கண்ணிகர்மதிவதனன் - கடிதங்கிடைத்தமுதல்
புண்ணாய்ப்போனதென்மனமே. (க)

அநுபல்லவி

புண்ணியம்செய்துறைமுகம் - இன்னமெங்கிருக்கின்றதோ
போகப்போகத்தொலையாது - பாழுமிவ்வழிநீளுதே (க)

சரணம்

துரையவனுறைபதி - துன்னுமெனவேயெண்ணி
விரைவிலடையும்பெரு - வேட்கையிறகாய்க்கொண்டு
துரகமதைவருத்தித் தொலை தூரம்வந்தனம்
புருஷோத்தமனேயின்னம் புரியிருப்பிடமெங்கே. (க)

ஏ! புருஷோத்தமா! நாம் நீண்ட தூரம் குதிரைகளில் வந்தோம். சில நாழிகைக்கு முன்னர் யான் வினவிய போது நீ அத்துறை முகப்பட்டினம் மிக்க சமீபத்திலிருப் பதாய்க்கூறினையே! ஐயோ! என் மனமும் தேகமும் படும் பாட்டை என்னெனத் தெரிவிப்பேன்! என்னை ஈன்றபோது

உறைதல்=இருத்தல். பதி=ஊர். வேட்கை=ஆசை. துரகம் =குதிரை. புரி=ஊர்.

கூட எனதன்னை இவ்வாறு வருந்தியிராள். அடே, புரு ஷோத்தமா! மதிவதனன் எங்கிருக்கின்றனன்? தயவு செய்து தெரிவிப்பாயாடா? என்ன நீயுங்கூட என்னை இவ வாறு வருத்த ஆரம்பித்து விட்டனை? ஆகா!

(இராகம்—மோகனம்)

என்னமோவிந்தையாக விருக்குதேயுந்தன்பார்வை
யின்னலேச்சுமந்தோன்போல நெட்டுயிர்ப்பதனைக்கொண்டா
யென்முகமிரங்கிநோக்கி விழித்தனை நிகழ்ந்த தீதை
யென்னெனவுரைப்பாய் முற்றுமிடரினைத்தோற்றுவித்தாய்.

அடே! புருஷோத்தமா! என்ன என்னை நீ ஓர் மாதிரி யாய்ப்பார்த்து விழிக்கின்றனையே? ஆகா! மிக்க மனோசஞ் சலத்தையும் இரக்கத்தையும் புலப்படுத்துகின்றனை! என்ன விபரீதம் சம்பவித்தது? ஐயோ! ஏன் இவ்வாறு நடுநடுங்கித் திகைக்கின்றனை? உன்னை இவ்வாறு காணயானும புத்திமா ருட்டங்கொள்ளும் நிலைமையை யடைந்தேன். உனது தேக கம் அசௌக்கியமா யிருக்கின்றதோ?"

புருஷோத்தமன்:—

(இராகம்—காம்போதி.)

அன்னையேநிகழ்ந்தவற்றை யறைவதற்குள்ளங்கொள்ளே
னென்னையுமரசனெந்த னெஜமானுடனேயேக
முன்னரேபணித்தானுயினுங் கட்கிவ்விடருண்டாமோ
வென்னெனவுரைப்பேனிந்த நிருபமதோதுவீரே.

சிறந்ததாயே! சொல்வதற்கு எனது நாவெழவில்லையே! என் செய்வேன்? ஐயோ! என்னையும் மதிவதனனோடு அர சன் நகரை விட்டுத்துரத்தி யிருப்பனேல், யான் இத்தகைய

இன்னல்=துன்பம்.

அறைதல்=சொல்லுதல் உள்ளம்=மனம் பணித்தல்=உத்தி ரவு செய்தல்.

சஞ்சலத்தைக் கொள்வதற்கும், உங்கள் மனதிற்கும் உடம்பிற்கும் இவ்வளவு துன்பத்தைக் கொடுப்பதற்கும் ஏதுவுண்டாயிராது. இதோ இக்கடிதத்தைப் படித்து உண்மையைத்தெரிந்துகொள்ளுங்கள்.”

(கடிதத்தை வாங்கிக்கொள்ளுதல்)

சுந்தராங்கி:—“ஆகா! கடிதமா? இதுயாருடைய கடிதம்? மதிவதனனது எழுத்தன்றோ? என்ன விசேஷம்?

சுந்தராங்கி (படித்தல்)

கடிதம்.

(அகவல் - இராகம் - முகாரி)

புகழ் பெறும் சேவகா புருஷோத்தமா நின்
றலை விதன்கற்பாம் விலையிலா மணிதனை
யொருவினள் பிறனையே மருவினன் வேசையா
யென்பதை யுறுதியாய் நன்கறிந் தென்மனம்
செந்நீர் விடுத்துச் செயிர்த்துத் துடிக்குதே
சந்தேக மில்லைநற் சான்றுகள் பலவுள
பழிவாங்க வென்மனம் பதைத்துப் பறக்குதே
நன்மையு முண்மையும் நற்குணம் பெற்றனை
நயந்தன புரிவையேல் நவையிலானவை நீ
துறைமுகப் பட்டினந் துன்னுவள் நடுவினிற்
கோதை நின்றலைவியைக் கொல்வதே நின்கடன்
கொன்றதற்கோர் பெருங்குறி யையுங் காட்டுவாய்
தவறிடின் வேசையின் தாகனே யாவதோ
டவளினும் வஞ்சகப் பாதகனவை நீ.

---

ஒருவி = நீங்கி. செந்நீர் = இரத்தம். செயிர்த்து = கோபத்துடன். சான்று = சாட்சி. நயந்தன = வேண்டுகின்றவற்றை. நவை = குற்றம்.

எனதரிய புருஷோத்தமா! உனது தலைவி தனது ஆபரண மாகிய கற்பைத்துறந்து பிறனொருவனை விரும்பித் தீண்டினள். அதைப்பற்றிக் கிடைத்த சாக்ஷிகள் என்மனதை அறுத்து இரத்தக் கண்ணீர் சொரியச் செய்கின்றன. யான் தெரிவிப்பது சந்தேகத்தினாலும் யூகத்தினாலுமன்று. நிச்சயமான உருசுவினாலேயே எனது ஆராத்துயரமும் அடங்காக் கோபமும் உண்டாயின. இத்தகைய பாதகத்தினைச் செய்ததற்குப்பழிக்குப் பழிவாங்க வேண்டுமென என் மனம்பதைக்கின்றது. நான் அத்தேசத்திற்கு வரக்கூடாதாதலின், எனதரிய புருஷோத்தமா! நீயும், அவளுடைய தீய செயலுக்கு இயையாதவனா யிருப்பையேல் இக்காரியத்தை எனக்காக நீயே செய்ய வேண்டும். அவளுக்கு மோர் கடிதம் இத்துடன் அனுப்பி யிருக்கின்றேன். அதைப் படித்த வுடன் அவள் துறைமுகப்பட்டினத்திற்குப் புறப்பட்டு வருவாள், வரும் வழியில் உனக்குத் தேவையான அவகாசம் கிடைக்கும். அவளைக் கொன்று, நீ அவ்வாறு செய்தா யென்பதற் கோர் அடையாளம் அனுப்புவாய். இவ்வாறு செய்வதற்கு அஞ்சிப்பின் வாங்குவை யாயின் நீ இவ்விஷயத்தில் அவளுக்குத் கரகு சென்றவனாவதோடு அவளைக் காட்டினும் அதிகக் கொடிய பாதகம் புரிந்தவனாவை.

இங்ஙனம்.

மதிவதனன்"

ஆகா! விபசாரமா!! (சுந்தராங்கி திகைத்து நிற்றல்.)

புருஷோத்தமன்: —

(பொன்னார் மேனியனே)

(தேசிகம்-தாளம்-ரூபகம்.)

ஐயோ விக்கடிதமிவள் மார்பைத் துளைத்துயிரை
மெய்யே யுண்டதாகா யினியுய்யும் வகையிலதென்
கையில் வாளெடுத்தே கழுத்தெற்ற லெதன் பொருட்டோ
ஐயோ வென்ன செய்வேனகம் நையுதே வெய்துறலால்.

ஆகா! இக்கடிதமே இவள் கழுத்தை யறுத்து உயிரைக் குடித்து விட்டதே! இனியான் எனது வாளை எடுத்து இவளைக் கொல்லலுங் தேவையோ! ஐயோ! ஒருவரைப் பற்றிப் பிறர் கூறுந்தூஷணைச் சொல்லின் கொடுமையை என்னெனத் தெரிவிப்பேன்? ஆகா!

(இராகம்—செஞ்சுருட்டி)

எரிதந்த வனல்மீறு மிகழ்கொண்ட வசைவாளி
னெறழ்விஞ்சு வாயை வெல்லும்
நரகத்தி லுளவான விஷமிக்க பொருள்யாவும்
நவைமுன்னர் நாணி யோடுந்
துரிதத்தில் மிகுவாயு வெனவெங்கும் நிறைவாகித்
துதைகின்ற சீரையோட்டு
முரமிக்க முனிவோரை மறுவற்ற மடவோரைப்
புனிதத்தை யேனும் விடுமோ.

ஒருவரைப்பற்றிப் பிறர் கூறும் தூஷணமானது நெருப்பினும் அதிகம் சுடும். வாளின் கூரியமுனையினும் அம்பினும் இது மிகவிரைவில் மனிதரை ஓர் நொடியிற் கொல்லும்.

---

மெய்யே=உண்மையில். எற்றல்=வெட்டுதல் வெய்துறல்=துன்பப்படுதல்.

எரி=நெருப்பு வசை=தூஷணம் எறழ்=வலி நவை=தூஷணம் துதைகின்ற=அதிகமான சீர்=புகழ் உரம்=திடம் மறுவற்ற=குற்றமற்ற மடவோர்=பெண்கள் புனிதம்=பரிசுத்தம்.

நரகத்திலிருக்கும் பாம்பு, தேள், பூரான், முதலிய விஷ ஜெந்துக்கள் அனைத்தினும இதன் விஷம் மிஞ்சியது. மனோவேகத்தினும் அதிக விரைவில் உலகத்தின் முழுதினும் பரவி அவருக்குள்ள பெரும்புகழையும ஓர் கணத்தில் இல்லையாக்கிவிடும். ஆகா ! உயர்ந்த பதவியிலிருப்போரான தேவரும், அரசரும், கற்பிற் பிழையாமாதரும, மிக்கக் கடிய தபசியரும், இதன் வாயினின்று தப்புவரோ ! பரிசுத்தமே ஓர் உருவத்துடன் வரினும் அதற்கும் தோஷம் கற்பிப்பரன்றோ. ஆகா ! எனதரிய அன்னை ! கலங்க வேண்டாம்."

சுந்தராங்கி:—

(இராகம்—மோகனம்)

அவனையென் கணவனாக வரித்த நாள் முதலாயானிவ்
வவனியிலவனுக்காக வதிகின்றேன் சென்ற பின்னர்
கவனத்தி லவனைக்கொண்டேன் கனவிலு மறந்தேனில்லை
கவலையால் வருந்தி னொந்தேனவமான பொழுது யாவும்.

ஆகா ! யான் விபசாரியா ? அவன் நகரை விட்டுச் சென்றபின்னர் ஓர் கணமேனும வீணாக்காமல் இரவு பகலாய் அவனை நினைத்த வண்ணம் எனது மஞ்சத்தின் மீது வாடி வதங்கிக்கிடப்பது விபசாரமோ ? அன்றி இரவில் நெடுநேரம் அவனது நினைவினால் துயிலற்று அழுதவண்ணம் புரண்டு புரண்டு வருந்திக் கிடப்பது வேசைத் தொழிலோ? நித்திரையி லடிக்கடி அவனுடனிருப்பதாய்க் கனவு கண்டு திடுக்கிட் டெழுந்து "மதிவதனா" "மதிவதனா" வெனப்பிதற்றி துடி துடித்து வியர்ப்பது கற்பிற்குத் தவறோ."

புருஷோத்தமன்:—"ஐயோ ! பாவம்."

சுந்தராங்கி:—(விசனத்துடன்) "அடே புருஷோத்தமா ! எனது விபசாரச் செயல்களை நீ யாயினும் நன்றாய் அறி

---

வதிதல் = இருத்தல்

வாயன்றோ!—ஆகா! சூரசேனன் என்னிடத்தில வந்து மதிவதனனது புத்தியின் மாறுபாட்டைத் தெரிவித்தனன். அப்பொழுது யான் சூரசேனனை பொய் கொடிய வஞ்சகனென மதித்தேன். இப்பொழுதே அவன் தெரிவித்தது முற்றும் உண்மையென மதிக்கின்றேன். கலியுகதேசத்தில் எவரோ ஓர் வேசைமகள் இவன் மனதை இவவாறு மாற்றிவிட்டனளோ? யான் அவனுடன் எனது இளமையிலிருந்து பிரியாது பழகினவளாதலின், யான் அவன் மனதிற்கு இனிமையுடையவளாய்த் தோன்றவில்லையோ! ஆகா! புருஷரது உறுதியில் நம்பிக்கை வைக்கும் மகளிர் மிக்க மடையரே! பெண்கள் இவ்வாறு நம்பி மோசம் போவதினாலே தான் அவர்களுக்குப் பேதையரென்ற பெயர் கிடைத்தது போலும். ஆடவரை நம்புவோர் என்னைப்போலத் தேம்பித் திகைத்துத் தடுமாறுவர். ஆகா! மதிவதனா! திருடுந் தொழிலையுடையார் பிறரை நம்பாரென்பதற்கிணைய நீ அங்கு புரியும் செயல்களை என்னையும் சந்தேகிக்குமாறு செய்தனையோ!

(அரிச்சந்திர நாடகம்—ஆலமரமென்றது)

இராகம் சகானா - தாளம்-ரூபகம்)

(1) ஆவியென வுன்னை நினைந்தே னடாவெந்தன்
ஆவலனைத்து மவமானதே

(2) உனையென் மனது காணக் கணமேது மெந்தன்
மனது கொதிதது மிக நோகுதே

(3) வேசையெனவே யென்னை நினைந்தாயோ யென்பால்
மாசு மிருக்குமென மதித்தாயோ

(4) மன்னன் முதலியோரை வெறுத்தேனே முற்றும்
உன்னைச் சதமெனவே நினைத்தேனே

(5) ஆகா நற்குணப் புருஷோத்தமா வென்னை
வேகமாய் வெட்டுவதுன் கடனே (ஆ)

(இராகம்—முகாரி.)

நன்றிகூர் சேவகா நின்னாயகன் பணித்தவாறு
கொன்றிடல் வேண்டுகின்றேன் கொடுத்தனேன் யானேவாளைப்
பின்னிடலுண்மைக் கேச்சு பேதையேன் பணிவைமுற்று
மன்னவன் செவியிலேற்றி யகற்றுவா யெனதுமாசை.

அடே! நற்குணம் நிறைந்த புருஷோத்தமா! அருகில் வா! நினது எஜமானன் கூறியவாறு செய்து உண்மைக்குப் பழுதின்றி நடந்துகொள்வாய். மதிவதனனை நீ காணும் போது, என் சிரத்தை வெட்டுவதற்காக யான் எவ்வளவு சந்தோஷமாய்க் குனிந்து கொடுத்தே னென்பதைத் தெரிவித்து எனது கற்பின் உறுதியை அறிவிப்பாய். இதோ வாளையானே உருவித்தருகின்றேன். எடுத்துக்கொள். அவன் விஷயத்தில் என் மனோவாக்கு காயங்களினால் யான் ஓர் பிழையும் புரிந்தறியேன். ஏ தெய்வமே! இதுவே உனது திருவுள்ளம்போலும். அவ்வாறேயாகட்டும். புருஷோத்தமா! இதோ எனது ஹிருதயத்தைக் குத்தி யிரண்டாய்க் கிழித்து விடு. ஏனடா தயங்குகின்றனை? நினது எஜமானன், இந்த ஹிருதயத்திற்குள் இருக்கின்றானென்றெவனை அஞ்சுகின்றையோ? நீ அதை இரண்டாய்க் கிழித்தாலும் அவன் அதை விட்டு அப்புறம் அகலான்! அடே! இனி தாமதியாமல் அவன் ஏவியவாறு செய்து விடு. இதோ குனிந்துகொண்டேன். அடே! ஏன் கலங்குகின்றனை! போர்முதலியவற்றில் சுத்த வீரத்தன்மையைக் காட்டும் நீ என்விஷயத்தில் ஏன் முற்றும் கோழையாயினை. உன் வாளின் முனையும் மழுங்கி விட்டது போலும்.''

புருஷோத்தமன்:—(கண்ணீர் சோர) ''ஆகா! கொடிய வாளே! உன்னை யான் தீண்டுவேனாயின் எனது கைக

---

கூர்தல் = நிறைதல். பணிவை = கீழ்ப்படியும் குணத்தை மாசை = களங்கம்.

ளுக்குப் பெரும்பாவமுண்டாம். சென்றுவிடு கண்ணிற்கு மறைவில்'' (புருஷோத்தமன் வாளையப்பால் எறிந்து விடுதல்.)

சுந்தராங்கி:—''ஏன்? நீ என்னை அவசியம் வெட்டிவிடவேண்டும், நீ அவ்வாறு செய்யததவறுவையேல் உனது எஜமானனது சேவகனன்று. நாணயமுள்ளவனாய் மதிக்கப்படவுமாட்டாய். தற்கொலைசெய்து கொள்வது பெரும்பாவமென்றும அவ்வாறு புரிந்துகொள்பவர் நரகத்திற்குச செலவேண்டுமென்றும் சாஸ்திரங்கள் தெரிவிக்கின்றதாதலின் என்னை யானே மாய்த்துக் கொள்ள அஞ்சுகின்றேன். ஆகா! ஏன் தாமதிக்கின்றனை? அடே கசாபபுதகடைககாரனை நோக்கித்தன்னை வெட்டிவிடுமாறு வேண்டுவதுபோல யானே அவ்வாறு செய்ய உன்னை விரும்பியும் நீ ஏன் தயங்கிநிற்கின்றனை? உடனே வெட்டிவிட்டு மதிவதனனுக்கு அடையாளம் அனுபபிவிடு —ஆகா! மதிவதனா! நீயே சாஸ்வதமென நினைதது யான் எனது தநதையான அரசன் முதலியோரை வெறுதது அவரை மீளாத்துயரத்திற் புகுத்தினேன். என்னை மணக்க விரும்பிமேறுரான எத்தனையோ அரசகுமாரரை உன் பொருட்டு அவமதித்தேன். இவ்வாறு எவனும புரிவது அரிதென்பதை நீ யான் இறந்தபின்னரே அறிவாய்! நீ இப்பொழுது எவளுடைய மோகத்தில் ஆழ்ந்திருக்கின்றனையோ அவளே வெகு துரிதத்தில் எனது அருமை பெருமைகள் நன்றாய் உன்மனதிற்கு விளங்குமாறுசெய்வள்.—அடே! புருஷோத்தமா! உனது எஜமானனது உத்திரவை நிறைவேற்றுதற்கு ஏன் யோசனை செய்கின்றனை?

புருஷோத்தமன் :—(மிக்க விசனத்துடன்) '' எனதரிய

தாயே ! இப்பாதகத்தைப் புரிய என் மனம் எவ்வாறு சம்மதிக்கும்? இக்கடிதங்கிடைத்த நாளாய் நான் நித்திரையே செய்தேனில்லை.''

சுந்தராங்கி. — "ஏன்? உடனே என்னை வெட்டி விட்டுத்திரும்பிச சென்று கவலையற்று நித்திரை செய்யத் தடையென்ன?''

புருஷோத்தமன்:—"அம்மா ! எனது கண்கள் நித்திரையின்றி வெளியிற் பிதுங்கி வந்து விட்டாலும யான் இக்காரியம் புரியேன், இது உறுதி.''

சுந்தராங்கி:—

(இந்திரசபா—சாமிச்கார்போய்)

எதுக்கிங்கு கொணர்ந்தனை இதுசாறும் நீஎன்னை (எ)

(1) பேதையென்பாலே யிரங்கினற்போலே
பேசுகின்ருய் பரிவாலே கருத்தேதோ (நீ எனை)

(2) அரிய நம்பரிகளை வருத்தினைய்சால
அடக்கொண ஆவலெனக்கீந்தாய் வதைத்திட்டாய் (நீ எ)

(3) அரண்மனைவிடுக்க அரசனும்முனிய
சரசாங்கிமுதலியோர் நகைக்கயிடமீந்து (நீ எனை)

(4) தொலைவிலாத்தூரம் துரிதமாய்வந்து
கொலைசெய்ய விரும்பாததேனே பலனேதோ. (நீ எனை)

ஆகா ! புருஷோத்தமா ! இதென்ன விந்தையாயிருக்கின்றது ! எனதுயிரை வாங்குவதற்கு மனமில்லாதவன் இக்காரியத்தைச் செய்ய ஏற்றுக்கொண்டதென்ன ? மதிவதனனிடத்திற் கென்னை அழைத்துக்கொண்டு போவதாய்ப் பாசாங்குபுரிந்து இவ்வளவு தூரம் அழைத்து வந்ததென்ன? ஐயோ பாவம் நமது வேகத்தில் குதிரைகளை எவ்வளவு

பரிவு=விசனம் பரி=குதிரை சால=மிக்க.

வருத்திக் கொன்றனம்! இவ்வளவு நேரத்தையும் வீணாக்கினாய். என் மனதிலும் பெரும் ஆவலை யுண்டாக்கி என்னை வதைத்தனை. அரண்மனையில் யான் இல்லாதிருப்பதினால் அங்கு பெருங்குழப்ப முண்டாவதிற்றடையில்லை. அரசன் என்மீது அடங்காக் கோபத்தைக்கொள்வன். சரசாங்கி முதலியோர் ஏளனம் புரிந்து நகைப்பார். இவ்வளவிற்கும் இடங்கொடுத்து என்னை இங்குகொணர்ந்தும், பூசாரிக்கு முன்னால் ஆட்டை நிறுத்திவைப்பது போல என்னை நிற்க வைப்பதும், கொலை செய்யாமல் விடுவதற்கா? ஆகா! புருஷோத்தமா! உனது கருத்தென்ன?"

புருஷோத்தமன்:—"அன்னை! எனது கருத்தை தெரிவிக்கின்றேன். உங்களுக்கு வந்துள்ள இவ்விடரை எவ்வாறு நீக்குகின்ற தென்பதைப்பற்றி யோசனை புரிந்த பின்னர் இவ்விஷயத்தை உங்களிடத்தில் தெரிவிக்க நினைத்தேன். தயவுசெய்து யான் சொல்வதைச்செவி கொள்ளுங்கள்."

சுந்தராங்கி—"அடே! நீயாது செப்பப் போகின்றனை? வேசையெனும் வார்த்தையை எனது செவிகள்கேட்டுவிட்டன. அதனால் என் மனதிலுண்டான புண் ஒருபோதும் ஆறாது. இனி இவ்வுலகில் எனக்கு யாது இன்பமிருக்கின்றது. ஆகையால் நீ எதைத்தெரிவிப்பினும் என்ன பிரயோசனம்? எனினும் தெரிவிப்பாய்."

புருஷோத்தமன்:—"அன்னை! இனி நீவிர் திரும்பி அரண்மனைக்குப் போக இஷ்டப்படமாட்டீர்களென நினைக்கின்றேன்."

சுந்தராங்கி:—"கொலை செய்யப்படும் பொருட்டு கொணரப் பெற்ற யான் இனி அரண்மனைக்குஞ் செல்வதில்லை. வேறெங்கும் போவதில்லை."

புருஷோத்தமன்:—"தாயே! சிறிது பொறுமையைக் கொள்ளுங்கள். சாதாரணமாய் ஒருவன் உண்மையை உடைமையை மாத்திரம் காண்பித்தல் போதாது. அத்துடன்புத்தி நுட்பத்தையும் புலப்படுத்துவது ஒவ்வொருவனுக்கும் இன்றியமையாத விஷயம். அவ்வாறே யானும் இவ்விஷயத்தில் ஒழுகவேண்டும். நீங்கள் எனது எஜமானன் மீது இவ்வளவு விரைவில் வெறுப்பைக்கொள்வது அடாது. அவர் தீயவழியிற் செல்பவரன்று. மிக்கமனோவுறுதியையுடையவர். பிறமாதரை ஈன்றதாயென மதிப்பவர். யாரோ ஓர் பாதகனது மொழியினாலும் தந்திரச சூழ்சசியினாலும் இக்காரியம் நிகழ்ந்திருக்கின்றது. தவறான எண்ணங்களைக் கொள்வோரைச் சமயம் நோக்கி நாம் சரிப்படுத்தி அவர் திருப்தி அடையுமாறு புரிவதே உசிதமன்றி, அவர் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடத்தல் புத்திமான்களுக்கழகன்று. இது தர்மத்திற்கும் விரோதமாகாது."

சுந்தராங்கி:—"ஆகா! எந்தப் பாதகன் இவ்வாறு செய்தனனோ?"

புருஷோத்தமன்:—"வேறு யாதாயினுமோர் சிறிய ஜெந்துவைக்கொன்று அதன் இரத்தத்தை ஓர் துணியில் நனைத்து எனது எஜமானனுக்கு அனுப்பி உங்களை யான் கொன்றுவிட்டதாகத் தெரிவித்து விடுகின்றேன். அரண்மனையில் நீங்கள் இல்லையென்று யாவரும் சொல்லிக் கொள்ளுவதும் அவர் காதிற்கெட்டுமாயின், அது யான் கொன்றதை உண்மைப்படுத்தும்."

சுந்தராங்கி.—"ஆகா! புருஷோத்தமா! இவ்வாறு செய்த பின்னர்யான் எங்கிருப்பது? அப்படி அங்கிருந்து செய்வது யாது? இத்துயரை எவ்வாறு பொறுத்திருப்

பது ? எனது பிராணகாந்தன் சம்பந்தப்பட்ட வரை யில்யான் இறந்து விட்ட பின்னர், இவ்வுலகில் இனி யான் இருப்பதில் எனக்கு யாது ஸார்த்தக மிருக்கின் றது ?"

புருஷோத்தமன்:—" நீங்கள் இனி அரண்மனைக்குச் செல்ல நினைப்பீர்களாயின்,"—

சுந்தராங்கி:—" இனி அரண்மனையுமில்லை, தந்தையு மில்லை. களிமண்ணின் பதுமையை யொத்த ஜெயபாலனது உபத்திரவமும் எனக்குப் போதும். அவன் என்னை மணக்கும் பொருட்டு என்னிடம் தோற்றுவிக்கும் அன்பும், செய்யும் உபசாரணைகளும், ஓர் தேசத்தை எதிரியின் சேனைகள் முற்றுகை போடுவதைப்போல அவ்வளவு கடூரமாய்த் தோன்றுகின்றன."

புருஷோத்தமன் :— " அரண்மனைக்குச் செல்லாவிடின் இம்மாளவ தேசத்திலேயே நீங்களிருத்தலிற் பய

சுந்தராங்கி:—" வேறு எங்கு செல்வது உசிதமாகும் ?"

புருஷோத்தமன்:—" கலிங்கதேசத்திலிருந்து வந்த சேனாதி பதியான பாரக்கிரமபாகு திரும்பி நாளையதினம் துறைமுகபட்டினத்திற்குவரப்போகின்றனன். நீங்கள் சிலகாலத்திற்கு மிக்கத் துணிவைத் தோற்றுவித்து ஒழுக மனது கொள்வீர்களாயின் நீங்கள் மதிவதனனுக் கருகில் வசிக்கலாம். அவரை அடிக்கடி பார்க்காவிடி னும் அவரது செயல்கள் யாவும் உங்கள் செவிகளிற்கு எட்டியவாறிருக்கும் "

சுந்தராங்கி:—" ஆகா ! அப்படியா ? எனது நாணத்திற்குச் சிறிது பழுதுவரினும், கற்பிக்கு அழிவில்லாதிரு

குமாயின் அத்தகைய விஷயத்தைச் செய்வற்கு ஆக்ஷே பணையில்லை. உனது கருத்தை நன்ருய்த் தெரிவிப் பாய். புருஷோத்தமா!"

புருஷோத்தமன்:—"யான் சொல்வதைக் கவனியுங்கள். முதலில் நீங்கள் பெண்ணென்பதை மறந்துவிட வேண் டும். நீங்கள் இதுகாறும் பிறரை அதிகாரஞ் செய்த தன்றிப் பிறரது ஏவலைப் பெற்றோரன்று. இனி அதி காரதலை விடுத்துக்கீழ்ப்படிதலே உங்களுக்குரியதாய்க் கொள்ளவேண்டும். மாதர்க்கணிகலமாகிய நாணம், மடம், அசசம், பயிர்பபு, என்னும் குணங்களை மறைத் துத்துணிவையும் துடுக்கையும், பிறருக்குச் சரேலென விடையளிக்கும் குணத்தையும், பிறரிடத்தில் அஞ்சா திருத்தலேயும் தோற்றுவிக்க வேண்டும். உங்களது மெல்லிய அழகிய மேனியை, வெயில் முதலியவற்றிற் குத் தோற்றுவித்தல், முறட்டுத்தொழில் புரிதல் முத லியவற்றைச் செய்ய விருப்பங்கொள்ள வேண்டும். ஐயோ! இவற்றைச் செய்யச்சொல்வதற்கு என் மனது சிறிது மிடந்தரவில்லையே."

சுந்தராங்கி:—"நீ தெரிவிப்பதை அறிந்தேன். யான் இப் பொழுதே ஆடவரின் தைரியத்தைப் பெற்றேன். மேல் நடக்கவேண்டியவற்றை விரைவில் தெரிவிப்பாய்."

புருஷோத்தமன்:—"நீங்கள் ஓர் புருஷனுடையைத் தரித்துக் கொண்டு என்னைப்போல மாறவேண்டும். இதை முன் னரே யான் யோசனை செய்து இதோ உங்களுக்குத் தகுந்த ஆணுடைகளைக் கொணர்ந்திருக்கின்றேன். இவற்றை அணிந்துகொண்டு பராக்கிரமபாகு விடத் திற்குச்சென்று அவனுக்குப் பணி புரிவதாய்ச் செப் புங்கள். அவன் மிக்க நாணயமும் நற்குணமும், பரிசுத்

தமுமுடையவன். சங்கீதப்பிரியன். பாடுவதில் உங்களுக்கு மிக்கத் திறனுண்டென அறிவிப்பீர்களாயின் அவன் உங்களை உடனே ஏற்றுக்கொள்வான். யான் உங்களுக்குத் தேவையான பொருளை அப்போதைக்கப்போது அனுப்புகின்றேன். நீங்கள் ஒன்றிற்கும் கவலைப்படவேண்டாம். அம்மா."

சுந்தராங்கி:—"ஆகா! புருஷோத்தமா! நீ ஒருவன் இல்லையாயின் எனக்கு இவ்வுலகில் யாதொரு ஆறுதலுமில்லை. நீ சொல்லியவாறே செய்கின்றேன் உடைகளெங்கே"

புருஷோத்தமன்;—(கொடுத்தல்) "இதோ எடுத்துக்கொள்ளுங்கள். எனதரிய தாயே! யான் இனி அதிகம் இங்கு தாமதித்தால் உங்களை நானே அழைத்து வந்ததாகச் சந்தேகிப்பார்கள். ஆதலின் யான் உடனே திரும்பிசென்று விடவேண்டும். இந்தச் சிமிழையும் எடுத்துக்கொள்ளுங்கள். இதற்குள்ளிருக்கும் மருந்து உயிரைக்காப்பாற்றும் அமிர்த சஞ்சீவி. கப்பலிற் செல்லும்போதும் வேறு சமயத்திலும் நீவிர் மனக்கவலையாலும் பிறகாரணங்களாலும் தேக அசௌக்பத்தைக் கொள்வீர்களாயின் இதிற் சிறிது உட்கொள்வீரேல் உடனே சௌக்கியமடைவீர். இப்பாதையிற் சிறிது செல்லுவீர்களாயின் எதிரில் துறைமுகப்பட்டினமிருக்கின்றது. தயவு செய்து செல்லுங்கள். யான் விரைவிற் போகின்றேன்."

சுந்தராங்கி:— "மெத்த சந்தோஷம் நீ சென்றுவிடு. யானும் இதோ துறைமுகப்பட்டினம் போகின்றேன்."

(இருவரும் பிரிந்து செல்லுதல்

5—வது சீன்:—மாளவதேசத் தரசனது கொலு மண்டபம்.
பிரதாபசிம்மன், சரசாங்கி, ஜெயபாலன், பராக்கிரமபாகு
முதலியோரும், மற்றவரு மிருத்தல்.

பராக்கிரம பாகு:—

(இராகம்—தோடி)

வேந்தனே கலிங்கதேயம் விரைவினில் மீளவெந்த
னேந்தலு மேவுகின்றான் விடைதரிலுடனேயாங்கு
போந்து மதெண்ணம் யாவும் புகலுவேனினிமேல்யாமும்
சாந்தமாய்ச் சந்தியாது சமரினிலெதிர்த்தல் திண்ணம்.

சிறந்த அண்ணலே! எனதரசன் உடனே திரும்பி வருமாறு எனக்குக் கட்டளையனுப்பி யிருக்கின்றனன். யான் செல்ல விடையளித் தருளுமின்? இனி நாம் விரோதிகளாய்ப் போரினிற் சந்திக்க வேண்டுமே யென்பதைப் பற்றியே விசனிக்கின்றேன்.”

பிரதாபசிம்மன்:—“ பராக்கிரம பாகு! எனது நகரத்தினர், யான் உங்கள் அரசனுக்குக் கப்பங் கொடுத்துக் கீழ்ப் படிதலைப் பொறுக்கார். யான் அவர்களிஷ்டத்திற்கு விரோதமாய் நடப்பேனுயின் யான் அவர்களுக்கு அரசனுயிருக்கத் தகுந்தவனுவேனே!”

பராக்கிரமபாகு;—“ மெத்த நன்று! யான் இப்பொழுது புறப்பட்டுத் துறைமுகப் பட்டினத்திற்குச் செல்ல உத்தேசிக்கின்றேன், கடைசியாய் விடைபெறுமாறு வந்தேன்.”

பிரதாபசிம்மன்:—“ மெத்த நல்லது! சென்றுவா ”

(பராக்கிரமபாகு சென்று விடுதல்)

---

எந்தல்=அரசன் போந்து=போய் சமர்=போர் திண்ணம்=உறுதி.

சரசாங்கி:—" இவன் பெரும் விசனத்துடன் செல்கின்றனன், எனினும் யாம் அவனை அவ்வாறு அனுப்பியது நமக்கு மிக்கப் பெருமையே "

ஜேயபாலன்:—இந்நகரத்திலுள்ள வீரர்கள் யாவரும் இவ்வாறு இவனைத் திருப்பி விடுவதையே கோரினர்.

பிரதாபசிம்மன்:—" பராக்கிரமபாகு இங்கு நடந்தவற்றைப் பற்றி ஏற்கனவே தனதரசனுக்கு எழுதிவிட்டனன், ஆதலின் நாம் இனி தாமதியாது நமது சேனைகளைத் தயாரித்தல் ' இன்றியமையாத முதற்காரியம். அவர்களது சேனைகள் நடு வழியில் தங்கியிருப்பதாய்த் தெரிகின்றது. இனி அவைகள் இங்கு விரைவில் வந்து விடுமாதலின் யாம் போருக்கு ஆயத்தமாயிருத்தல் வேண்டும்."

சரசாங்கி:—" ஆமாம் ? இவ்விஷயம் மிக்க சிரத்தையுடன் கவனித்தற்பாலதே. யாம் மிக்கத்துரிதமாய்ப் பெருஞ் சேனையைத் திரட்டவேண்டும்."

பிரதாபசிம்மன்:—" இது இவ்வாறு சம்பவிக்கு மென்பதை முன்னுடியே யறிந்து நமது வீரர்கள் முன்னெச்சரிக்கையாயிருக்கின்றனர். அதைப்பற்றி நமக்கதிகம் கவலை தேவையில்லது; எனதினிய சரசாங்கி ! சுந்தராங்கி எங்கே ? அவள் ஏன் இன்று இவ்விடத்திற்கு வந்தாளில்லை, அவள் நம்மீது பெருங்க்ஷாத்திரத்தைக் கொண்டவளாய் வரவர நமக்குச் செலுத்தவேண்டிய மரியாதையையும் முற்றும் மறந்தனள்போலும். நாமும் இதைக்கவனியாது விட்டுவிடுதல் தவறு. அவளை என்முன்னர் விரைவில் வரவழை "

(ஓர் சேவகன் செல்லுதல்)

சரசாங்கி:—"பிராணகாந்தா! மதிவதனன் சென்ற முதல் அவள் அதிகமாய் எங்கும் வராமல் தனது அந்தப்புரத்திலேயே விசனித்திருக்கின்றனள். நாடகளை இதை நிவர்த்திக்க வேண்டும். நீங்கள் தயைபுரிந்து அவளிடத்திற்கடுமையான மொழிகளை வசனிக்கவேண்டாம். அவள் மிக்க மெல்லிய தன்மையை யுடையாள். சொற்கள் அவள் மனதில கூறிய அம்புகளாய்ப் பாய்ந்து அவளை மாய்த்து விடும்."

(சேவகன் திரும்பி வருதல்.)

பிரதாபசிம்மன்:—"அவள் எங்கேயடா? உன்னுடன் வரவில்லையா? அவளது துணிவையும் அகம்பாவத்தையும் எவ்வாறு தண்டிப்பது?"

சேவகன்:—"அரசே! உங்கள் புதல்வியின் அந்தப்புரத்தின் வாயிற் கதவு சாத்தப் பெற்றிருக்கின்றது. யான் எவ்விதம் உரக்கக்கூவினும் ஒருவரும் விடையீந்தாரில்லை."

சரசாங்கி:—"பிரபு! யான் கடைசியாய் அவளைப்பார்த்தபோது அவள் திரேக சௌக்கிய மின்றியிருப்பதாயும் தான் வேந்தனிடத்திற்குத் தினந்தினம் வந்து மரியாதை செலுத்துவதற்குவர முடியாதிருப்பதைத் தெரிவிக்குமாறும் வேண்டினள். அதை யான் உங்களிடத்தில் தெரிவிக்க மறந்துவிட்டேன். மன்னித்தருளுவீர், பிராணகாந்தா!"

பிரதாபசிம்மன்:—"ஆகா! கதவு சாத்தப்பட்டிருக்கின்றதா! யானே செல்கின்றேன்."

(அரசன் எழுந்துசெல்லுதல்).

சரசாங்கி:—"எனதரிய சகோதரா! நீயும் மன்னவருடன் செல்வாய்."

ஜெயபாலன்:—"அவளுடைய சேவகன் புருஷோத்தமனை யும் இவ்விரண்டு நாட்களாய்க்காணோம்."

(ஜெயபாலனும் செல்லுதல்)

சரசாங்கி:—(தனக்குள்) "ஆகா புருஷோத்தமா! மதிவத னன் விஷயத்தில் உனக்கிவ்வளவு அபிமானமா! ஒருக் கால் யான் கொடுத்த விஷத்தை யுண்டிருப்பனோ? அதனாலே தான் இவன் காணப்படவில்லையென நினைக் கின்றேன். அவள் எங்கே சென்றிருப்பள்? அவள் தனது பேரவா சிறகாய் முளைக்கப்பெற்று மதிவதன னிடத்திற்குச் சென்றனளோ? அல்லது விண்ணுல கமே சென்று விட்டனளோ? இரண்டும் எனக்கு ஒன்றே! அவள் தொலைவாளாயின் மாளவதேசத்தின் அரசியல் எனக்கும் ஜெயபாலனுக்கும் சித்திப்பது நிச் சயம்—ஜெயபாலா என்ன விசேஷம?

(ஜெயபாலன் வருதல்)

ஜெயபாலன்.—"அவள் எங்கேயோ ஓடிப்போய் விட்ட னள். இதையறிந்த அரசன் சிங்கமெனக் கர்ச்சிக் கின்றனன். அவனிடத்தில் நெருங்க எவரும் அஞ்சு கின்றனர். நீயே உள்ளே சென்று அவனைச சாந்தம் செய்யவேண்டும்."

சரசாங்கி:—"மெத்த நன்று, செல்கின்றேன்."

(சரசாங்கி சென்றுவிடுதல்)

ஜெயபாலன்:—(தனக்குள்) "சுந்தராங்கியின் மீது எனக்கு காதலும் வெறுப்புமுண்டாகின்றன. மங்கையர் யாவ ரிலும் மிக்க அழகு நற்குணம் நல்லொழுக்கம், கல்வி, புத்தி நுட்பம், முதலிய வற்றை யுடைத்தாயிருத்த லின் அவளை விரும்புகின்றேன், இத்தகைய சிறப்பின

ளான பெண்மணியே கேவலமோர் ஏழையான யாச கனை கணவனாகத் தேர்ந்தெடுத்துக்கொண்டு என்னை இகழ்ந்து தூஷித்தது அவளுடைய பகுத்தறிவிற்கோர் பெருங்குறைவு. இஃதே யவளிடத்தில் வெறுப்புண் டாவதற்குக் காரணம். அதோ புருஷோத்தமன் வரு கின்றனன்!

(புருஷோத்தமன் வருதல்)

யாரடா அவன்? அடே புருஷோத்தமா! என்ன மூட்டை கட்டுகின்றனையோ? ஓய் தரகரே! இங்கு வாரும். (அதட்டிய குரலில்) அடேதுஷ்டா! உனது எஜமானி எங்கு சென்றனளடா? உடனே தெரிவிக்கின்றாயா? இல்லாவிடின் உன்னை மகாகனம் பொருந்திய கழுகரசனது விருந்திற் கனுப்புகின்றேன்."

புருஷோத்தமன்:—"ஆகா! என்ன விசேஷம்? எனதரிய பிரபுவே!"

ஜெயபாலன்:—"சுந்தராங்கி எங்கே சென்றனளென்பதைத் தெரிவிக்கின்றனையா? இல்லையா? இல்லையாயின் உன்னை இன்னோர்முறை வினவேன். உனது ஹிருதயத்தி லுள்ள இவ்விரகசியத்தை நீ வெளியிடாவிடின், அதைப் பிளந்துயானே அறிந்துகொள்வேன். அந்தக் கீழ்மகன் மனிவதனனிடத்திற்குச் சென்றுவிட்டனளோ?"

புருஷோத்தமன்:—"ஆகா! அரசியை என்று முதற்கண்டீரி ல்லை? மதிவதனன் கலிங்கதேசத்திலன்றோ இருக்கின் றனன்! இவள் அவனுடனிருத்தல் எவ்வாறு கூடும்?"

ஜெயபாலன்:—"அடே! எனதருகில்வா. யானுன்னை நன்று யறிவேன். நீ தெரிவிக்கின்றனையா? இல்லையா?

புருஷோத்தமன்:—"ஓ! மகாகனம் பொருந்திய பிரபுவே!"

ஜெயபாலன்:—"ஓ மகாகனம் பொருந்திய தரகரே! உனது எஜமானி எங்கிருக்கின்றனளென்பதை மாத்திரம் தெரிவித்து விடு. இல்லையேல் இதோ உன்னை எனது வாளுக்கிரையாக்குவேன்."

புருஷோத்தமன்:—(ஓர் கடிதத்தை நீட்டி) "இதோ! இக்கடிதத்தைப்பாருங்கள். இதிலுள்ள சங்கதியைத் தவிர வேறொன்றையும் அறியேன்."

ஜெயபாலன்:—"எங்கே! அதைப்பார்க்கலாம். அவள் இவ்வண்டத்திற் கப்பாலிருப்பினும யான் தொடராது விடுவேனு."

(ஜெயபாலன் கடிதத்தைப் படித்தல்)

புருஷோத்தமன்:—(தனக்குள்) "சுந்தராங்கியைக் கொன்றுவிட்டதாக இன்று மதிவதனனுக்கு எழுதிவிட்டேன். இவன் அவளைத்தேடிச் செலவனேல மதிவதனன் கையாலிறத்தல நிசசயம. போகட்டும."

ஜெயபாலன்:—"ஆகா! அபபடியா! இக்கடிதம் உண்மையானது தானு?"

புருஷோத்தமன்:—"அபபடியே மதிக்கின்றேன்."

ஜெயபாலன்:—"இது மதிவதனது கையெழுத்தே. அதையான் நன்குயறிவேன். அடே, புருஷோத்தமா! இனி உனது வஞ்சகத்தை விடுத்து என்னிடத்தில் உண்மையாய் நடந்துகொள். எனது ஏவல்களை நீ மிக்க ஊக்கத்துடன் புரியவேண்டும். எத்தகைய காரியமேயாயினும். பின்வாங்காது செய்வையேல், நீ யோக்கியனுவாய். உனக்குத் தேவையான பொருளுதவி செய்கின்றேன், உனக்கு உயர்ந்த உத்தியோக முண்டாவதற்கும் சிபார்சு செய்கின்றேன்."

புருஷோத்தமன்:—"மகா பிரபுவே! மெத்த நன்று அவ்வாறே செய்கின்றேன்."

ஜெயபாலன்:—(சந்தோஷத்துடன்) "இதோ இப்பணப்பையை எடுத்துக்கொள். நீ இப்பொழுது ஓர்காரியம் செய். மதிவதனனுடைய உடைகளில்உன்னிடம் யாதாயினுமொன் றிருக்கின்றதோ ?"

புருஷோத்தமன்:—"மதிவதனன் கடைசியாக ஊறைவிட்டுச் சென்றபோது அணிந்திருந்த உடையை எனக்கு இனமளித்துச சென்றனன். அது எனது வீட்டிலிருக்

ஜெயபாலன்:—"நீ விரைவிற்சென்று அதை எடுத்துக்கொண்டுவா. அதை என்னிடம் கொடுப்பதே நீ எனக்குச் செய்யும் முதற்காரியம், போவாய்."

புருஷோத்தமன்:—"அவ்வாறே செய்கின்றேன் மகாப்பிரபுக்களே!"

(செல்லுதல்)

ஜெயபாலன்:—(தனக்குள்) "யான் இவர்களைத் துறைமுகப் பட்டினத்தில் சந்தித்து அவள் கண்ணிற்கெதிரில் மதிவதனனைக் கொன்று எனது சௌரியத்தை அவளுக்குக்காண்பிக்கின்றேன். என்னை அவளது பாததூளிக் கன்றோ ஒப்பிட்டனள். அவளை எனது காலால் உதைத்து அரண்மனைக்குத் திருப்பித்தள்ளிக்கொண்டு வருகின்றேன்."

(புருஷோத்தமன் உடைகளுடன் திரும்பி வருதல்)

ஜெயபாலன்:—"இவைகள் தானோ நீ குறித்தவை ?"

புருஷோத்தமன்:—"ஆமாம்! மகாப்பிரபுவே."

ஜெயபாலன்;—"இவைகளை எனது அந்தப்புரத்திற்குக் கொண்டுவருவாய். யான் இப்பொழுதே துறை முகப் பட்டினம் செல்லவேண்டும். யான் புரிவதை நீமௌனத்துடன் பார்த்துக் கொண்டிருக்க வேண்டியது."

(ஜெயபாலன் சென்று விடுதல்)

புருஷோத்தமன்:—(தனக்குள்) "ஓகோ! என்னை வஞ்சகனையும் பொய்யனையும் ஆக்க நினைக்கின்றையோ? அது ஒரு போதும் பலியாது, நீ துறைமுகப பட்டினஞ் செல்வையாயின் துன்பமே சம்பவிக்கு மன்றி உன தெண்ணம ஒரு போதும் நிறைவேறாது."

(இவனும் பின்றொற் செல்லுதல்)

6வது சீன்:—ஓர் ஆரண்யம். சுந்தராங்கி ஆண்வேஷந் தரித்து வருதல்.

சுந்தராங்கி:—(சோர்ந்து வருந்தி)

(பண்–மற்றுப் பற்றெனக் கின்றி நின்றிருப் பாதமே மனம்பாவித்தேன்)

இராகம் தேசிகதோடி—தாளம் ரூபகம்

(1) என்ன செய்குவேனெங்கு செல்லுவேனெங்கிருக்குதோ [வந்நகர்
வகிடும் நெறிதவறினே னிருளில் வாரணியம் புக்கனேன்.

(2) துன்னலாமென வெண்ணியே மனந்துயரினால் [மிகவாடுதே
தோன்று மிவ்வன மெங்கு முற்றுமோ தோகையேன் [மனமாழ்கினேன்.

(3) எங்கு நோக்கினு மெண்ணிலாப் பலதுஷ்டமிருக [மேகுதே
எங்குதே மனமோங்கும் பீதியாலெங்கு சென்று [மறைகுவேன்;

(4) இவ்விருதின மூண்டிடாமையாலெந்தன் மெய் மிகச் [சோருதே
ஈசனே இனியுன்னருளின்றியுய்தலு முளதாகுமோ.

ஆகா! எனது வழிதப்பி இவ்விருண்ட கானகத்திற்குள் இரண்டு நாட்களாய் அலைந்து திரிகின்றேன். இதை விட்டு வெளியிற் செல்லும வழியைக் காணேனே. ஐயோ! எங்கு நோக்கினும் யானை, புலி, கரடி, நரி, பன்றி, முதலிய துஷ்ட விலங்குகள் கும்பல் கும்பலாய் நிற்கின்றனவே. அவைகளைக் காணக் குலை நடுக்க முண்டாகின்றது. ஆங்காங்கு மரங்களில் மறைந்து அவைகளின் கண்ணிற்படாமற் செல்லுகின்றேன். இவ்விரண்டு தினங்களாய் உணவு முதலிய அருந்தாமையால் எனது கால்கள் சோர்ந்து தள்ளாடுகின்றன. கண்களோ இருளுகின்றன. ஐயோ! அத்துறைமுகப்பட்டினம் எங்கிருக்கின்றதோ அறியக் கூடவில்லையே. ஆகா! எனது பிராணகாந்தனைக் காணவேணு மென்னும் மனோ உறுதியில்லையாயின், யான் உடனே கீழே விழுந்து இறத்தல் நிச்சயம். அந்த உறுதியால், தள்ளாடும் இவ்வுடம்பை இழுத்துக் கொண்டலைகின்றேன். இதோ ஓர் சிறிய பாதை செல்கின்றது. அதைத் தொடர்ந்து செல்கின்றேன்.

(இராகம்—எதுகுல காம்போதி)

இவ்விருதினமும் புல்லிலென்னுரு முடலை வீழ்த்தி
யொவ்வொரு கணமு மஞ்சியுறங் கிடாப்பொழுதைப் போக்கி
யெவ்விட மலைந்து வாடியே கினும்தனை நீங்கு
மவ்வழியறிந்தேனில்லை யமலனை தருளோ யிஃதே.

* உறங்கல் = தூங்கல். அமலன் = கடவுள்.

ஆகா! இவ்விரண்டு நாட்களும், இரவில் ஊளையிடும் இக்கொடிய விலங்குகளுக் கிடையில் இருளில் புல்லின் மீது எனது மெல்லிய திரேகத்தை வீழ்த்தி ஓயாத பயத்தினால் ஒவ்வோர் கணத்தையும நரகவேதனையாய்க் கழித்தேன். ஐயோ! எவ்வாறு அலையினும் இவ்வாரணியத்தை விட்டு நீங்கும் வழியைக் கண்டேனில்லை. இச்சிறுபாதையும் வர வரக் குறுகுகின்றது. இதன் முடிவை நோக்குவேன்.

அரிச்சந்திர நாடகம்—போரேனிதோ போரேனிதோ

(இராகம் கேதாரம்—தாளம் ரூபகம்)

கைசோருதே கால்சோருதே கண்கள்மிக
யிருளாகுதே கணமுமினி நடவேன்

1. ஐயாவெந்த னப்பா ஈசா
அடியாளென்னை யருளாயினி

2. முன்னர்துறை முகமிருப்ப
தென்னவவன் மொழிந்தான்காணேன்

3. நடையாற்கால்கள் கொப்புளித்தே
நடவாவித மிடரீந்தன

4. மலைபோற்பெரும் மதயானைகள்
வழியிற்பல குழுமுகின்ற

5. நீர்வேட்கையால் நாவறண்டே
நெருப்பாய்த்தேகம் பதைபதைக்க

6. போதுந்துயர் பேதையன்றோ
பொறுப்பாய்வழி விடுப்பாய் யீசா

7. ஆகாவிங்கோர் குகைதோனுதே
ஐயோவிதி விருப்பதென்னோ.

---

குழுமுதல்=ஒன்றுய்க்கூடுதல்.

ஐயோ ! கற்களின் மீதும் முட்களின்மீதும் நடந்து கால்கள்முற்றும்கொப்புளித்து அக்கொப்புளங்கள் உடைந்து நெருப்பாய் எரிகின்றனவே. ஆகா ! தாகத்தினால் நாவற ண்டு தேகம் முழுதும் வேகின்றதே. இனி ஓர் நிமிஷமும், உணவு முதலிய கொள்ளாது இவ்வுயிர் நிற்காது போலிருக் கின்றதே ஆகா! இதோ ஓர் குகைதோன்றுகின்றது. அதில் யாவராயினும் மனிதரிருக்கின்றனரோ ? அல்லது சிங்கம் முதலிய விலங்குகள் வசிக்கின்றனவோ ? அல்லது நாகரீக மற்ற காட்டு மனிதரிருப்பரோ ? யான் சநதடி செய்யாது அப்பாற் சென்று விடுதலே நன்று. அதிலிருப்பவர் யாவ ரெனக்கூப்பிடமிக்கஅசசமாயிருக்கின்றது. எனினும்,எனது கடும்பசி தாகங்கள் என்னுடைய பயத்தை விலக்க ஓர்விதத் துணிவை தருகின்றன. சகல போகங்களையும் அனுபவிப் போரான பெருஞ்செல்வர் எப்பொழுதும் வீரமற்ற பெருங் கோழையரா யிருக்கின்றனர். வறியவரே மிக்கத்துணிந்த வர். வாசலில் நின்றவண்ணமே கூவுகின்றேன். யாரங்கே ! இக்குகைக்குள்ளிருப்பவன் யாவன் ? ஐயோ ஐந்தாறு தட வைகள் உரக்கக்கூவியும் விடையில்லையே. யான் உள்ளே செல்கின்றேன். எனது வாளையுருவிக் கரத்திற்பிடித்துக் செல்லின் எத்தகைய விரோதியும் என்னை எதிர்க்க அஞ்சு வன்.

(உள்ளே செல்லுதல்)

ஆகா ! இது மிக்க இருளடர்ந்ததா யிருக்கின்றதே ! உட்புறத்தில் வெளிச்சந்தோன்றுகின்றது. ஆகா ! மலையிலி ருக்குமோர் பிளவினாலுண்டான வெளிச்சமன்றோ ! மனித ரின் படுக்கைகளிருக்கின்றனவே ! வேட்டைக்குத் தேவை யான ஆயுதங்கள் ஓர் புறத்திலிருக்கின்றன, மற்றோர் புறத் தில் உடைகள் சில காணப்படுகின்றன. இதோ இம்மூலையில்

அடுப்பு முதலியன விருக்கின்றன. இது மனிதர் வசிக்கு மிடமென்பதற்குச் சந்தேகமுமில்லை. ஒருவரும் புலப்பட வில்லையே. இவர் கள்வராயிருப்பரோ! அன்றி வேடர், குறவர் முதலிய வனசரர்கள் இவ்விடத்தில் தங்குகின்ற னரோ! இதோ கொஞ்சம் ஆகாரமும நீரும் வைக்கப்பட் டிருக்கின்றன. இதன் சொந்தக்காரரிலரே! என்செய்வேன், எனதுயிர் போகின்றதே. ஆபத்திற்குப் பாபமில்லையெனப் பெரியோர் கூறுகின்றனராதலின் இவ்வுணவிற் சிறிதெடுத்து க்கொள்வது திருட்டாகாது. சொந்தக்காரர் வரின், உண்மை யைத் தெரிவித்து மன்னிக்குமாறு வேண்டிக்கொள்கின் றேன்.”

(ஆகாரத்திற் சிறிதெடுத்துப் புசித்துக்கொண்டிருத்தல்)

(நரசிம்மவீரன், சுந்தரன், சந்திரன் மூவரும் வருதல்.)

நரசிம்மவீரன்:—“சுந்தரா! உனது சாமர்த்தியமே சாமர்த்தி யம்! வேட்டையாடுவதில் உனக்கு ஈடாவோர் ஒருவ ருமே இலர். இன்று இம்மானை நீயே கொன்றமையின் நீயே இன்றைய விருந்திற்குத் தலைவன். யானும் சந்தி ரனும் நமக்குத் தேவையான உணவைத் தயாரிக்கக் கடமைப்பட்டவரானோம். வாருங்கள். நமதுகுகைக்குட் சென்று விரைவிலுண்டு களிப்படைவோம். மிக்கஉழை த்து வேலை செய்வோர்க்குப் புளித்த கூழும் அமிர்த மாய்த்தோன்றும். அவர் கூரிய மேடுபள்ளங்களைக் கொண்ட கற்பாறையிலும் குறட்டை விட்டுக்கொண்டு நித்திரை செய்வர். ஒருழைப்புமின்றிச் சோம்பியிருப்ப வர்க்கு மிக்க மெல்லிய புஷ்பச்சயனமும் கடிதாய்த் தோன்றும். அவர் நித்திரை செய்யலாற்றாது புரண்டு புரண்டு புழுங்கிக்கிடப்ப ரன்றோ.”

சுந்தரன்:—"இன்றுயான்முற்றும்சோர்வடைந்தேன். பிதா!"

சந்திரன்:—"தேகப் பிரயாசையால் எனது சரீரம் மிக்க மெலிவடைந் திருப்பினும், எனது பசியின் வலிமாத்திரம் அதிகரித்து விட்டது."

சுந்தரன்:—"எனதரிய சகோதரா! பழைய உணவிற் சிறிது மிஞ்சியிருக்கின்றது: புதிய ஆகாரம் தயாராவதற்குள் அதை நாமிருவரும் உண்போம்."

(முன்னுடி சென்ற நரசிம்ம வீரன் ஆச்சரியத்துடன் திரும்பிவந்து)

நரசிம்ம வீரன்:—"நில்லுங்கள் நில்லுங்கள். உள்ளே வர வேண்டாம். இது பூதமோ? அன்றிப் பேயோ? நமது ஆகாரத்தைப் புசித்துக் கொண்டிருக்கின்றதே."

சுந்தரன்:—"தந்தை! என்ன விசேஷம்?"

நரசிம்ம வீரன்—"ஆகாகா! கந்தருவனோ! இதோ பாருங்கள். ஓர் சிறுவனைப் போலத் தோன்றுகின்றது."

(சுந்தராங்கி இவர்களைக் கண்டு நடுங்கிய வண்ணம் எழுந்து வருதல்)

(இராகம்-மோகனம்)

சுந்தராங்கி:—

நற்குணமுடைய நண்பீர் நவை பெறுங்கள் வனல்லேன்
பொற்குவையென்னினுந் தீண்டேன் புகுமுனங் கூவியும்மை
யெற்கவே முயன்றேன் சால விளைத்தனேன் பசியால்வாடி
புற்கையின் விலையையேற்பீர் புரிந்ததைப் பொறுத்தல் செய்வீர்

நற்குண முள்ள ஐயன்மீர்! என்னைத் துன் புறுத்தாதீர்! யான் இவ்விரண்டு நாட்களாய் அன்னம் நீர் முதலிய

நவை = தூஷணம் எற்க = ஏற்க = யாசகமாய்க் கொள்ள. ஏற்பீர் = பெற்றுக் கொள்வீர் புற்கை = ஆகாரம்.

வின்றிச் சோர்ந்து வந்தேன். இக்குகையில் யாரேனும் இருப்பின் சில உணவை விலைக்காயினும் அன்றி இனாமாக வாயினும் பெற்று உண்ண நினைத்து வெளியில் நின்று கூவி அழைத்தேன். யாதொரு மறுமொழியும் பெறாமையால் உட்சென்றேன். யான் திருடனல்லேன். நீங்கள் பொன்னைக் குவியலாய் வைத்திருப்பினும்களவாடியிரேன். இதோ தரு கின்றேன் யான் எடுத்துக்கொண்ட உணவின் கிரயம். தயை புரிந்து இதை ஏற்றுக்கொள்ளுங்கள். யான் செல்லு முன், நீங்கள் யாரும் இங்கு வராதிருப்பின் இப்பணத்தை இங்கு வைத்துவிட்டு உங்களை மனதாறத் துதித்து வாழ்த் திக் கொண்டு சென்றிருப்பேன்.''

நரசிம்ம வீரன்:—'' கிரயமா ?''

சுந்தரன்:—பொன்னும் வெள்ளியும் எங்களுக் கெதற்கு ? அவற்றையே தெய்வமாகக் கொண்டாடும் உலோபிய ருக் கன்றோ அவற்றிற் பெரும் ஆசை.''

சுந்தராங்கி:—''ஐயோ! நீங்கள்என்மீது கோபிக்கிறதைப்போ லத் தோன்றுகின்றது. இக்குற்றத்தின் பொருட்டு என்னை நீவிர் கொன்று விட்டாலும் சம்மதமே. இக் குற்றத்தையான் செய்யாதிருப்பின் யான் இறந்திருப் பேன். நீங்கள் இங்கிருந்திருப்பீர்களாயின் நீங்கள் என்மீது இரக்கங் கொண்டிருப்பீ ரென்பது நிச்ச யமே.''

நரசிம்ம வீரன்;—'' நீ எங்கு செல்கின்றவன் ?''

சுந்தராங்கி:—'' துறைமுகப் பட்டினத்திற்குக் கலிங்கதேசத் திலிருந்து வரும்எனது நண்பனொருவனைக்காண வந்து வழிதப்பி இரண்டு நாட்களாய் ஆகாரம் நித்திரை முதலிய வின்றி இங்கு அலைகின்றேன். களைப்பாற்

சாகும் நிலைமையை யடைந்தேனாதலின் இக்குற்றத்தைப் புரிந்தேன், மன்னிப்பீர்.

நரசிம்மவீரன்:—"உனது பெயர் யாது ?"

சுந்தராங்கி:—"என் பெயர் கோவிந்தன்."

நரசிம்மவீரன்:—(அன்புடன்) "அப்பா ! கோவிந்தா ! எங்களைக்கேவலம் காட்டு மானிதரென மதித்தனைபோலும். நாங்கள் வசிக்குமிடத்தின் தன்மையிலிருந்தே எங்களுடைய குணத்தின் தன்மையை மதிக்காதே. நீ செய்ததில் எங்களுக்குச் சிறிதுங் கோபமில்லை. உன்னைக் கண்டதினால் மிக்க சந்தோஷமே. இப்பொழுது மாலை நேரமாய் விட்டது. இப்பொழுது நீ எங்கு செல்லப் போகின்றனை ? இன்றிரவு இங்கிருந்து இன்னம் அதிக விசேஷமான உணவருந்தி இனிது நித்திரைசெய்து நாளைக்குச் செல்லலாம்.—எனது செல்வர்காள்! இவனை அன்புடன் உபசரியுங்கள்."

சுந்தரன்:—

இராகம்-தேசிகதோடி.

நண்பனேகோவிந்தா நின்னளிர் முகங்காணவெந்தன்
கண்புரிதவந்தானென்றோ கனிந்தசெந்தன்மனதுமன்பால்
வண்ணமேயுருவாய்வந்தாய் மங்கையாயிருப்பையாயின்
திண்ணமாயானேயுன்னைத் திருமணமுடிப்பேனன்றோ.

நண்பா !, கோவிந்தா ! யான் பிறந்தமுதல் இதுவரையில் உன்னைப் போன்றவரைக் கண்டதேயில்லை ! உன்னை நோக்க எனக்குண்டாகும் ஆனந்தத்திற் களவே யில்லை. ஆகா ! என்ன உனது முகக்காந்தி ! நீ ஓர் பெண்ணாயிருந்திருப்பையேல், ஆகா ! உன்னை யானே நிச்சயமாய் மணப்

---

நளிர் = குளிர் வண்ணம் = அழகு.

பேன். நீ ஒன்றுக்கும் கவலைப்படாது எங்களுடன் மகிழ்வுடனிருந்து உனக்குத் தேவையான போது செல்வாய்.''

சந்திரன்:—

(இராகம்-ஆனந்தபைரவி)

உடன்பிறந்தொன்ருய்க் கூடியுரைந்திடுசோதரர்பின்
நெடியநாட்பிரிந்துபின்னர் நேர்ந்ததைப்போன்றுசங்கை
முடிவிலாமோகங்கொள்ள முன்னிடுமுன்னைவாரிக்

ஆகா! கோவிந்தா! ஏதோ நீண்டகாலம் ஒன்ருய்க் கூடியிருந்து பிரிந்த சகோதரா பிறகு சந்திப்பதையொப்ப, உன்னைக்காண என்மனதில் ஓர்வித வாஞ்சை சுரக்கின்றது. உன்னைக்கட்டித் தழுவ என்தேகம் ஆவல்கொண்டு பதைக்கின்றது. நீ எங்களைச சகோதரரெனப் பாவித்து, இவ்விடத்திலேயே இருக்கவேண்டும். உன்னை ஓர் கணமும் விடுத்துப் பிரிய என்மனம் சகிக்குமோ!''

சுந்தராங்கி:—(முகம்மாறி தனக்குள்) ''ஆகா! இவாகள் எவ்வளவு அழகுடையவராயும் முற்றும் இனியராயும் இருக்கின்றனர். சகோதரராம். ஐயோ! எனது சகோதரரிருவரு மிருப்பரேல் அவரும இவ்வாறே இருப்பர். ஆகா! அப்பொழுது எனக்கு இவ்வளவு விசன மிருக்குமோ!''

நரசிம்மவீரன்:—ஆகா! கோவிந்தன் ஏதோ சஞ்சலப்படுகின்றனன் போலத்தோன்றுகின்றது.''

சுந்தரன்:—''அடே! சகோதரா! என்னவிசேஷம்? ஏன் வருந்துகின்றனை?''

சந்திரன்:—உனதுவிசனத்தைத் தெரிவிப்பாய். அதனல் எனக்கு எத்தகைய துன்பமும் விபத்தும் சம்பவிப்பினும்

பாதகமில்லை. அதை ஓர் நொடியில் பரிகரிக்கின்றேன்."

சுந்தராங்கி:—எனதரிய நண்பர்காள்! விசேஷம் ஒன்று மிலது. உங்களைக்காண என்மனது பெரும் மகிழ்ச்சி யைக்கொண்டது. இத்தகைய சகோதரர் எனக்கிரு வரிருப்பின் இனி ஓர் குறையுமிலதென நினைத்தேன். உங்களைக்கண்ட பின் என் மனோபாதை முற்றும் இரு ந்தவிடந்தெரியாது மறைநதது."

நரசிம்மவீரன்:—"அப்படியா மெத்த நன்று. யாவரும் உள்ளே செல்வோம் வாருங்கள். காலை முதல் ஒன்றும் உண்ணுமையால் இப்பொழுது அதிகம் சம்பாஷணை புரிவது கடினமாய்த் தோன்றுகின்றது. நாம் சமைத்து உண்டபின், உனது வரலாறுகளை நன்குயறிவோம்."

சுந்தரன்:—"கோவிந்தா எனதருகில் வா!"

சந்திரன்:—"எனதரிய கோவிநதா! எனது கரத்தைக்கோர்த் துக்கொள்."

(நால்வரும் குகைக்குட் செல்லுதல்)

## 4-வது அங்கம்

### 1-வதுசீன்:—நரசிம்ம வீரனுடைய குகைக்கருகிலுள்ள ஆரண்யம்.

ஜெயபாலன் வருதல்

ஜேயபாலன்:—

(மன்னவனே இன்னந் தூக்கமா)

இன்னம் சிறிதேகி நோக்குவேன். இப்பேதையரை (இ)

(1) மன்னன் மகளைத் தொடர்ந்தேன்-வனமிதில் தேடித் திரிந் [தேன்
இன்னல் மிகக்கொண்டு சீறுதே எந்தன்மனம் (இ)

(2) என்னை விரும்பாதிருக்க என்ன இவள் பேதைமையே
துன்னியறி வூட்டுகின்றேன்யான்-அவனைக் கொன்று. (இ)

(3) மதிவதன னிவ்விடத்தில்-மங்கையிவளைச் சேருவா
னென்ன வுண்மை கூறினனன்றே புருஷோத்தமன் (இ)

இவ்விடத்திலே தான் சுந்தராங்கியும் மதிவதனனும் சந்திப்பார்களெனப் புருஷோத்தமன் தெரிவித்தனன். மதிவதனனுடைய உடை எனக்கு எவ்வளவு சரியாய்ப் பொருந்துகின்றது! அவனைக் காதலிக்கும் சுந்தராங்கி மாத்திரம் எனக்குப் பொருந்த ஏன் சம்மத மில்லாதிருக்கின்றனள்? ஆகா! பெண் புத்தி பேதைமையே! அவர்களது விருப்பத்திற்கும் வெறுப்பிற்கும் காரணமே யிராது. அவர்களுக் கிஷ்டமானல் ஓர் தரித்திரனையும் விரும்புவர். அரசனையும் வெறுப்பார். அவர்களுக்கு க்ஷணசசித்தம் க்ஷணப்பித்தம். மதிவதனனிலும்யான் எல்லா அம்சங்களிலும் மேம்பாடுடையனென் பதையறியாதாரிலர். இவளொருவனை யிதை யுணராத அறிவிலி. யான் அழகில் அவனுக்குத் தோற்றவனன்று. வித்தை, புத்தி, குணம் முதலியவற்றிலும் அப்படியே, தீரவீரச் செயல்களிலோ அவன் எனக்கு

நிகராகான். பிறப்பில்யான்அரசவம்சம். அவனோர்தரித்திரன். இருவராய்ச் சமப்போர் புரிவதிலோ யான் ஒப்பற்றவன். செல்வத்திலோ, யானே அரசனுகக் கூடியவன். செல்வாக் கிலோ என்னுடைய தங்கை அரசியா யிருக்கையில் எனக்கு யாது குறைவிருக்கின்றது. இவ்வளவெல்லா மிருக்க, இப் பேதை என்னை வெறுத்து இம்மதிவதனனைக் கணவனுய்க் கொள்ள விரும்பி ஒரே பிடிவாதமா யலைகின்றனள். இத்த கைய மணிதராது மடமையை என்ன சொல்வேன்! அடே மதிவதனு! உனது தோள்களின் மீது வளர்ந்து கொண்டி ருக்கும் உனது சிரத்தை இன்னமோர் நாழிகைக்குள் இல்லை யாக்குகின்றேன். பார். சுந்தராங்கியைப் பலவந்தமாய் அரண்மனைக்குத் திருப்பி இழுத்துச செல்லுகின்றேன். அவளுடைய உடையை அவளுக்கு முன்னர் துண்டு துண் டாய்க் கிழித்தெறிந்து அவமானப்படுத்துகின்றேன். இவ்வாறு சுந்தராங்கியை இகழ்ச்சியாய் நடாத்தியதற்கு அரசன் என்மீது சிறிது கோபங் கொள்ளலாம். அவனை எனது தங்கை ஓர் கணத்தில் திருபபித் தன் வசப்படுத்தி விடுவள். எனது குதிரையை இமமரத்தில் பத்திரமாய்க் கட்டி விடுகின்றேன். எனதரிய வாளே! உறையினின்று வெளியில்வருவாய்! உனக்கு நல்ல ஆகாரம் கிடைக்கப் போகின்றது. அதிர்ஷ்ட வசமாய் இவர்கள் என்னிடத்தில் அகப்பட்டுக் கொள்ளவேண்டும். இவ்விடம் தான் அது. புருஷோத்தமன் என்னிடத்திற் பொய் சொல்ல அவனுக்கு அவ்வளவு துணிவேது!"

(ஜெயபாலன் வனத்திற்குட் செல்லுதல்)

2 வது சீன்—நரசிம்ம வீரனுடைய குகையின் வாசல்.
நரசிம்ம வீரன், சுந்தரன் சந்திரன், கோவிந்தன்,
நால்வரும் வெளியில் வருதல்

நரசிம்மவீரன்:—கோவிந்தா! உனது தேகம் சிறிது அசௌக்கியமாயிருத்தலின் நீ இக்குகைக்குள்ளே இருப்பாய். நாங்கள் விரைவிற் சென்று வேட்டையாடி விட்டு வருகின்றோம்.''

சந்திரன்:—(அன்புடன்) பிரியசகோதரா! கோவிந்தா! நீ இங்கே பத்திரமாய் இரு. நாங்கள் வெகு சீக்கிரத்தில் ஓடிவந்து விடுகின்றோம். நாம சகோதரன்றோ!''

சுந்தராங்கி:—'' ஆமாம! அவ்வாறே ஒரு மனிதன் மற்றொரு மனிதனைப் பாவித்தல்வேண்டும். களிமண்ணின் அணுக்கள் யாவும் ஓர் மாதிரியே யிருப்பினும ஒவ்வொருவித மண்ணிற்கும் ஒவ்வோர்விதகௌரதையுண்டல்லவோ? இன்றைக்கு எனது உடம்பு மிக்க அசௌக்கியமாயிருக்கின்றது, நண்பீர்!''

சுந்தரன்:—''யான் கோவிந்தனுடனிருக்கின்றேன். நீங்களிருவரும் சென்று வேட்டையாடி வாருங்கள் பிதா!''

கோவிந்தன்.—''அவ்வளவு அதிகமாகஅசௌக்கியமாயில்லை. வெளியிற்செல்லமுடியா திருப்பதன்றி வேறு விசேஷமில்லை. நீ இங்கே எனக்காக இருந்து உபசரணை புரிய வேண்டுமென்பதில்லை. தினந்தினம் நடக்கும் வழக்கத்திற்கு விரோதம் வேண்டாம். நீங்கள் மூவருமே வேட்டைக்குச்சென்று வாருங்கள். மனோவேதனைக்கு மருந்தேது. அவ்வியாதிக்கு மனிதர் கூட இருத்தலினும் இல்லாதிருத்தலே சிறிது சாந்தி செய்யும். யான் இங்கு எனது மனதின் நன்னிலைமையையன்றி வேறொ

ன்றையுந் திருடி விடுவேனோவெனக் கவலைப்படவேண்டாம். நீங்கள் செல்லுங்கள்."

சுந்தரன்:—"ஆகா! கோவிந்தா! உன் விஷயத்தில் என்னை அறியாமலே பெரும் வாஞ்சையும் அன்பும் தோன்றுகின்றன. யான் எனது தந்தையை எவ்வாறு காதலிக்கின்றேனோ அவ்வாறே உன்னையும் விரும்புகின்றேன்."

நரசிம்மவீரன்:—"என்ன? எப்படி? எப்படி?"

சந்திரன்:—"தந்தையே! இவ்வாறு சொல்வதற்காக நீர் என் மீது கோபங் கொள்ளினும் சரியே. நானும் சுந்தரன் தெரிவித்தவாறு நினைக்கின்றேன். இவன்மீது யானும் பெரும்வேட்கையைக் கொள்கின்றேன். காரணமின்னதெனப் புலப்படவில்லை. காதலுக்குக் காரணமேயில்லையென நீரே பலதடைவைகளில் புகன்றிருக்கின்றீரன்றோ. வாசலில் எமன் வந்து நின்றுகொண்டு யாருடைய உயிரைக் கொண்டுபோவதெனக் கேட்பனேல், கோவிந்தனை விடுத்து எனது தந்தையின் ஆவியையே கொண்டு போமாறு வேண்டுவேன்."

நரசிம்மவீரன்.—"ஆகா! என்ன உங்களது மேன்மைக்குணம்?" (தனக்குள்) இயற்கைப்பெருமையேபெருமை! உயர்குடி பிறப்பின்குணம் மாறுமோ கோழைகளுக்குக் கோழைகளே பிறக்கின்றனர். கேவலம் தாழ்ந்தோருக்கு அற்பகுணமுடையோருதிக்கின்றனர். இவ்வுலகத்தில் சிறப்புமிருக்கின்றது. தாழ்வுமிருக்கின்றது. யான் உண்மையில் இவர்களுடைய தந்தையில்லையல்லவா? எனினும், இவனை இவர் இவ்வாறு விரும்பக்காரணமென்னமோ தெரியவில்லை—பாலகர்காள்! வேட்டைக்குச் செல்ல நாழிகையாய் விட்டது. போவோம் வாருங்கள்."

சுந்தரன் சந்திரன்:—(அன்பாய்) "கோவிந்தா ! போய்விட்டு விரைவில் வந்துவிடுகின்றோம். பத்திரமாய் இரு."

கோவிந்தன்:—"அப்படியே யாகட்டும். செல்லுங்கள். (தனக்குள்.) ஆகா ! இவர்கள் எவ்வளவு வாஞ்சையைப் புலப்படுத்துகின்றனர். நமது அரண்மனையிலுள்ளோர் எவ்வளவு புரட்டராயும் புளுகராயுமிருக்கின்றனர். பெரிய தேசங்களிலுள்ளவரே நாகரீகமுள்ளவரென்றும் காடுகளிலும் வனங்களிலும் வசிப்பவர் நாகரீக மற்ற முரடரென்றும் அவர் தெரிவித்தனரே ! இச்சிறுவர் அம்மொழியைப் பொய்யாக்கி விட்டனர். ஆகா ! என்ன இவர்களுடைய அன்பு !—ஐயோ என் மனோ வேதனையால் தேகம் முற்றும் அசௌக்கியமாயிருக்கின்றது. இவர்கள் சென்றவுடன் புருஷோத்தமனாற் கொடுக்கப் பெற்ற அமிர்த சஞ்சீவியிற் சிறிது உட்கொள்ளுகின்றேன்."

நரசிம்மவீரன் :—(அன்பாய்) "அப்பா கோவிந்தா ! நாங்கள் போய் வருகின்றோம். உள்ளே சென்று சிறிது சயனித்துக்கொள்."

சந்திரன் :—"நாங்கள் அதிக நேரம் வெளியில் இராமல் துரிதத்தில் வந்துவிடுகின்றோம்."

நரசிம்மவீரன் :—"கோவிந்தா ! இன்றைக்கு நீயே சமையல் செய்யும் மனையாட்டியாக வேண்டுமாதலால் உள்ளே சென்று சிரமபரிகாரஞ்செய்துகொள்."

கோவிந்தன் ;—"சௌக்கியமோ அசௌக்கியமோ உங்களுக்கு உபசரணை புரிய யான் கடமைபட்டிருக்கின்றேன்."

(கோவிந்தன் குகைக்குள் சென்று விடுதல். மற்றையோர் வனத்திற்குள் நுழைதல்.)

நரசிம்மவீரன் ;—" குழந்தைகாள்! இவன் எவ்வளவு தாழ்ந்த நிலைமைக்குரியவனுய்த் தன்னைத் தோற்றுவிப்பினும், இவனது குணத்தினுலும், கண்ணிய புத்தியினுலும் இவன் உயர் குலத்திலுதித்தவனுய்க் காணப்படுகின்றனன்."

சந்திரன் ;—" ஆகா ! இவன் பாடுவது எவ்வளவு மாதுரியமாயிருக்கின்றது. குயிலும் இவனுடைய குரலிற்கு வெட்கும்."

நரசிம்மவீரன் ;—" அடிக்கடி இவன் தன்னை மறந்து ஏதோ சிந்தனையிலாழ்கின்றனன், உடனே நெடுமூச்சுவிடுகின்றனன். நாம் அவனைக் கவனிப்பதாய் அறிந்தால், உடனே அதை ஓர் அழகிய புன்சிரிப்பால் மாற்றுகின்றனன். அவன் புன்சிரிப்பு எவ்வளவு இரமணீயமாய்த் தோன்றி மனதைக் கவருகின்றது."

சுந்தரன் ;—ஆம்! பிதா ! அதை யானும் பல தடவைகளிற் கவனித்தேன். துக்கமும் பொறுமையும் வேரூன்றி இவனை வருத்துகின்றன."

(ஜெயபாலன் வருதல்)

சந்திரன் ;—" ஆகா ! அதோ ஒருவன் நிற்கின்றனனே அவன் யாவன் ?"

ஜெயபாலன் ;—(தனக்குள்) " இந்த நாடோடிகளை இன்னமும் கண்டேனில்லையே ! அந்த வஞ்சகன் புருஷோத்தமன் மோசம் புரிந்தனனே! ஆகா! மிக்கக்களைப்படைந்தேன்."

நரசிம்மவீரன் ;—" ஆகா ! பாலகர்காள் ! நாடோடிகளாம், இவன் நம்மையன்றே இவ்வாறு குறிக்கின்றனன். இவன் யாவனென யான் அறிவேன். இவன் பிரதாப

சிம்மவரசனது மைத்துனன் ஜெயபாலனன்றோ. இவ னைப் பல வருஷங்களுக்கு முன்னர்யான் பார்த்திருக் கின்றேனாயினும் இவன்தான் ஜெயபாலனென்பது துணி கிலேன். நம்மை நகரைவிட்டுத் துரத்திவிட்ட அரசன் இப்பொழுது இன்னம் யாதாயினும் துன்புறுத்த நினை த்து இவனை அனுப்பினனோ. நம்மைப் பிடித்தற்கு யாராயினும் இன்னும் பலர் இவனுடன்வந்து நாற்புறத் திலும் ஒளிந்துகொண்டிருந்தாலு மிருப்பார்."

சுந்தரன் ;—" இவன் ஒருவனே இருப்பதால, யான் இங்கி ருக்கின்றேன். நீங்களிருவரும் சென்று நாற்புறத்தி லும் சுற்றிப்பார்த்து யாராயினும் மறைவிலிருக்கின் றனரோ வென அறிந்து வாருங்கள். இவனை யான் ஒருவனே பார்த்துக் கொள்ளுகின்றேன்."

(நரசிம்ம வீரனும் சந்திரனும் சென்று விடுதல்.)

ஜேயபாலன் :—

(இராகம் - கல்யாணி)

என்ன நீ ரோடுகின்றீரெநதனைக் காணவஞ்சி
மன்னு மிம்மலையில் வாழும் வனசரராகும். நீவிர்
மன்னுல கதனிலுள்ள மாந்தரிற் கடையரென்ன
மன்னவன் வகுத்தான் முன்னர் வழியினில் நிற்போன் யாவன்.

ஆகா! நீங்கள் ஏன் ஓடுகின்றீர்? என்னைக் கண்டு பய ந்து அவ்வாறு செய்கின்றீர் போலும். இம்மலையில் வாழும் வனசரரோ? அடே! மடையா! இங்கு நிற்பவன் யாரடா நீ! அடே கயவா!

---

வகுத்தான் = சொன்னான்.

சுந்தரன்:—

(இராகம்—மோகனம்.)

இதுவரை நின்னைப்போன்ற விழிந்தவ னெவனுமிந்த
வதிர்பலவேலை சூழுமவனியிற் சனித்ததுண்டோ
வுதித்தலுமில்லை மேலு முதிப்பினும் பதிக்குத்தீதே
பதருனைப் பெறுதலிந்தப்படி தனககலாத்தாழ்வே.

அடே! யான் உன்னைபபோன்ற தாழ்நதவனை இது வரையிற் கண்டு உரையாடியதே யில்லை. இனிகாணப் போவது மில்லை".

ஜெயபாலன்.—

(இராகம் - கானடா)

கள்வனே சட்டமென்னுங கட்டினில் நில்லாத்தூர்த்தா
யெள்கினை யென்னைச்சாலப் பேதையே பலவைமாய்த்துக்
கொள்ளை கொள்கிராத மூர்க்கா வொல்லையி லெந்தன் பாதங்
கொள்வை யேற்சிர மேற்றாழ்ந்துன்னுறைபதி மீள்வதுண்டு.

அடே! வழியிற் செல்வோரை வதைத்துக் கொள்ளை கொள்ளும் கிராதகனே! என்னை இவ்வாறு அவமதிப்பாய்ப் பேசுகின்றனையா? அகா! என்னை யாவனென அறிந்தாயில்லை போலும். நீ உடனே என் காலில் வீழ்ந்து தலை வணங்குவையாயிற் பிழைத்து உனது இருப்பிடத்திற்குச் செல்வதுண்டு. இல்லையேற் பிழைப்பதில்லை."

---

இழிந்தவன் = தாழ்ந்தவன். அதிர் = சப்திக்கும். வேலை = சமுத்திரம். பதி = ஊர். படி = பூமி.

யெள்கினை = எளனம் செய்தனை. ஒல்லையில் = விரைவில். உறைபதி = இருப்பிடம்.

சுந்தரன் :—

(முகத்தைக் காட்டி திரேகம)

(இராகம் பைரவி - தாளம் ரூபகம்)

பல்லவி.

பேதையர் தலைவனே யேதேதோ பிதற்றினாய்
பித்தம் பிடித்த தன்மையே (பே)

அனுபல்லவி.

எதுக்கடா நின்னை-இறைஞ்சியான் பணிவது
சேதனமில்லா வீண்-சிரத்தினைக் கொண்டனை (பே)

சரணம்.

யானுமுன்னைப் போலிரு-கரங்களைக் கொண்டுளேன்
யானுமுன்னைப் போலொரு-வலியமனதைப் பெற்றேன்
ஈனன் நீ என்னினும்-சிறந்த மொழியைக் கொண்டாய்
தீனா நினதுபடை-வாயன்றிப் பிறிதன்று. (பே)

அடே மடையா! யான் உன்னைப் பணிய வேண்டுமா? எதற்காகப் பணிவதடா? யானும் உன்னைப் போல இரண்டு கரங்களையும் திடமனதையும் உடையோனா யிருக்கின்றேன். எனினும் உனது வார்த்தைகள் மாத்திரம் மிக்கப் பெரியவை யாயிருக்கின்ற தன்மையே. உனக்கு வாயே ஆயுத மன்றி வேறு ஆயுதமில்லை போலும். உன்னையோர் உன்மத்தனது மகனென உறுதியா யறிந்தேன்."

ஜெயபாலன்:—"அடே! ஏதேது மிக்கமிஞ்சிய மொழிகளைக் கூறுகின்றனை? எனது பெயரைத் தெரிவிப்பேனாயின் நீ உடனே நடுக்கங் கொண்டு எனது கால்களில் விழுவாய்".

சுந்தரன்:—"யாவரையும் நடுக்குவிக்கக் கூடிய அத்தகைய பயங்கரமான பெயர் யாதடா?"

ஜெயபாலன்;—"ஜெயபாலனடா, மூர்க்கா!"

சுந்தரன் ;—“ ஜெயபாலன் மூர்க்கனு? ஆகா! உண்மையே. அப்பெயர் என்னை நடுக்குவிக்கவில்லையே. அது ஓர் கொடிய தலைநோய் ஜுரம், பேய், பிசாசு அல்லது கரடி, புலி சிங்கம், பாம்பு, தேள், முதலியவற்றில் யாதா மொன்றாயிருப்பின் ஒருக்கால் சிறிது அஞ்சி யிருப்பேன்.”

ஜெயபாலன் ;—“ யான் யாருக்கு மூத்தோன் என்பதை அறி வையேல் நீ இன்னம அதிகமாய்ப் பயந்து திகிலடை வாய்.”

சுந்தரன் ;—“ தம்பிக்கு மூத்தவனே ?”

ஜெயபாலன் ;—“ மகாராணி சரசாங்கிக்கு மூத்தவனடா மூடா !

சுந்தரன்;—“ ஆகா! அதுசுத்தபொய்! அத்தகைய மேன்மை யை வகிக்கக்கூடிய யோக்கியதை உன்னிடத்திற சிறி தும் இல்லையே!”

ஜெயபாலன் ;—(அதட்டி) “ அடே! என்ன உனக்கு என் னிடத்தில் கொஞசங்கூட அசசமில்லைப போலிருக் கின்றது ?”

சுந்தரன்:—“என்னினும் மேம்பட்டவரிடத்தும் நற்குண நல் லுணர்வு முதலியவற்றையுடையோரிடத்தும் எனக்கு அசசமேயன்றி மடையர்களைக் கண்டால எனக்குச் சிரிப்பேயுண்டாகின்றது.”

ஜெயபாலன்;—(கோபததுடன்) “ஆகா, அப்படியா! இதோ இவ்வாளால் உன்னை வெட்டுகின்றேன் பார. உன்னைக் கொன்றபின், இப்பொழுது ஓடிமறைந்த இருவரையுந் தொடர்ந்து சென்றுகொன்று, உங்கள் மூவருடைய சிரங்

களையும் இந்நகரத்தின் கழுமரத்திற் கட்டித்தொங்க விடுகின்றேன்.”

(இருவரும் சண்டைசெய்தல்—வேறோர்புறத்தில் நரசிம்ம வீரனும் சந்திரனும் செல்லுதல்.)

நரசிம்மவீரன்;—“வேறு எவரையும் இங்கு காணோமே.”

சந்திரன்—“அவன் ஜெயபாலனல்லவெனத்தோன்றுகின்றது. நீவிர் அவனை ஜெயபாலனெனத் தவறாய் நினைத்தீரென்பது நிச்சயம்.”

நரசிம்மவீரன் ;—அவனை யான் கண்டு பல வருஷங்களாகின்றன. எனினும் அவனுடைய தோற்றத்தில் யாதொரு மாறுபாட்டையுங் கண்டேனில்லை. வந்தவன் அவனேயென்பதிற் சந்தேகமேயில்லை.”

சந்திரன்;—“நமது சுந்தரனைத் தனியாய்விடுத்துவந்தோமே. விரைவில் அவனிடத்திற்குப் போவோம். ஜெயபாலன் மிக்கக்கொடிய பாதகனெனத் தெரிவிக்கின்றீரே. சுந்தரன் இவனை எளிதில் விடானென நினைக்கின்றேன்.”

நரசிம்மவீரன் ;—“அதோ சுந்தரன் வருகின்றனன்.”

(சுந்தரன் ஜெயபாலனது சிரத்தை வெட்டிக்கையிலேந்திக்கொண்டுவருதல்).

சுந்தரன்;—“பிதா! இந்த ஜெயபாலனைப் போன்ற மடையனை யான் இதுவரையிற் கண்டதேயில்லை. ஒன்று மற்றபாண்டத்திற் கோசையதிக மென்பதை இவன் உண்மையாக்கினன். இவனுடைய சிரத்தின் மூளையை இந்திரனதுவச்சிராயுதத்தாலும் சிதைத்தல் முடியாது. ஏனெனில், இவனிடத்தில் மூளையே கிடையாது. ஆகா! யான் இவனைஇவ்வாறு செய்யாதிருப்பேனாயின், எனது தலையை இவன் இவ்வாறு துணித்திருப்பன்.”

நரசிம்ம வீரன் :—(பதைபதைத்து) "ஆகா சுந்தரா! என்ன காரியம் செய்தனை!".

சுந்தரன்:—"ஜெயபாலனுடைய சிரசை வெட்டினேன். அவன் தன்னை அரசியின் தமையனெனப் புகன்று கொண்டனன். அவன் நம்மைக் கள்வரென்றும், கொலைஞரென்றும், கிராத ரென்றும், இழிந்தோ ரென்றும் இகழ்ந்ததோடு நமது சிரங்களை அறுத்துக் கழுமரத்தில் தொங்க விடுவதாய்ச் சபதங் கூறினன்."

நரசிம்மவீரன் :—(பயந்து) "ஐயோ! நமக்குப் பெரும் விபத்து வந்து விட்டதே."

சுந்தரன்:—"சிறந்த தந்தையே! நாம் எதற்காக அஞ்ச வேண்டும்? அவன் நம்மைக் கொல்வதாய்ச சபதங் கூறினனே. நமது உயிரை விட நாம் இழக்கக் கூடிய பொருள் என்ன இருக்கின்றது பிதா? தேசத்தின் சட்டங்கள் நம்மைக் கட்டுப படுத்துவது மில்லை. நம்மைக் காப்பதுமில்லை. நாம் பிறரை நினைத்தவாறு நடத்தலாம். நம்மையும் பிறர்தமது வல்லமையின்வாறு உபத்திரவிக்கலாம். அப்படி யிருகக, இந்தத் தூர்த்தன் வாயில வந்தவாறு நம்மைப் பயமுறுத்துவதை எதற்காக நாம் பொருக்கவேண்டும்? அவனிடத்தில் நமக்கென்ன அச்ச மிருக்கின்றது ?—நீங்கள் சென்று பார்த்தீர்களே இன்னம் யாரையாயினும் சமீபத்திற் கண்டீர்களோ ?"

நரசிம்ம வீரன்:—"ஒருவரையுங் காணேம். எனினும், பல சேவகராயினும் இவனுடன் கூடவந்திருப்ப ரென்பது உறுதியே. இவன் சலன மனதுடையவனே யாயினும் இவன் தனியாய் இவ்வளவு தூரம் வருப

வனல்லன். அரண்மனையிலுள்ளவரும் இவ்வாறு இவனை தனிமையில் விடார். இசேவகர் இங்கு வந்து இவனது முடிவை அறிந்து சென்று அரசனிடத்தில் நிகழ்ந்தவறறைத் தெரிவித்தல நிசசயம. இக்குகையில் வசிப்போரான நாமே இவ்வாறு புரிந்தோ மென்று உடனே எளிதில் அறிவர். இதனுல் நமக்கும் பெரும் பொல்லாங்கே சம்பவிக்கப போகின்றது. இவனுடைய சிரத்தைவிட இவனுடைவிருந்து இனி முளைக்கப்போகும வாலே நமக்குப் பெருந்துன்பத்தை யுண்டாக்குமெனத் தோன்றுகின்றது.''

சந்திரன்—''வருவது வந்தே தீரும். நமது தலையிற் கடவுள் எவ்வாறு எழுதியிருக்கின்றனரோ அவ்வாறு நடப்பதை நாம் தடுத்தல் கூடுமோ? இதைப் பற்றி வருந்துவானேன் பிதா! நமது சுந்தரன் சரியான காரியமே செய்தனன்.''

நரசிம்ம வீரன்:—''கோவிந்தனுடைய திரேக அசௌக்கியத்தைக் காண, இன்று வேட்டையாட வெளியிற் செல்வதற்கு எனக்கு மனமே யில்லாதிருந்தது.—''

சுந்தரன்—''இவன் தனது கத்தியை ஓங்கிக் கொண்டு என் கழுத்தை வெட்ட வந்தபோது, அவன் வாளையே பிடுங்கி அதனாலேயே அவனது சிரத்தைக் கொய்தேன். இச்சிரத்தை இப்பாறைக் கருகில் ஓடும் ஆற்றில் எறிந்து விடுகின்றேன். அசசிரம் கடலிற்குச சென்று தான் அரசியின் அண்ணன ஜெயபாலனென அங்குள்ள மச்சங்களிடத்தில் தெரிவித்துக் கொள்ளட்டும்.''

(சுந்தரன் ஆற்றை நோக்கிச் செல்லுதல்.)

நரசிம்மவீரன் :—'' நமது சுந்தரன் இவ்வாறு புரிந்தது வீரச்

செயலேயாயினும், இப்படி நடக்காமலிருப்பின் என் மனதிற்குச் சந்துஷ்டியாயிருக்கும். அரசன் இதற்குப் பழிக்குப்பழிவாங்குவது நிச்சயம்."

சந்திரன்;—"ஐயோ! இதையான் செய்யாது போனேனே யென விசனிக்கின்றேன். யான் ஜெயபாலனைக்கொன் றிருப்பின்,இப்பழி என்னை மாத்திரந்தொடருமன்றோ? ஆகா! சுந்தரா! உன்னைச் சகோதர வாஞ்சை யுடன் யான் விரும்பினும் இப்பெருமையை எனக்கீ யாது நீயே அடைந்த விஷயத்தைப்பற்றி உன்மீது பெரும் பொறாமை கொள்கின்றேன். அரசன் யாது துன்பஞ்செய்யினும செய்யட்டும். நமது; பராக்கிரமத் தையுங் காட்டுவோம்.

நரசிம்மவீரன்:—" சரி, நடந்து விட்டது. இன்று நாம் வேட்டையாடியது போதும். இனியும் பயனில்லாத காரியத்தில் தலையிட்டு விபத்தை விலைக்கு வாங்காது குகைக்குத் திரும்பிச்செல்வோம். சந்திரா! நீ முன் னுடிசென்று, கோவிந்தனைச சேர்த்துக்கொண்டு, இரு வருமாய்ச சமையல் செய்யுங்கள். சுந்தரன் விரைவில் வந்து விடுவான். அவனை அழைத்துக்கொண்டு யான் வருகின்றேன்.

சந்திரன்:—" அவ்வாறே செல்கின்றேன். கோவிந்தனிட த்திலேயே என் மனம் முற்றுமிருக்கின்றது."

(சந்திரன் சென்று விடுதல்).

நரசிம்மவீரன்:—(தனக்குள்)

(இராகம்—தோடி.)

எத்தகையியற்கை மேன்மை பிறங்கின யிவர்கள் மாட்டே
இத்தலமகிபன் மைந்தரென்பது மெளிதுகாணல்
கொத்தினி லிலங்கு பூவின் கொங்கிதழ சையாவண்ணந்
தத்திடு மினியதென்றற் றன்மையார் சாந்தமாயின்.

ஆகா! உயர்குலத்திலுதித்தோரென்பது எவ்வளவு நன்ருய் இவர்களிடத்தில் விளங்குகின்றது.

ஆகா! இயற்கை மேன்மையின் சிறப்பே சிறப்பு. இவர்கள் சாந்தமாயிருப்பின் எவ்வாறிருக்கின்றனர்? ஓர் மெல்லிய புட்பத்தின் சிறிய இதழையும் அசைக்காது தவழ்ந்துலாவும் மந்தமாருதத்தைப்போல அத்தகைய இனிமையுடையோராயும் சாந்த குணமுடையோராயு மிருக்கின்றனர். ஆனல்.

(இராகம்—கானடா.)

சத்துவந் தோற்றுவிக்குந் தருண மெதெழுமேல் நீண்ட
வத்திரக்குவட்டைப் பேர்க்குஞ் சண்டமாருதமேபோல்வா
ரித்தல மடைந்த பின்னரெவரையுங் காணுரேனு
மித்தகையினிய நீர்மை யெவ்வித மறிந்தாரந்தோ.

இவருக்கு யாவரேனும் கோபமூட்டுவரேல் அப்பொழுது இராஜவம்சத்திற்குரிய பராக்கிரமம் இவர்களிடத்தில் எவ்வளவு நன்ருய்ப் பிரகாசிக்கின்றது! அப்பொழுது ஆகாயத்தையளாவியதோ பெருத்த பருவதத்தின் சிகரத்தையும் பெயர்த்துப் பாதாளத்தில் வீழ்த்தும் வலியுடன் மோதும் சண்டமாருதத்தைப் போலாகின்றனர். ஆகா! இது பெருமவிநோதயாயிருக்கின்றது! இவர்கள் சிறுவயது முதல் அரசியல் இவவாறுளதென அறியாரேனும அரசனது குணங்கள் தாமாய் இவர்களிடத்தில ஜொலிக்கின்றன. கௌரதை, மரியாதை, மானம், தீரம், முதலியவை எவராலும் கற்பிக்கப்படாமல், இவர்களிடத்தில் தழைத்தோங்குகின்றன.— ஜெயபாலன் எதற்காக இங்குவந்தனனெனப் புலப்படவில்லையே! இது எதற்கு முன்னறி குறியோ தெரிந்திலதே. இவன்

அத்திரம்=மலை. குவடு=சிகரம்.

இறந்ததினால் எத்தகைய பொல்லாங்கு வநதுசம்பவிக்குமோ அறிந்தேனில்லை."

(சுந்தரன் வருதல்.)

சுந்தரன்:—"பிதா! சநதிரனெங்கே சென்றனன்? ஜெயபாலனது சிரத்தை ஆற்றின் மூலமாய்க் கடலிற்கு யாத்திரை யனுப்பிவிட்டேன்."

(அருகில் அழுகைக்குரல உண்டாதல்)

நரசிம்மவீரன்:—"ஐயோ! எங்கே அழுகைக்குரல் உண்டாகின்றது? நமது குகைக்கருகிலிருநதல்லவோ கேட்கின்றது."

சுந்தரன்:—"சந்திரன் குகையிலிருக்கின்றானோ?"

நரசிம்மவீரன்:—"ஆம்! இப்பொழுதே இவ்விடமிருநது சென்றனன். என்ன விபரீதமோ தெரிநதிலதே. நாம் விரைவில குகைக்குட் செலவோம்."

(குகைக்குட் செல்லுதல.)

(கோவிநதன் இறந்து கிடத்தல் சந்திரன் அருகிலிருந்த வாறு விசனித்தழுதல.)

(இராகம் - முகாரி)

சந்திரன்:—

இறந்தயோ யினிய நண்பா வெங்களைத் துயரிலாழ்த்தித்
துறந்தயோ புவியை முற்றுஞ் சோதரனெனவே கொண்டே
னுறங்கினை விழியாவாறே யுந்தனைப் போல மிக்கச்
சிறப்பினைக் கொண்டோரிந்தச் செகமதிற் கண்டேனில்லை.

ஐயோ! கோவிந்தா! இனிய நண்பா! அடே! நீ மாண்டனையோ! ஐயோ! எழுநதிருக்காவாறு ஒரே தூக்கங் கொண்டனையோ! யான் இதுவரையில் உன்னைப போன்ற உத்தமனைக் கண்டதே யில்லை. ஐயோ! எங்களைத்துக்கக்

கடலிலாழ்த்தி நீ இவ்வுலகத்தைத் துறைந்தது என்ன ஆச்சரியம் !''

நரசிம்மவீரன்:—(திகைத்து) ''ஆகா! சந்திரா! இதென்னவிபரீதம்? கோவிந்தனுக்கு யாது துன்பம் சம்பவித்தது?''

சுந்தரன்:—'' சந்திரா! இவன் ஏன் இவ்வாறு மூர்ச்சித்துக் கிடக்கின்றனன்? ஐயோ! இவன் தனது தேகம் சிறிதே அசௌக்கியமாய் யிருப்பதாய்த் தெரிவித்தானே ?

சந்திரன்:—

(இராகம் - நாதநாமக்கிரியை)

தந்தையே யரியவெந்தன் சுந்தரவன்பா கேளீர்
விந்தையை யென்ன சொல்வேன் வேகுதே யெந்தனுள்ள
மந்தமே யுருவாய் வந்தோன் மாண்டன னேதுவின்றிச்
சொந்தமாய் நினைத்த வெம்மைத்துயரினில் விடுத்தான் பாவி.

ஐயோ! பிதா! அடே பிரிய சகோதரா, சுந்தரா! அவன் மூர்ச்சை யடைந்திருக்க வில்லை. இறந்து விட்டதாய்க் காணப்படுகின்றனன். ஐயோ ! நாமென்ன செய்யப் போகின்றோம ! நீங்கள் நன்றாய் உற்றுப்பாருங்கள்.''

நரசிம்மவீரன்:—(கோவிந்தனைத் தீண்டிப் பார்த்து விசனத்துடன்.)

(இராகம் - முகாரி)

ஐயயோ கோவிந்தா நீயதிகமாய் வருந்து மெம்மை
நையவே விடுத்தாய் மீளா நகரினை யடைந்தாயப்பா
வுய்யுமாறுளதோ யாமுமுயிரினைச் சுமப்பதெங்கோ
வையமே பொய்யே தேகம் மறைந்ததே நீரெழுத்தாய்.

அடே கோவிந்தா! நீ எதற்காக இங்கு வந்தாயடா? ஏற்கனவேபலதுயரங்களால் மனம்வருந்திக் கிடக்குமெம்மை மேலும் அதிகத்துக்கத்தி லாழ்த்தி விட்டுச் செல்வதற்காக

இங்கு வந்து உனது இனியவதனத்தைக் காட்டிவிட்டு இறந்தனையோ! ஆகா! என்ன உலகம்! இந்நிமிஷத்தில் இருப்பவர் அடுத்த க்ஷணத்தில் இருப்பாரென்பதற் கேது வந்திருக்கின்றதே. ஆகாகா! என்ன உனது நற்குணம்! இவனது மழலைமொழி எத்தகைய கர்ணாமிருதம்! இவனுடைய எழிலே எழில்! நீ உயிருடனிருக்கக், கிழவனாகிய யான் இறக்கக் கூடாதா?

சுந்தரன்:—

(இராகம்—எதுகுலகாம்போதி)

போனையோ யினிய நண்பா புவியதின்பற்றை நீக்கித்
தானமாம் நகரைவிட்டுத் தனிமையிலலைந்து வாடிக்
கானகமதிலே யுந்தனுவியை விடவே வந்தாய்
தேனென மொழியதெங்கோ மோனமாய்க் கிடத்தலென்னே!

அடே! கோவிந்தா! ஐயோ எங்கடா சென்றுவிட்டனை! உனது சொந்த நகரை விடுத்துக் கானகங்களிலலைந்து பல துன்பங்களையும அனுபவித்து முடிவில் உயிரைவிடுக்குமாறு இங்கு வந்தனையோ? நீ எங்கள் கண்களிற்படுவதற்கு முன்னரே இறந்து போயிருக்கக்கூடாதா? அடே! உனது மதுரமான மொழிகள எங்கடா ஒடுங்கிவிட்டன? ஏ! கண்மணி, இனி நாங்கள் என்னசெய்யப்போகின்றோமடா?"

பசிமமவீரன்:—

(இராகம்—காம்போதி)

குழவிகாளடி வயிற்றிற் கொள்ளியை வைத்தே சென்று
னழுவதிற் பயனேயின்று மடாிருள் சூழாமுன்ன
ரழகனதுடலைத் தாங்கியகன்று நாமப்பாற் சென்றே
யெழிலுடை யிவனையோர்பா லிருத்தியே மறைப்போம்
[வம்மின்.

---

*மோனம்=மௌனம்.

ஆகா! எனதரிய பாலர்காள்! இச்சுந்தரன் நமதடிவயிற்றில் தீயை மூட்டிவிட்டுச் சென்றுவிட்டனன். இனி இவனை நாம் ஒருபோதும் காண்பதேயில்லை. நாம் ஓயாது அழுவதினால் யாதொரு பயனுமில்லை. இருள் அதிகரிக்கு முன்னர் இவனை இக்குகையை விட்டு, வெளியில் தூங்கிச்சென்று, மலைக்கருகிலுள்ள மேதார்பள்ளத்தில் அடக்கஞ்செய்வோம் வாருங்கள்."

சுந்தரன் சந்திரன் :—(விசனத்துடன்) "அப்படியே செய்வோம் பிதா."

(மூவரும் பிணத்தைத் தூக்கிக்கொண்டு குகைக்கு வெளியில் வருதல்)

மூவரும்.

(அரிச்சந்திர நாடகம்—போரோனிதோ
கேதாரம்—ரூபகம்)

போரோமிதோ—போரோமிதோ—போரோமிதோ
போரோமிதோ—போரோமிதோ—வெளியில்

(1) ஆராத்துயர்—வைத்தாயடா
அப்பாவுன்னைக் காண்பதெப்போ.

(2) சிறியோனுன்னைச் செகுத்தானெமன்
முறையோயிது முழுமோசமே.

(3) பெற்றோரெங்கோ பெயரும் யாதோ
பற்றுடைய பதியும்யாதோ

(4) இவ்வாறெம்மை—யிடரில் விட்டே
யெவ்விடமோ—சென்றாயடா.

நரசிம்;—"பாலகர்காள்! இதோ எதிரிற்காணப்படும் பள்ளத்தில் இச்சவத்தைக்கிடத்தி அதன் மீது காட்டுப்புஷ்

பங்களைக் கொண்ட செடிகொடிகளைப்போட்டு மறைத்து விடுவோம்.''

சுந்தரன் சந்திரன்;—'' மெத்த நன்று.''

(சவத்தை அபபள்ளத்தில் மிக்க விசனத்துடன் கிடத்தி அதன் மேல புஷ்பகொத்துகளைப போட்டு மூடுதல்).

சுந்திரன் சந்திரன்:—

(அரிச்சந்திர நாடகம் — காசிநாதாயிது வுன்னருளோ.)

(ஸ்ரீராகம்-ஆதிதாளம்.)

(1) ஐயோ யாமினிச் செய்வதென்னே
அப்பனே யுன்னையா மன்புடன் விரும்பினோம்
எப்படி யித்துயர் தாங்குவோ மினிமேல் (ஐ)

(2) வேகுதே யெஙகள்-நெஞ்சம் பதரி
வேதனை யீந்தாநீ யேகினை கடவுளின்
சோதனையோயிது சொல்லொணு வதிசயம் (ஐ)

(3) குழியிற் கிடக்க வென்ன விதியோ
கோதிலா நின்னுடல் யாதினுக் கிரையோ
பாதகஞ் செய்தாயோ—பரமனதருளோ (ஐ)

(4) மழலை மொழியை யெங்கு விட்டாய்
மதுவெனு முன்மொழி-மனதைத் துளைக்குதே
பதரிட நெஞ்சமும்-பாலனே மாண்டாயோ (ஐ)

(இராகம்-தன்யாசி)

சோதர னெனவே யுன்னையுன்னியே மகிழ்வைக் கொண்டோஞ்
சோதனை செய்தானீசன் சுந்தரனுன்னைக் கொன்றான்
வேதனை பொறுத்தற் பாற்றோ வேகுதே பதரிநெஞ்சம்
வேதனின் முயற்சியாவும் வீணென முடிந்த தந்தோ.

---

வேதன் = பிரமன்.

நரசி:—(துக்கத்துடன்) "குழைந்தைகாள்! நாம் ஓயாது அழுது கொண்டிருப்பதிலொரு யாதொரு பயனுமிலது. மிக்க நற்குணமுடைய கோவிந்தனை நாம் இனி உயிருடன் காணப் போவதில்லை. ஈசன் நம்மை எவ்வாறு சோதிக்கச் சித்தங் கொள்ளினும அதை நாம் அனுபவிக்க வேண்டியதே. இபபொழுது இரவு வந்து இருளடர்நது விட்டது. நாம் குகைக்குச் செல்வோம் வாருங்கள்."

சுந்தரன் சந்திரன்:—(விசனததுடன்) "ஐயோ ! இவனை விடுத்து வர மனம் சகிக்க வில்லையே. பிதா!"

(மூவரும் விசனத்துடன் செல்லுதல்)

(மறுநாட் காலையில் சுந்தராங்கி விழித்துக் கொண்டு எழுநதிருத்தல்.)

சுந்தராங்கி:—(திகைத்துத் தனக்குள்) "ஆகா இதென்ன ஆச்சரியம்! யான் இப்பொழுது எங்கிருக்கிறேன்? நண்பரின் குகையிலன்றோ இருநதேன். வேட்டைக்குச் சென்றோா திரும்பி வநதனரோ! இது குகையாய்த் தோன்ற வில்லையே! யான் இப்பள்ளத்திற்கு எவ்வாறு வநதேன்! இச்செடி கொடிகளை என் மீது போட்டு மூடியவர்கள் யாவர்? ஆகா ! புருஷோத்தமன் கொடுத்த அமிர்த சஞ்சீவியை உட்கொண்டவுடன் என் உயிர்போவதாய்த் தோன்றியது,ஐயோ! அவனும் மதிவதனனுடன் சேர்ந்துகொண்டு வஞ்சகம் புரிந்தானே! விஷத்தை யன்றோ அமிர்த சஞ்சீவி யென்று கொடுத்து விட்டனன். குகை எங்கே ?. நண்பாகள் எங்கு சென்றனர் ? யான் இங்கு வந்த காரண மென்ன? இதுகன

வோ அன்றி விழிப்புத் தானோ? ஆகா! இதென்ன பெரும் சப்தமுண்டாகின்றதே! என்திரேகம் நடுங்குகின்றதே! இது பெருங்கடலின் ஆரவாரமாய்த்தோணுகின்றதே! சிறிது அப்பாற் சென்று நோக்குவேன்."

(சுந்தராங்கி சிறிதுநடந்து அப்பாற் செல்லுதல். அங்கு கலிங்க தேசத்துச் சேனைகள் வருதலைக்காணுதல்)

சுந்தராங்கி:—(தனக்குள்) "ஆகா! இப்பொழுதே உண்மை புலப்படுகின்றது. பராக்கிரமபாகு சேனைகளுடன் இங்கு வருவதாய்ப் புருஷோத்தமன் தெரிவித்தனனன்றோ. இவாகள அசசசனைகளே. இது எனக்கு நன்மையான காரியமாய்த் தோன்றுகின்றது. யான் இவ்வாறு அலைந்து திரிவதிற் பயனில்லை. பராக்கிரமபாகு விடத்திற்குச் சென்று வேலைக்கமர்கின்றேன். அதன் பின்னர் வருவது வரட்டும்."

(சென்று விடுதல்)

3-வது சீன்—அரண்மனையில் அரசனது அந்தப்புரம்

அரசன், மந்திரி, புருஷோத்தமன், சேவகர், முதலியோர் சம்பாஷித்தல்.

பிரதாபசிம்மன்:—"சேவகா! மறுபடியோர் முறை சென்று இப்பொழுது சாசாங்கியின் திரேகஸ்திதி எப்படியிருக்கின்றதென்பதை அறிந்துவா. ஆகா! தனது தமையனைக்காணாத வியாகூலத்தினால் இவளது திரேகத்தின் நிலைமை இவ்வளவு கேவலஸ்திதிக்கு வருமென யான் நினைக்கவேயில்லை. கடும் ஜுரத்தினால் புத்தி மாறாட்டமடைந்து பிதற்றுவதாயும் அவள் பிழைப்பது

அரிதென்றும் வைத்தியன் தெரிவித்தனன். எனது உயிரைநிகர்த்தசரசாங்கியை ஓர்கணமும்யான் எவ்வாறு பிரிந்திருப்பேன்? எனது காதற்புதல்வி சுந்தராங்கி சென்ற விடத்தையே அறிந்தேனில்லை. எனது மகாராணியோ பிழைக்கும் நம்பிக்கை யில்லாமற் கிடக்கின்றனள். பெரும்போர் சம்பவிக்கப் போகின்ற தருணத்திலேதானே இத்துன்பங்கள் சம்பவிக்கவேண்டும்? இப்போருக்கு இன்றியமையாத வீரனை ஜெயபாலனும் எங்கேயோ போய்விட்டனன். இவைகள் யாவும் என்னை மிக்க வருத்துகின்றனவே! என்செய்வேன்? இவைகள் ஆருாத்துயரை உண்டாக்கி விட்டனவே. (அதட்டிய குரலில்) அடே புருஷோத்தமா! சுந்தராங்கி சென்ற விடத்தை நீ நன்ருய் அறிந்திருந்தும் ஒன்றுந்தெரியாதெனப் பாசாங்கு புரிகின்றனை. நீ இப்பொழுது உண்மையைக் கூறுகின்றனையா! இல்லையாயின் உன்னுடைய நகக்கண்களில் கூரிய ஊசிகளைச் சொருக உத்திரவளிக்கட்டுமா?"

**புருஷோத்தமன்:**—(பணிவுடன் காலில் விழுந்து) நரேந்திரா! எனதுயிரே உங்களது அடைக்கலம். உங்கள் சித்தத்தின்வாறு என்னை நீங்கள் எவ்விதம் வேனுமானாலும் நடத்தத்தடையென்ன! உங்கள் செல்வி எங்கு சென்றன ளென்றும, எதற்காகச் சென்றனளென்றும், எப்பொழுது திரும்பிவருவளென்றும் யான்சிறிதும் அறிந்தேனில்லை. யான் உங்களிடத்தில் முற்றும் உண்மையான அடிமையன்றே. ஒருபோதும் பொய்யுரைப்பேனெனச் சந்தேகிக்காதிருக்க வேண்டுகின்றேன். வேந்தே!"

**மந்திரி:**—"மகாப்பிரபுவே! சுந்தராங்கி காணமற் போன

தினம் இவனை இவ்வூரிலேயே யான் கண்டேன். ஆதனா

பதுநிச்சயம். இவன்மெத்தயோக்கியன். ஜெயபாலனைப் பற்றி நாம் ஏன் கவலைப்படவேண்டும்? சுநதராங்கியைத் தேடிச் சென்றிருக்கின்றனர். வெகு விரைவில் வந்து விடுவதுறுதி. அதைபபற்றி நாம கவலைப்படல் தேவை யிலது.''

பிரதாப சிம்மன்:—'' எனககுப புருஷோத்தமன் மீது இன் னும் சந்தேகமே. எனினும, இன்னுஞ் சிறிது பொறுத் துப் பார்க்கி

மந்திரி:—''கலிஙகத்தசத்திலிருநது பெருததசேனைகளவநது துறைமுகபபட்டினத்தில இறஙகிவிட்டனவாம். காலாள் முதலிய படை. களைத்தவிற நூற்றுக் கணககான சிறநத வீரர்கள் வந்திருக்கின்றனராம்.''

பிரதாப சிம்மன்.—'' ஐயோ! இப்பொழுது எனது அரசி யும், ஜெயபாலனும், எனக்கு உதவி புரியா நிலைமையி லிருக்கின்றனரே! ஆகா! அவர்களில்லாமற் செய்வது இன்னதென்பதே தெரியாது என்மனம் குழம்புகின் றதே.''

மந்திரி:—'' அண்ணலே! நீவிர் எதற்காக வருநதவேண்டும்? நாம் ஏற்கனவே இதற்குத் தேவையான சேனைகளுடன் ஆயத்தமாயிருக்கின்றோம். நமது சேனைகள் கலிங்கத் துச் சேனைகளைக்காட்டினும் அதிகரிதத சேனைகளுக் கும் போதுமானவை. இப்பொழுது யாம் செய்யவேண் டியது வேறொன்றுமில்லை. சண்டைக்கு ஆவலுடனிருக் கும் நமது சேனைகளை ஏவவேண்டியதே பாக்கி.''

பிரதாப சிம்மன்:—"அப்படியா? மெத்த சந்தோஷம். இனி யாம் அஞ்ச வேண்டியதில்லை. யாம் விரைவிற் சென்று இதற்காக வேண்டியவற்றைச் செய்வோம்."

(அரசனும மந்திரியும் சென்று விடுதல்.)

புருஷோத்தமன்:—(தனக்குள்) "சுந்தராங்கியைக் கொன்று விட்டதாக மதிவதனனுக்கு யான எழுதியதற்கு யாதொரு பதிலையும் பெறறேனில்லை. அடிக்கடி க்ஷேம சமாசாரததைத் தெரிவிப்பதாய் வாக்களித்த அரசியும் இதுவரையில் அவ்வாறு செய்யவில்லை. ஜெயபாலனுக்கு யாது சமபவிதத தென்பதுந்தெரியவில்லை. இவ றறை நினைக்க நினைகக எனமனது பெருங்குழபபத்தை யடைகின்றது யான் அவாகள் விஷயத்தில உண்மை யாயிருததலின, அரசனிடத்தில் உண்மையை ஒளிக்க நோநதது. யாவறறிபகும கடவுளே வழிவிடவேண்டும. இபபொழுது நடக்கப்போகும சமரில யான்மிக்க வீரத்துடன் போர்செய்து, எனது தேசாபிமானத்தைக் காட்டி அரசனைக் களிப்பிக்கின்றேன்.

"ஒன்றைநினைக்கினது வொழிந்திட்டொன்றுகு
மன்றியதுவரினும் வந்தெய்து—மொன்றை
நினையாமுன் வந்தெய்தினுமெய்து
மெனையாளு மீசன்செயல்."

என்றபடி அடுத்த நிமிஷத்தில் நமக்குச சம்பவிக்கப் போவதையாரறிவார? இவர்கள் விஷயம் எவ்வாறுய் முடியுமோ பார்க்கலாம்."

(செல்லுதல்)

4-வது சீன்: துறைமுகப்பட்டினத்திற்கடுத்த ஆரண்யம்.
நரசிம்மவீரன், சுந்தரன் சந்திரன், மூவரும் தமது
குகைக்கு முன்னர் சம்பாஷித்தல்.

நரசிம்மவீரன்:— (இராகம்—சகாறு)

கலிங்கமாபதியின்சேனை கடலெனக்குமுறியார்த்தே
யொலித்தன மருங்கிற்சூழ்ந்து பொதுளினவலகிலாமற்
சிலகணமினிமேலீங்கு விளம்பணம்புரியின்யாமுந்
தொலைதலேயுறுதிநீங்கி யொல்லையிற்செல்வோம்வம்மின்

ஆகா! குழந்தைகாள்! கலிங்கதேசத்தின் சேனைகள் கடலெனப் பேரொலி செய்த வண்ணம எங்கும் சூழ்ந்து கொண்டு நெருங்குகின்றன. இன்னம சிறிது யாம் இங்கு இருப்போமாயின் அவர்கள் இங்கும் வாது அடர்வர். விரைவில் நாம் எங்காயினும் ஓடிப்போவோம வாருங்கள்.”

சந்திரன்:— (இராகம்-தேசிகதோடி)

யாதொரு பயனுமின்றி யரிய நம்முயிரைத்தாங்கிப்
போதினைக்கழித்தல்யாது புகழினையுடைத்தாமந்தோ
தாதையேசெயலொன்றின்றித் தகவிலாதொளிந்துவாழற்
கோதலாற்பெருமையாமோ வோதுவீரறியவெந்தை.

எமதரிய தந்தையே! யாதொரு அரிய செயலுமின்றி வீணில் இவ்வுயிரைப் பத்திரப்படுத்தி வைப்பதில் யாது பயனுளது? நாம் எதற்காக ஓடியொளிப்பது?”

சந்திரன்:— (இராகம்—கானடா)

வருபவர்க்கஞ்சியோடி யரியவிவ்வுயிரைநன்று
புரத்தலின்கருத்துயாதோ புகலிடமினியுமுண்டோ
மருவலராகும்பேதை மாளவரெனவேயெம்மைக்
கருதுவர்பிணிப்பர்மாய்த்துக் கழுகினுக்குணவாயீவர்

மருங்கு=பக்கம் பொதுள=நெருங்க ஒல்லையில்=விரைவில், தாதை=தந்தை. தகவு=பெருமை. கோது=குற்றம். புரத்தல்=பாதுகாத்தல் மருவலர்=விரோதிகள்.

சிறந்த தாதை! நாம் ஓடியொளித்தாயினும் இவ்வுயிரைக் காப்பாற்றியாது பெரும்பயனை யடையப் போகின்றோம்? யாம் இனி எங்கு ஓடி யொளித்துக் கொள்ளினும், பெருங் கடல் பெயர்ந்து வருவதைப் போல எவ்விடத்திலுஞ்சூழ்ந்து வருமிவர் கண்களிற் படாமல் நாம் எங்கொளியப் போகின் றோம். இவர் நம்மைப் பிடித்துக் கொண்டு பகைவரான மாளவ தேசத்தாரைச் சேர்ந்த யாவரோ கள்வரென நம்மை மதித்துக் கொல்வர். இவ்வளவு எச்சரிக்கையாய்க் காப்பாற் றப்பட்ட நமது சரீரங்கள் பறவைகளுக்கும் விலங்குகட்கும் இனிய விருந்தாயன்றோ முடியும்.''

நரசிம்ம வீரன்:—

(இராகம்—ஆனந்த பைரவி)

அரியவென் புதல்வீர் வம்மினருகினிலுள தா மோங்கும்
பருவத மிசையாம் போந்து பகைவரை விலகி நன்று
கரைதலே யுரியதாகுங் காவலன் படையிற் சேரல்
பெரியதா மிடரையீயும் பேதைகாள் சாதற்றிண்ணம்

எனதரிய குழந்தைகாள்! வாருங்கள் நாம் இம்மலை மீதேறி ஒளிந்து கொள்வோம். யாம் நமதரசனது சேனை களிற் சேர்தலிற் பயனில்லை. அவ்வாறு புரிதலுந் துன்பந் தரும். ஜெயபாலன் இவ்விடத்தில் இறந்ததை அரசன் அதி சீக்கிரத்தில் அறிவன். யாம் புதியவராய்ச் சேனைக ளிற் சேர்வோமாயின் நம்மை யாரென வினவுவர். யாம் நம திருப்பிடத்தை வெளியிட நேரும். ஜெயபாலனை நாமே கொன்றவரென உடனே சந்தேகித்து நம்மைப் பிணித்துச் சித்திரவதை செய்து கொல்வர். கண்மணிகாள்! யான் தெரி விப்பதைப் பற்றி நன்றாய் யோசனை செய்யுங்கள்.''

---

கரைதல் = மறைதல் காவலன் = அரசன்.

சுந்தரன்:" தாதை! அவ்வாறு சம்பவிக்குமெனத் தோன்றவில்லை. இவ்வமயத்தில் நீவிர் இவ்வாறு தெரிவிப்பது உமது மேன்மைக்கழகு மன்று. அது எங்களுக்கு மனச சம்மதியாயில்லை."

சந்திரன்:—" ஆகா! தந்தையே! கலிங்கதேசத்தினர் கடலெனத் தோன்றி யுத்த பேரிகை முழக்கிக் கொண்டிகையில்,நமது தேசத்தவர், மிகவும கேவலமான தோற்றத்தைக் கொண்ட நமமை அவ்வளவு உற்றுக் கவனிக்கவும், நாம் எங்கிருநது வநதோமென அறியவும் மனமுடையவராக ஒரு போதும் மிரார். இதைப்பற்றி நீவிர் சிறிதும கவலைப படறவேணடியிலலது. எனதரிய தநதை."

நரசிம்மவீரன்:—" ஐயோ! சிறந்த செல்வர்காள்! அசசேனையில் என்னை அறிநதோர் பலரிருக்கின்றனர். அனேக ஆண்டுகளுக்கு முன்னர் யான் ஜெயபாலனைக் கண்டிருநதும் இபபொழுது அவனுடைய அடையாளத்தைக் கண்டு பிடிக்கவில்லையா? அவ்வாறே பிறரும் என்னை அறிந்துவிடுவர். நிற்க, நமது அரசன் நன்றியற்றவனன்றோ. அவனுக்கு யாம இவ்வுதவி செய்வதற்கு அவன் பாத்திரனன்று. நீங்கள் அவன் மீது அன்பு கொள்வதற்கு அவன் உங்கள் விஷயத்தில்யாது நன்மை புரிந்தனன்? நீங்கள் இவ்வாறு நாகரீகமற்றவராயும் முரடராயும் வளர்தல் அவனாலன்றோ? நீங்கள் நகரத்திலேயே இருபபின் மற்றவரைப்போல எத்தகைய சிறந்த நலன்களையும் இன்பங்களையும் பெறுவீர்கள்? இவ்வளவு தீமையை உங்களுக்குப் புரிநத அரசனுக்கு நீங்கள் உதவி செய்ய நினைத்தலே தகாது."

சுந்தரன்:—"நாம் இவ்வாறு ஜீவித்திருத்தலை விடச் சாதலே நன்று பிதா! எங்கள் இருவரையும் அறியக்கூடியவர் சேனைகளில் ஒருவருமிலர். நீவிர் அவ்விடம் விட்டு வந்த நெடிய காலமாய்க்காட்டின் உணவு மாறுபாட்டினுலும் உரோமம் அதிகம் வளர்ந்திருப்பதினுலும், வயதின் முதிர்ச்சியினுலும், உமது உருவம வேறுபட்டிருப்பது நிசசயம். அவர்களும உம்மை முற்றும் மறந்திருப்பர். ஆதலின், நாம அங்கு செல்வோம் பிதா !"

சந்திரன்:—நான் சமருக்குச்செல்லாது இனி ஓர்கணமும் இங்குதரியேன். ஆகா! போரென்பது எவ்வாறிருக்குமென்பதையேஅறியாது பெரும்பேதையராய்வளர்கின்ருேம். ஒருவன் மற்றவனை வெல்வதுஎவ்வாறிருக்குமென்பதையுணர்ந்தோமில்லை. ஐயோ! செயலற்ற அற்பப்பிராணிகளான மான்களும், ஆடுகளும், அடிபட்டு வீழ்வதையன்றி வேறு எததகைய வீரசசெயலை யாம் கண்டுளோமபிதா! ஆறறிவுடையோராய்ப பிறநது இவ்வாறு விலங்குகளைப் போலிருப்பது எனக்கு மிகவும வெட்கமாயிருக்கின்றது."

சுந்தரன்:—" அரிய தந்தை ! தயவு செய்து விடை தருவீரேல், நாங்கள் மிக்க எச்சரிக்கையுடன் சண்டை செய்து திரும்புகின்ருேம், இல்லையாயின் நாம் இங்கு கலிங்க தேசத்தாரின் வாளுக்கிரையாவதே உறுதி."

சந்திரன்:—"ஆம் பிதா! தயைபுரிந்து விடையளியுங்கள்."

நரசிம்மவீரன்:—"எனதரிய செல்வர்காள்! இளமைப் பருவத்தைக்கொண்ட நீங்களே உங்களது உயிரை ஓர் துரும்பாய் மதிக்கையில் உடைந்த பாண்டமாகியஎனது தளர்ந்து பயனற்ற சரீரத்தைக்காப்பாற்ற யான் கவலைப்

படுவானேன். ஆயினும், ஓர் விஷயம் உங்களுக்குத் தெரிவிக்கின்றேன். நீங்கள் இப்போரில் இறப்பீர்களாயின், யானும் அவ்விடத்திலேயே மறிப்பதுறுதி. அதற்குச் சம்மதமாயின் செல்லுங்கள்."

இருவரும்:—"அவ்வாறு சம்பவியாதிருக்க முயலுகின்றோம் பிதா!"

நரசிம்மவீரன்.—"அப்படியாயின் வாருங்கள் செல்வோம்." (தனக்குள்)"ஆகா! பலவருஷங்கள் ஆய் விட்டதன்றோ. அரசனது உதிரமல்லவா! இவர் இனி இங்கு நிற்பாரோ? ஒருபோதுமில்லை, செல்லட்டும்."

(மூவரும் செல்லுதல்)

## 5 வது அங்கம்

1வது சீன்:—(போர்க்களத்தின் ஓர் புறத்தில் மதிவதனன் இரத்தத்தில் நனைத்த ஓர் கைக்குட்டையை வைத்துக் கொண்டு தனியாய் விசனத்துடன் நிற்றல்.)

மதிவதனன்:—

(கானகத்தில் நானலைந்து கதற விதிவசமோ)

(1) மானே சுந்தராங்கியே நீ வஞ்சகியாய் மாறினாய்
ஏனோயிவ்வுயிர் சுமந்தே யேங்கி யானிருப்பது (மா)

(2) ஆவியுமுடலுமென்னக் காதலித்தாயே யென்னைப்
பாவி சூரசேனனை நீ மேவிய தென் விந்தையே (மா)

(3) தூய்மையே யுருவாய்வந்த தோகையாயிருந்தனை
சேய்மையினில் யானுஞ் செல்லச் செய்தனை யடாவினை (மா)

அடி சுந்தராங்கி! நீ இவ்வாறு புரிவாயென யான் கனவிலும் நினைத்தேனில்லையடி! யான் உன்னுடனிருந்த வரையில், என்னையன்றிப் பிறனைக் கண்ணெடுத்துப் பாரேனென்றும் மற்றவனிடத்தில் உன் மனது ஒருபோதுங் காதலைக் கொள்ளாதென்றும் உறுதி கூறினையே! கேவலம் இழிந்தவனை சூரசேனனிடத்தில் உனக்கு எவ்விதம் விருப்பமுண்டாயிற்றோ அறியக்கூடவில்லையே. ஒருவர் மீது மற்றொருவர்கொண்ட ஆழ்ந்த அன்பு தேய்தல் எளியகாரியமன்று. பிறந்ததுமுதல் இதுவரையில் பிரியாது இரண்டுடலுமோருயிருமாயிருந்த நமது வேரூன்றிய காதல் இவ்வளவு சீக்கிரம் அழிந்தது விந்தையினும் விந்தையல்லவோ?''

---

சேய்மை = தூரம்.

(இந்துஸ்தானி—தகதீரமாரி இந்திரே)

சுந்தராங்கியே யுன்னால் யான் சோகமெய்தினேன்

(1) விந்தையே நீ செய்தனையென் வேட்கை விட்டனை
வீணன் பேதை சூரசேன னைவிரும்பினை (சு)

(2) பேதையான் நின்னை நினைந்து பித்தங்கொண்டுளேன்
வேதனையால் வாடினேன் யான் வேகுதேமனம் (சு)

(3) நீதசெய்கையோ வெனத்திகைக்குதே மனம்
போமெதலாம் நின்றாய் நீ யென்முன் பூவையேயுயிர்ச் (சு)

ஐயோ! அடி பேதாய்! உன்னை மறந்துவிடவேணு மென்று யான் எவ்வாறு முயன்றும் பலியாமல், உன் உருவ மும் நினைவும் என்மனதில் முன்னினும் அதிக உறுதியாய் வேரூன்றுகின்றனவே. ஒரு கண நேரமாயினும் உன்னை யன்றி வேறு யாதாயினுமொன்றை நினைக்க யான் எவ்வளவு பிரயத்தினப்பட்டும் சற்றும் பலிக்கவில்லையே! ஆகா! பாசி நீரை மறைப்பதைப்போல் முற்றும் உன்மயமாய் வந்து மூடுகின்றதே. அடி பாதகி, நீ இருந்தும் என்னை வருத் தினை! இறந்தும் வாதனைப்படுத்துகின்றனையே! ஆகா! என்ன செய்வேன்?

(இராகம் - முகாரி).

மனதினைக் கொள்ளைகொண்ட மங்கையே சுந்தராங்கி
யினியுயிர் வாழே னுந்த னிழிசெயல் பொறாதுகொன்றேன்
வனிதையே கலிங்கரோடும்வந்துளே னெனினுமுந்தன்
முனைவரைப் பொருதுமாய்வேன் முரணிடேன் நமரை
[யென்றும்.

அடி சுந்தராங்கி! நீ என் விஷயத்திற்செய்த பிழையின் பொருட்டு உன்னைக்கொல்வித்தேனாயினும் உனது தேசத்

* முனைவர்=பகைவர் மாய்வேன்=இறப்பேன் நமரை=நமது தேசத்தாருடன்.

தாருக்கு விரோதமாய்ச் சமர்புரிவேனென நினைக்காதே. யான் ஓர் எளிய மாளவதேசத்துப் போர்வீரனைப்போல உடைகளைத் தரித்துக் கொண்டு, கலிங்க தேசத்தாரை எதிர்த்துச் சண்டை செய்து உன் பொருட்டு எனது உயிரை இப்போர்க் களத்திலேயே விட்டு விடுகின்றேன். யான் தாழ்ந்த உடைக்குள் ளிருப்பினும், சேனைத்தலைவனது மகனென்பதைச் சிறிது தோற்றுவிக்கின்றேன்.

(திருப்புகழ்—வங்கார)

(1) மின்னாரில் தீயவளை மீறினை நின் னுழுமுள்ளம்
பைந்நாகமோ கொடிய பாதகியுன் சூதை யெவர்
முன்னாக வேயறிவர் மோசமிகு வேசையரில்—முதலானாய்

(2) பெண்டீரிற் பேதைநினைப் போல்பவர்க ளேதெனவே
கொண்டேனென் பாழ்நினைவு மோடியெவ ணேகியதோ
சண்டாளி யாயினை யிச்சாகச மெங்கேகற்றனை—மடமானே
(சென்று விடுதல்).

—வது சீன்:—கலிங்க தேசத்தாரும—மாளவதேசத்தாரும்
பொருதல். முன்னவர் பக்கத்தில் பராக்கிரமாகு,
சூரசேனன், முதலியோரும் பின்னவர் பக்கத்தில்
ஓர் எளிய போர்வீரனைபபோல வேஷந்தரித்த
மதிவதனனும் சண்டை செய்தல் :
மதிவதனன் சூரசேனனை ஜெயித்துக்
கீழே தள்ளிவிட்டு அப்பாலேகுதல்.

சூரசேனன்:—(தனக்குள் விசனத்துடன்) "ஐயோ! என்னுடைய மனசசாட்சியே என்னைக்குத்திக் கொல்லுகின்றதே! ஆகா! கற்பிற் சிறந்த சுந்தராங்கியை வஞ்சகியாக்கிய தோஷமே என்னை இத்தகைய அவமானத்திற்குட் படுத்தியது போலும். அவள் இத்தேசத்தரசி யல்

லவோ. அவளுக்குப் பாதகம் புரிந்தமையின் இந்நக ரத்திலடி வைத்த உடனே எனது சௌரியம் முழுதும் எங்கேயோ ஓடி மறைந்து கொண்டதே! இல்லையா யின், யான் இவ்வெளிய போர்வீரனுக்குத் தோற்ற லுமுண்டோ! யான் பலபோர்களில் வெற்றி பெற்றுப் புகழடைந்திருந்தும் இவ்விடத்திற் கேவலமோர் எளிய வனால் வீழ்த்தப் பட்டது பெரிதும் விந்தையே!"

(மற்றோர் புறத்தில் மாளவதேசத்தார் தோற்றோடு தல். பிரதாப சிம்மவரசனைக் கலிங்கதேசத்தார் பிடித்துக் கட்டிக் கொண்டு செல்லுதல். அச்சமயத்தில் நரசிம்மவீரன் அந்தரன் சந்திரன், மூவரும் அரசனை மீட்க வருதல்.)

சுந்தரன்:—" ஆகா! ஓடாதீர், ஓடாதீர்! நில்லுங்கள். மாள வதேசத்தின் பெருமையை அழிக்கவந்த கோழை காள்! நில்லுங்கள் நமது அரசனை எதிரிகள் பிடித்துச் செல்ல, நீங்கள் வீட்டிற்கு ஓடி உங்கள் மனைவியரிடத் தில் உங்கள் சௌரியத்தைத் தெரிவித்துக் கொள்ள ஓடுகின்றீர்களோ?"

(இவ்வமயத்தில் மதிவதனனும் மற்ற மாளவரும் இவ ருடன் ஒன்றாய்க் கூடிப்போர் செய்து பிரதாப சிம்மனை மீட்டல். மற்றோர் புறத்தில் சூரசேனன், பராக்கிரமபாகு, கோவிந்தன் மூவரும் வருதல்.)

பராக்கிரமபாகு:—"அடே சிறுவ! எனதரிய கோவிந்தா! நீ இனி இங்கு தாமதிக்க வேண்டாம். இப்போர்க்களத் தைவிட்டோடித் தப்பிப்பிழைப்பாய். இனி ஓர்கணமும் இங்கு நிற்பையேல் நமது பகைவர் உன்னைக் கொன்று விடுவர்."

சூரசேனன்:—மாளவர் திரும்பவும் பல வீரர்களுடன் தோ

ன்றிப் போர்செய்கின்றனராம். அவர்கள் அரசனைக் கூட விடுவித்து விட்டனராம். ஆகா! இதென்ன விந்தை."

பராக்கிரமபாகு :—திடீரென நமது அதிர்ஷ்டம் மாறியது பெரிதும் ஆச்சரியத்தை விளைவிக்கின்றது! நாம் விரைவில் ஓடிப்போய் இன்னம் சேனைகளைச் சேர்த்துக் கொண்டு வருவோம்."

(சென்று விடுதல்)

3-வது சீன்—போர்க்களத்தில் வேறோர் பாகம்
மதிவதனனும் வேறோர் மாளவதேசத்
தானும் சம்பாஷித்தல்.

மாளவதேசத்தான்:—"நீ எங்கிருந்து வருகின்றாயப்பா? ஓடுவோரிலிருந்து வருகின்றாயா? அல்லது தைரியமாய் நின்று நமது அரசனை மீட்டவரிலொருவனோ?"

மதிவதனன்:—"நின்றவரி லொருவனே நீ ஓடியவரிலொருவனோ?

மாள:—"ஆமாம்."

மதிவதனன்:—"நீ அவ்வாறு ஓடியது உன்மீது குற்றமன்று. மாளவதேசத்தார் யாவற்றையும் இழந்து முற்றுந் தோற்றனர். அச்சமயத்தில் கடவுளே அவருக்காகத் தோன்றி வெற்றியை யளித்தனரன்றி வேறிலது. மாளவதேசத்துச் சேனைகள் யாவரும் முறியடிபட்டு ஓடுவோரும், இறந்தோரும், பாதி உயிர்போய் விழுவோருமாயிருக்க, அரசன் ஓர் சிறிய சந்தில் நுழைந்து தப்பி ஓடினன். கலிங்கதேசத்தார் மிக்க தைரியத்தைக்கொண்டு யாவரையும் வீழ்த்தி அரசனைச் சந்திற்குள் பிடித்துக்கொண்டனர்."

மாள:—"அந்தச் சந்து எவ்விடத்திலிருக்கின்றது ?"

மதிவதனன்:—"போர்க்களத்திற் கருகில் தென்புறமாய் இருக்கின்றதன்றோ அஃதே. இக்குறுகிய சந்தில் அரசனைப் பிடித்துச்செல்கையில், ஓர் முதிய போர்வீர னும் இரண்டு சிறுவரும் திடீரெனத்தோன்றி அரசனை விடுவித்தனர். ஆகா! அச்சிறுவரின் சுந்தரத்தை என்ன சொல்வேன்! அவர்கள் ஓடும்வீரரைப்பார்த்து ஏளனம் செய்து, நிற்கச்சொல்லி ஊக்கி, தாமேபொருது பகைவரை வென்றனர். ஆகா! அவர்களுடைய மேன் மைத்தோற்றமே தோற்றம். இலக்ஷக்கணக்கில் ஓடும் மாளவரின் மானத்தை இம்மூவரே காத்தனர்."

மாள:—"ஆகா! இது மிக்க ஆச்சரியமாயிருக்கின்றதே! சிறிய சந்தில் ஓர் கிழவனும் இரண்டு சிறுவரும் பகை வரை வென்றாராம. ஆகா! விந்தை விந்தை!"

மதிவ:—(ஏளனமாய்) "நாம் அதைப்பற்றி ஆச்சரியப்பட வேண்டியதே யன்றி வேறிலது. நம்மால் ஒன்றுங் கைபால ஆகவில்லை."

மாள:—"ஏதப்பா! ஏளனம புரிகின்றனை ?"

மதிவ:—"இல்லை யில்லை. யார் பயந்து ஓடுகின்றாரோ அவனு க்கு யானும் நண்பனே."

மாள:—"இல்லையில்லை. நீ ஏளனம்புரிகின்றனை. யான்சென்று அரசனைப் பார்க்கின்றேன்."

(மாளவன் போய்விடுதல்)

மதிவ:—(தனக்குள்) "ஆகா! இவன் அரசனைப் பார்க்கப் போகின்றானும். இவன் பெரிய போர்வீரனும். இது மிக்க கண்ணியமாயிருக்கின்றது. போர்க்களத்தில் இரு

ந்துகொண்டே விசேஷம் என்னவென்று இவன் என்னைக்கேட்கின்றான். இது மெத்த ஆச்சரியம் ! ஐயோ இப்போரில் எத்தனை பேர் மாண்டனர் ! யான் இச்சமரில் எனது உயிரை விட்டு விட வேணுமென்னும் எண்ணத்துடன் வலிய வீரர்களுடன் முரணி யுத்தம் புரிகின்றேன். அப்பாழும எமன் என்னிடம் வரமாட்டேனென்கின்றனனே ! அப்படுபாவி, மிக்கத்துன்புற்று வருந்துவோரை விடுத்துப் பற்பல சுகங்களை யனுபவிக்கும் நிலைமையிலிருப்பவரைப பிடித்துச் செல்கின்றனனே.—எனது பிராணனை விட யான் இன்னமும் முயன்று பார்க்கின்றேன். இனியான் சண்டை செய்வதிற் பயனில்லை. வேறோர் தநதிரம் புரிநது பார்க்கின்றேன். மாளவதேசத்தானைப் போலின்றி இப்பொழுது யானோர் கலிங்கதேசத்துப போர்வீரனைப்போல் உடைகளை யணிந்துகொண்டு மாளவதேசததினன் எவனாயினு மோர்பேதை காணபபடுவானாயின் அவனிடம் அகப்பட்டுக் கொள்கின்றேன். கலிங்க தேசத்தார் இதுவரையில் இலக்ஷக்கணக்கான மாளவதேசத்தினரைக்கொன்று விட்டனராதலின்,மாளவர் இபபொழுது அதன் பொருட்டுப பழிக்குப்பழிவாங்குவது நிசசயம். எப்படியாவது சுந்தராங்கியின் பொருட்டாய் இறகக வேண்டு மெனறே யான் இங்கு வநதேனாதலின், யாரிடத்திலாயினும் அகபபட்டுக்கொண்டு சாதலே உறுதி. செல்கின்றேன்.

(மாளவதேசத்து வீரர் சிலர் வருதல்.)

ஒருவன்:—ஆகா ! இவ்விருத்தனும் அவனுடைய மக்களிருவரும் தெய்வங்களென்றே நினைக்கின்றேன். நண்பர்காள் ! பராக்கிரமபாகுவும் பிடிபட்டனனே !”

மற்றொருவன்:—"இவர்கள் மூவரைத்தவிர மற்றொரு மாளவ தேசத்துப் போர்வீரனும் அப்பொழுதுகூட இருந்தனனாம். அவனாலேயே நமக்கு ஜெயமுண்டாயிற்றாம்."

வேறொருவன்:—"அப்படித்தான் சொல்லிக்கொள்ளுகின்றனர். எனினும் அம்மூவரில் ஒருவனும் காணப்படவில்லையாம்.—அடே! யாரடா அங்கு செல்பவன்? நில்லு நில்லு."

மதிவ:—ஐயா! யானோர் கலிங்கதேசத்தான். திரும்பச் சண்டை செய்வதற்குச சமயம் பார்த்துக்கொண்டு நிற்கின்றேன்."

மாள:—"விடாதீர்! அவனைப பிடித்துக் கொள்ளுங்கள். இவனோர்கலிங்கத்து நாய். இவர்களில் ஒருவனுந் தமதூருக்குத திருமபிசசெல்லக் கூடாது. இவன் மிகவும் பராக்கிரமசாலியைப போலவுநதான் ஏதோ பெருத்த காரியங்களைச செய்து விட்டவனைப் போலவுந தன்னைப்பிரமாதமாய்ப் பாராட்டிக் கொள்ளுகின்றனன். இவனைப்பிடியுங்கள். நமது அரசனிடத்தில் இவனைக் கொண்டு போய் விடுவோம்."

(இவர்கள் மதிவதனனைப் பிடித்துக்கட்டிப் பிரதாபசிம்மன், நரசிம்மவீரன், சுந்தரன், சந்திரன், புருஷோத்தமன், முதலியோரிருந்த விடத்திற்குக் கொண்டு போதல். அரசன் மதிவதனனைச் சிறைச்சாலையில் அடைக்க உத்திரவளிக்க, வீரர் அவ்வாறே செய்தல்.)

4—வது சீன்—சிறைச்சாலை. (மதிவதனனும் காவலனு மிருத்தல.)

காவலன்:—

(இந்திரசபா—அங்கு நானிருந்தவனே அழைத்து வந்ததேண்டி.)

(1) ஏனடா கலிங்கனே நீ யேங்கிமிக வாடுகின்றாய்
எதேதினி யுயிர்பிழைப்ப தில்லையடா பெரும்மூடா (ஏ)

(2) கோனவனை நீவிர்வெல்லக் கூடுமோ வதுஎளிதோ
மானமதை விடுத்தேயினி வருந்திடிற்ப யனுளதோ. (ஏ)

(3) ஆவியைவிடத் துணிந்தா யரியவரை நீங்கிவந்தாய்
அறிவிலியேமனைவியைநீ ஐயோயினிக்காணலுண்டோ. (ஏ)

அடே கலிங்கதேசத்தானே ! எங்கள் அரசனை வெல்வ தெளிதென நினைத்து நீவிர் மனைவி மக்களை விடுத்து உயிரை ஓர் திரணமாய் நினைத்து வந்தீர்களோ. என்ன உங்களுடைய பேதைமை ! இனி நீ உனது மனைவி முதலியோரைக் காண் பதேது ? அடே நிர்மூடா! முதலிற் பேதைமையால் துணிவு கொண்டு வந்து விட்டு இப்பொழுது வருந்துவதில் யாது பயனுளது? ஆய்ந்தோய்ந்து பாராத கருமம் தான் சாம்ந் துயரைத்தருமென்பதை அறிந்தாயில்லையோ ?"

மதிவதனன்:—"எனதரிய அண்ணே! சிறைச்சாலை முதலிய விடங்களிலிருக்கும் காவலர் யாவரும் முரடராயும் இரக்கமற்றவராயும் இருத்தலே இயற்கை. நீ எனது விசனத்தைக் கண்டு மனதிளகினவனாக உரையாடுதலைக் காண, என் மனதிற் சிறிது ஆறுதலுண்டாகின்றது. எனதரிய நண்பா ! உண்மையைத் தெரிவிக்கின்றேன் கேள். இபபூலோகத்தி லுதிக்கும எண்ணரிய பிறவி களில் மானிடப்பிறவியே அரிதினும அரிதெனயாவருந தெரிவிக்கின்றனரே, அது பெரும் பொய். மற்றப் பிறவிகளுக்கு தேகாவஸ்தையோடு நிற்க, இம்மானி

டற்கே, சரீர பாதையோடு ஓயாக்கவலையும் சதா வருத்தும் மனோபாதையும் கூடச்சேருகின்றன. எத்தகைய பரமானந்த போகமனுபவிப்பவரும் சாஸ்வதமாய் நிலை நிற்கின்றாரோ? நிற்க, அவரும் பல கவலைகளால் ஓயாது சஞ்சலப்பட்டுக் கொண்டிருக்கின்றனர். மனிதர் சரீரத்தின் உண்மை யோக்கியதையை நீ அறிவையோ? தெரிவிக்கின்றேன் கேட்பாய்.''

(இராகம்—எதுகுலகாம்போதி.)

''காதளவோடிய கலகப் பாதகக்
கண்ணியர் மருங்கிற் புண்ணுடனுடுங்
காதலுங் கருத்து மல்லா னின்னிருதாட்
பங்கயஞ்சூடப் பாக்கியஞ்செய்யாச்
சங்கடங்கூர்ந்த தமியேன்பாங்கிருந்
தங்கோடிங்கோ டலமருங்கள்வர்
ஐவர்கலகமிட்டலைக்குங் கானகஞ்
சலமலப்பேழை யிருவினைப்பெட்டகம்
வாதபித்தங்கோழை குடிபுகுஞ்சீறூர்
ஊத்தைப்புன்றோ லுதிரக் கட்டளை
நாற்றப்பாண்ட நான்முழத்தொன்பது
பீற்றற்றுண்டம் பேய்ச்சுரைத்தோட்டம்
அடலைப்பெரிய சுடலைத்திடருள்
ஆசைக்கயிற்றி லாடும்பம்பரம்
ஓயாநோய்க்கிட மோடு மரக்கலம்
மாயாவிகார மரணப்பஞ்சரஞ்
சோற்றுத்துருத்தி தூற்றும்பத்தங்
காற்றிற்பறக்குங் கானப்பட்டம்
விதிவழித்தருமன் வெட்டுங்கட்டை
சதுர்முகப்பாணன் றைக்குஞ்சட்டை
ஈமவிக்கனலி லிடுசிலவிருந்து
காமக்கனலிற் கருகுஞ்சருகு

கிருமிகிண்டுங் கிழங்கஞ்சருமி
பவக்கொழுந்தேறுங் கவைக்கொழுகொம்பு
மணமாய்நடக்கும் வடிவின்முடிவிற்
பிணமாய்க்கிடக்கும் பிண்டம்பிணமேல்
ஊரிற்கிடக்க வொட்டாவுபாதி
காலெதிர்குவித்த பூளைகாலைக்
கதிரெதிர்ப்பட்ட கடும்பனிக்கூட்டம்
அந்தரத்தியங்கு மிந்திரசாபம்
அதிருமேகத்துருவி னருநிழல்
நீறிற்குமிழி நீர்மேலெழுத்து
கண்டுயில்கனவிற் கண்டகாட்சி
அதனினும்பொல்லா மாயக்களங்கம்
அமையுமமையும் பிரானேயமையும்
இமையவல்லி வாழியென்றேத்த
ஆனந்தத்தாண்டவங் காட்டி
ஆண்டுகொண் டருள்கை நின்னருளினுக்கழகே.''

அடே! நண்பா! இத்தகைய கேவலமான சரீரத்தை மனிதர்கிடைத்தற் கரிய வஸ்து வெனக்கூறுகின்றனர். இதற்குப்பாத்தியதை யுடையார் எவரெவரென்பதை அறிவையோ?''

(இராகம்—காம்போதி.)

“நாயினுக்கிரையோ நரியினுக்கிரையோ நருநடைக்குழிவிழிப் [பிறழ்பற்
பேயினுக்கிரையோ கழுகினுக்கிரையோ பெரிதுநாறிய [புழுக்குரம்பை
யீயினுக்கிரையோ யாதினுக்கிரையோ யான் சுமந்துழன்றிடப் [பணித்தாய்
தாயினுக்கழகோ குழவியைவருத்தல் சாற்றிடா யிளசைவான [வனே.''

நமது தேகத்திற்கு இத்தனை பங்காளிகளிருக்கின்றனர். மனைவி மக்களைவிட்டு ஆவியைத்துறக்க வந்ததாகக்

கூறினேயே ! அவர்கள் உண்மைத்தன்மையை உள்ளவாறு அறிந்தாயில்லைபோலும்.

(இராகம்—கானடா)

"தந்தைதாய் தமர்தார மகவென்னு மிவையெலாஞ் சந்தையிற் [கூட்டமிதிலோ
சந்தேகமில்லைமணி, மாடமாளிகைமேடை சதுரங்க சேனை [யுடனே
வந்ததோர்வாழ்வுமோரிந்திர ஜாலக்கோலம்வஞ்சனைபொறாமை [லோபம்
வைத்தமன மாங்கிருமி சேர்ந்தமலபாண்டமோ வாஞ்சனையி [லாதகனவே
யெந்தநாளுஞ் சரியெனத்தேர்ந்து தேர்ந்துமே யிரவுபகலில்லா [விடத்
தேகமாய் நின்றநின்னருள்வெள்ள மீதிலேயானென்பதறவு [மூழ்கிச்
சிந்தைதான்றெளியாது சுழலும்வகை யென்கொலோ தேடரிய சத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே தேசோம [யானந்தமே."

நண்பா ! உலகத்தின் வாழ்வு இத்தன்மைத்து. எண்ணரிய இத்துன்பங்களை விலக்கும் விஷயத்தில் நமக்கு உதவி புரியும் நண்பன் யாவனென்பதை அறிந்தனையோ ? மரணம் என்னும் நண்பனே நம்மை அவற்றினின்றும் விடுவிப்பவன். இறந்தபின் நம்மை எத்தகைய துன்பமும் வருத்துமோ ? ஒரு போது மில்லை."

காவலன்:—" ஆகா ! நீ சொல்வன யாவும் சரியே. இத்தகைய அநித்திய சரீரத்தைக் கொண்ட உங்களுக்குக் கலிங்கதேசம் போதாமல் மாளவ தேசமும் எப்படித்

தேவையாயிற்றோ தெரியவில்லையே. ஒன்றும்பலியாமை யால்வேதாந்தத்தின் உதவியைப் பற்றினாய் போலும்"

மதிவதனன்:—"அடே நண்பா! யான் இத்தேசத்தை ஜயிக்கு மெண்ணத்துடன் வந்தவ னன்று. எப்படி யாயினும் இப்போரில் உயிர்துறக்க வேண்டு மென்றே வந்தேன். என்னைச சிறையிலிட்டனரே! எனது எண்ணம் நிறைவேறாமல போமோவென என் மனம் வருந்துகின்றது."

காவலன்:—"ஐயோ! உன்னைக் காணின், மிகப் பலதுன் பங்களை அனுபவித்தவன் போலத் தோன்றுகின்றது. இல்லையாயின் இத்தகைய விரக்தி எங்கிருந்துண்டாம். உன் விஷயத்தில் அரசன் என்ன உத்திரவளிக்கின் றானோ தெரிய வில்லை இப்பொழுது இரவு நெடிய நேரமாகின்றது. சயனித்துக் கொண்டு துயிலுவாய், யானும் சிறிது களைப்பாறுகின்றேன்."

(சேவகன் செல்லுதல்)

மதிவதனன்:—

(இந்திரசபா-இதற்கோ நீயுமென்னைத் தொடர்ந்தது இங்கே நாதா)

(1) ஈசனே யேழையினி-யெங்ஙனம் பொறுப் பேனையா யின்னமும் பேதமே–லேனோவர்மம் நாதனே தேவனே–தேவனே தேவனே தேவனே.

(2) ஆசையாயெனை யளித்த அன்னை தந்தையை யிழந்தேன் ஐயனே யப்பனே–அனாதையாய் நின்றனேன் தாணு நீ–தாணு நீ–தாணு நீ–தாணு நீ,

(3) ஆவியே யெனவிருந்த அரிவையைப் பிரிந்திடவும் அகலவும் தேசம்விட்டு அரசனுமேவிட ஆனதே–ஆனதே–ஆனதே யானதே.

---

தாணு=புகலிடம்.

(4) தூய சுந்தராங்கியவள்—துணைவனை மறந்து பிற
துர்த்தனைத் தீண்டினள் துரோகியாய் மாறினள்
துன்பமே—துன்பமே—துன்பமே—துன்பமே,

(5) ஆவியை விடுக்க வெண்ணி அமர்க்களம்யான்வந்தேனேலும்
அங்கு மெண்ணம் பலியாமலே அவதியாற் கலங்குகின்
(றேன்
ஐயனே ஐயனே ஐயனே ஐயனே

(6) தீனனென் துயர் களைந்து திருவடி தருவாய் நாதா
திக்கு நின்னையன்றியுண்டோ தேவர்பணிபாதனே
செம்மலே செம்மலே செம்மலே செம்மலே.

ஏ! கருணாநிதி! ஏ தீன தயாளு! ஏ ஆபத் பாந்தவா! ஏ! சர்வேஸ்வரா! ஏ சகல வியாபி! ஏ சர்வக்ஞா! என்னைப் பனே! உன்னையன்றி யெனக்கு யாது துணையுளதப்பா! ஐயோ! இனியும் வருத்தினால் இவ்வேழை எவ்வாறு சகிப்பேன். பூர்வ ஜென்மத்தில் யான் எத்தகைய கொடிய பாதகஞ் செய்தேனோ தெரியவில்லையே. உலகத்தில் சர்வ சாதாரணமானவர்களும் அன்னை தந்தை முதலியோரை யுடைத் தாம் பாக்கியத்தைப் பெறுகின்றனர். எனது தந்தையோ யான் அன்னை வயிற்றி லிருக்கும்பொழுதே இறந்து விட்டனர். யான் இக்கர்ம பூமியில் தோன்றிய வுடனே எனது அன்னையும் மறித்தனளாம். இவ்விருவரையும் யான் கண்டதே யில்லை. திக்கற்ற அனாதை யானேன். அதன் பின்னர், உயிரும் உடலுமென விருந்த சுந்தராங்கியை விடுத்துப் பிரிந்து இந்நகரைவிட்டேக நேர்ந்தது. கற்புக்கிருக்கையாயிருந்த எனதரிய சுந்தராங்கி என்னை வஞ்சித்ததனால் இறந்தனள். இவையனைத்தையும் சகிக்கலாற்றாது உயிரை விடத் துணிந்து இப்போரிற்கு வந்தேன். இங்கும் எனது எண்ணம் பலியாது சிறைச்சாலையில் அடைபட்டிருக்க

---

செம்மல் = தலைவன்.

நேர்ந்ததே! ஆகா! என் செய்வேன்?—இப்பொழுது இரவு இரண்டு மணியிருக்கலாம். சிறிது நித்திரை செய்கின்றேன்.”

(மதிவதனன் நித்திரை செய்தல்)

(மறுநாட் காலையில் அரசனாலனுப்பப்பட்ட சேவகரிருவர் வந்து மதிவதனனை எழுப்புதல்)

சேவகர்:—“அடே! கலிங்க தேசத்தானே! உன்னைத் தூக்கிற் போட உத்திரவாய் விட்டது. புறப்படத் தயார் தானே?”

மதிவதனன்:—(சந்தோஷத்துடன்) “ஆகா! அதற்குத்தடையென்ன? இறத்தற்கு அநேக நாட்களாய் விரும்பி விரும்பி என்மனது பக்குவமடைந்திருக்கின்றது.”

சேவகர்:—“ஆமாம். இதுஉலகவியற்கையே. இறந்தால் நன்றெனத்தெரிவிப்பதேயன்றிஅத்தருணத்தில் ஐயோ! இவ்வரிய உலகையும் அதன்விசேஷங்களையும் இன்பங்களையும் விட்டுப்போய் விடுகின்றோமே யென ஒவ்வொருவரும் மனம் நொந்து வருந்துவர்.”

மதிவதனன்:—“இல்லை. இல்லை. நீங்கள் யாவரும் இவ்வுலகில் உயிருடனிருப்பதை எவ்வளவு அதிகமாய் விரும்புகின்றீர்களோ அதைக்காட்டிலும் அதிகமாய் யான் இறத்தலை விரும்புகின்றேன்.”

(சேவகர் மதிவதனனுக்கு விலங்கிட்டு அழைத்துக் கொண்டு செல்லுதல்)

சேவகர்:—“தூங்குகின்றவனுக்குப் பல்லின் வலி எப்படித் தெரியும்? கழுமரத்தில் மனிதர் தூக்கப்படுதலை நீ காணாதவன்போல தோன்றுகிறது. இப்பொழுது நாம் எங்கு செல்கின்றோம் தெரியுமோ? தூக்கப்படும் இடத்

திற்குப் போகின்றோம். உனக்குக் கண்கள் கூட இல்லை யோ ?"

மதிவதனன்.—"யான் இவற்றை யனைத்தையும் நன்றுயறிந் தவனே. அங்கு சென்ற பின்னும் யான் அஞ்சி வருந்து வேனென நினைக்கவேண்டாம்?"

சேவகர்:—" ஆகா! இதென்ன பைத்தியம்! தூக்கிலிடக் கொண்டு போகையிலும் அதைப் பற்றிச் சிறிதும் விச னியாததை உன்னிடத்திலேதான் நாங்கள் கண்டோம். அதோ பார்த்தனையா? தூக்குமர மிருக்கின்றதை."

மதிவதனன்:—ஆம் பார்த்தேன், இம் மரத்தைப்போன்ற ஆப்தநண்பன் வேறு யாவனிருக்கின்றனன். எனது மனக்கவலைகளை மாற்றக்கூடிய வைத்தியன் இப்பூமியி லேயேயில்லை. இம்மரமே பெரும் உபகாரி.

(சேவகர் மதிவதனனைத் தூக்கிலிட ஆரம்பித்தல்.)

சேவகர்:—"அடே! இன்னம் ஓர்நொடியில் உனது பிராணன் போய்விடும். உனக்கு யாதாயினும் தேவையாயின் தெரிவித்துக் கொள்."

மதிவதனன்:—"நண்பர்காள்! எனக்கு வேறொன்றுந்தேவை யிலது. கடவுளைச் சிறிது ஸ்தோத்திரஞ்செய்யத் தயை புரிந்து அனுமதி யளிக்க வேண்டுகின்றேன்.

சேவகர்:—"துரிதத்தில் ஆகட்டும்.

மதிவதனன்:—

(பாரோ பிரியா முகவதோரா)

காவாயென்னைக் கருணைநிதி கசடனென்னவே விடாது. (கா)

(1) தேவர் தேவா தெள்ளமுதே திகட்டா யினிமையே தீனனென்னை யருளாயெந்தாய் திவ்விய குணனே தூயா. (கா)

(2) போதும் போதுந்துன்ப மினிபொறுத்தற் பாலதோ
புங்கவாயான் புவியை நீங்கப்புரிவாய் கருணையே நாதா. (கா)

(3) மனைவிமக்களென்போர் யாரும்மணதின்வியாதியை
மல்குவிக்குஞ்சாதனமே மாயமே யாவுநதேவே (கா)

(இராகம்—எதுகுல காம்போதி)

" கண்ணார நீர் மல்கியுள்ள நெக்குருகாத
கள்ளனே னானுமே
கைகுவித்தாடியும் பாடியும் விடாமலே
கண்பனித்தாரை காட்டி
யண்ணுபரஞ் சோதியப்பா உனக்கடிமை
யானெனவு மேலெழுந்த
வன்பாகி நாடக நடித்ததோ குறைவில்லை
யகில முஞ்சிறி தறியுமேற்
றண்ணரு நின்னதருளறியாத தல்லவே
சற்றேனு மினிதிரங்கிச்
சாசுவத முத்திநிலை யீதென் றுணர்த்தியே
சகச நிலைகந்து வேறொன்
றெண்ணமலுள்ளபடி சுகமாயிருக்கவே
யேழையேற்கருள் செய்கண்டா
யிகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்கு நிறைகின்ற பொருளே."

ஏ! பரமானந்த வெள்ளமே! உன்னிரு பாதமன்றி எனக்கு வேறு துணையொன்றுண்டோ! ஏ ஜெகதீசா! எனது புல்லறிவினால் யான் எத்தகைய பாவங்களைச் செய்திருப்பினும் கருணை புரிந்து அவற்றை உனது அருளொளியாற் கருக்கி உனது பாதாரவிந்தமீதல் உனது கடனப்பா! சேவகர்காள்! யான் தயாராயிருக்கின்றேன். இனி உங்கள் இஷ்டம் போற் செய்யலாம்"

---

மல்குவித்தல்=அதிகரித்தல்

(மதிவதனனைச் சேவகர் தூக்கும் சமயத்தில் திடீரென
ஓர் தூதன் யாரோ கூவிக் கொண்டு
ஓடோடியும் வருதல்)

தூதன்:—"தூக்காதீர்! தூக்காதீர். நிறுத்துங்கள்! நிறுத்துங்கள்."

சேவகர்:—"யாரடா நீ! ஏன் தூக்காமல் நிறுத்தச் சொல்கின்றனை? அரசனது கட்டளையின்வாறு நாங்கள் இவனைத் தூக்கிவிடவேண்டும். உனக்கென்ன பைத்தியமோ?

தூதன்:—"அரசனே இவனைத் தனக்கு முன் கொணருமாறு உத்திரவளித்திருக்கின்றனன். உடனே அழைத்துக்கொண்டு வாருங்கள்."

மதிவதனன்:—"ஐயோ! இதென்ன துன்பம்! மரணமும் கிட்டாது கஷ்டப்படவேண்டி யிருக்கின்றதே. ஆகா! யான் இன்னம் எத்தகைய வேதனைகளை அனுபவிக்க வேண்டுமோ தெரியவில்லையே."

தூதன்:—"இவனுக்கு விலங்கிடாமல் அழைத்து வாருங்கள்."

சேவகர்:—"ஆகா! அப்படியா இது நல்ல சமாசாரத்தைக் குறிப்பதாய் நினைக்கின்றோம். இன்னம் சில நிமிஷத்தில உண்மை விளங்கிவிடும். செல்வோம் வாருங்கள்."

5—வது சீன் போர்க்களத்தில் அரசனது கூடாரம்.

(அரசன், நரசிம்மவீரன், சுந்தரன், சந்திரன்,
புருஷோத்தமன் முதலியோரும் மற்றவரு மிருத்தல்)

அரசன்:—எனதுயிரை யீந்த அரிய நண்பர்காள்! எனக்கெதிரில் வாருங்கள். கேவலமான உடைகளைத்தரித்

துக்கொண்டு மிக்கப் பராக்கிரமத்தோடு போர்புரிந்து என்னை மீட்ட அவ்வெளிய போர்வீரனை ஒருவரும் கண்டு பிடித்தாரில்லையே யென என்மனம மிகவும் வருந்துகின்றது. அவனைக்கண்டுபிடித்துக்கொண்டுவருவதாய்ச்சென்ற தூதன் அவ்வாறு செய்வானாயின் அத்தூதனுக்குப் பெருத்த வெகுமதியீந்து மகிழ்விப்பேன்."

நரசிம்மவீரன்:—"அரசே! அவன் ஓர் யாசகனைப்போலக் கிழிந்த உடைகளை யணிந்திருப்பினும அவனுடைய விரதீரசசெயல்களை யான் வேறெவரிடத்திலுங்கண்டேனில்லை. அவனே உங்களை விடுவித்தனனன்றி எங்கள் மூவரால் மாத்திரம் அக்காரியம் ஒரு போதும் முடிந்திராது."

அரசன்:—"அவனைப்பற்றி அறிவோர் ஒருவருமில்லையா!"

புருஷோத்தமன்.—"அவனை உயிருடனிருபபோர்களிடத்திலும், இறநது கிடப்போர்க் கிடையிலும் எவ்விடத்திலும் கண்டோமில்லை."

அரசன்:—"அவனை அழைத்து வருவதாய்ச் சென்ற தூதன் வரட்டும். எனது உயிரையளித்த நீங்கள் மூவரும் யாவர்? எங்கிருப்பவர்? சரியான தருணத்தில் வந்து தவிய விநதை யென்னே? தயைபுரிந்து தெரிவிப்பீர்."

நரசிம்மவீரன்:—"பிரபு! நாங்கள் குந்தள தேசத்திலுள்ளோர். இப்போரின் விசேஷத்தைக்காண வேண்டி வந்தோம். உங்கள் விபத்தைக்கண்டு பொறுது போர் செய்தோம். இதைத்தவிற வேறு பல அரிய சௌரியங்களைக்கூறுதல் தற்புகழ்ச்சியாகும். எனினும் நாங்கள் மிக்க யோக்கியதா பக்ஷமுடையவ ரென்பதை மாத்திரம் தெரிவித்துக்கொள்வதிற் குற்றமில்லை"

அரசன்:—ஆகா ! நண்பர்காள் ! உங்களைப் பெருத்த பிரபுக்களாக்கினேன். இனி நீங்கள் இவ்வரண்மனையிலேயே சௌக்கியமாயிருப்பீர்."

(வைத்தியன் வாசுதேவனும் தாதியரும் துக்கத்துடன் வருதல்)

அரசன்:—"என்ன விசேஷம் ? உங்களுடைய முகங்கள் மிக்கத்துன்பத்தைப் புலப்படுத்துகின்றனவே ! நமது வெற்றியைக் குறித்து யாவரும் களிப்படைய வேண்டியதன்றோ ! நிகழ்ந்த தென்ன ? நீங்கள் கலிங்கதேசத் தாரைப்போலத் தோன்றுகின்றீரன்றி மாளவத்தாரைப்போலப் புலப்படவில்லையே ?"

வாசுதேவன்:—"சிறந்த அரசே! உங்கள் மனமகிழ்வைக்கெடுத்தற்பால விசேஷ சமாசாரத்தைக் கொணர்ந்திருக்கின்றனம். சரசாங்கி மகாராணியார் இவ்வுலகைத்துறந்தனர்."

பிரதாபசிம்மன்:—(சினத்துடன்)"ஐயோ! இவ்வளவு விரைவில் இறந்து விட்டனளா ! ஆகா ! என்ன இது பொய்யோ ? மெய்யோ ? உனது சிகிச்சையினால் பிழைப்பளென உறுதியாய் நினைத்திருந்தேனே. ஐயோ! என்ன எனதுபாவம் ? துன்பங்கள் யாவும் ஒன்றன் மேலொன்றாய் வருகின்றனவே. ஐயோ ! தெய்வமே ! என்ன செய்வேன்? அடே வாசுதேவா ! இவ்வளவு விரைவில் எவ்வாறிறந்தனள் ?"

வாசுதேவன்:— "ஐயோ! மிக்கபயங்கரமான மரணம்! படிப்படியாய் பைத்தியமும்பிதற்றலும் அதிகரித்தன. படுக்கையை விட்டெழுந்திராமலும் உணவுமுதலிய கொள்ளாமலும் மேன்மேலும் மெலிந்தனரேனும் பிதற்றலும்

பயங்கரமான தோற்றமும் வரவர அதிகரித்தன. அவ்வாறேஇறந்தனர். அம்மகாராணியார் இறப்பதற்குமுன் சில விஷயங்களைத் தெரிவித்தனர். அப்பொழுது கண்ணீருங் கண்ணுமாயிருந்த இத்தாதியருக்கும் அவை தெரியும். அவைகளை இவ்விடத்தில் தெரிவிக்க என் மனங் கூசுகின்றதே, என் செய்வேன் ?"

பிரதாபசிம்மன்:—"என்னடா தெரிவித்தனள் ?"

வாசுதேவன்:—"அவள் உங்களை எப்பொழுதும காதலித்ததே யில்லையென்றும், அரசியாகும் எண்ணத்தினல் உங்களை மணந்ததாயும, இது வரையில் மனதிற்குள் முற்றும வெறுப்புடனிருந்ததாயும் கூறினள்."

பிரதாபசிம்மன்:—"ஆகா அப்படியா! இவ்விஷயங்களை அவள் ஒருவளே யறிவள். அவள் என் விஷயத்தில் நடந்து கொண்டதிலிருந்து எவரேனும் இவ்வாறு சந்தேகிப்பாரோ ? இல்லை இல்லை. இன்னம் யாதாயினுந் தெரிவித்தனளோ ?

வாசுதேவன்:—"உங்கள் சுதையான சுந்தராங்கியின் மீது வாஞ்சை யுடையவள் போல நடித்தாளே யாயினும் அவளை முற்றும் வெறுத்துப் பகைததனளாம். அவள் திடீரென எங்கேயோ சென்று விட்டமையின் தப்பிப் பிழைத்தனளென்றும் இல்லையாயின் அவளுக்கு விஷமீந்துகொல்ல நினைத்திருந்ததாயும் புகன்றனள்."

பிரதாபசிம்மன்:—ஆகாகா ! எத்தகைய நீலி ! பெருத்த நடலக்காரி ! பெண்களின் மனதை யாரறியக்கூடும் ? இன்னம் யாதாயினு முளதோ ?"

வாசுதேவன்:—இவற்றிலும் மிகக்கொடிய தீயவிஷய மொன்றுளது. உங்களுக்குக் கொடுக்க ஓர் பாஷாணத்தைத்

தயாரித்து வைத்திருந்தனளாம். அதை உண்பவர்படிப் படியாய்மெலிந்து உதிரமற்று அதிசீக்கிரத்தில் இறத்தல் நிச்சயமாம். நீவிர் அதை யுண்டபின், உங்களிடத்தில் மிக்கக் காதலைத்தோற்றுவித்துப் பாசாங்கு புரிந்தும், அழுதும், அணைத்தும், குலாவியும், வருந்தியும், உங்களுக்குப்பல உபசாரணை புரிந்தும் இவ்வரசியலைத் தானும் தன் அண்ணனை ஜெயபாலனுமாய் அடைய உங்களது அனுமதிபெற்று விடுவதாய் நினைத்திருந்தனளாம். இவையாவும் பலியாமற் போயிற்றே யெனும் ஏக்கத்தினால புத்தி மாருட்டம் அதிகரித்ததாம். இவ்வாறு பற்பல விஷயங்களை வெளியிட்டனள்.”

பிரதாபசிம்மன்:—“தாதியர்காள்! சரசாங்கி இவ்வாறு தெரிவித்தனளா ?”

தாதிகள்:—(விசனத்துடன்) “ஆமாம், மகாராஜனே!”

பிரதாபசிம்மன்:—“ஆகா! இவளைப் போன்ற கொடிய பாதகி எவளேனு முண்டோ! ஐயோ! எனதரிய செல்வியை இவளது துர்ப்போதனையாலன்றோ வருத்தினேன். அவள் இவ்விடம்விட்டுச் சென்றதும் என்னாலன்றோ. ஐயோ! தெய்வமே! எனதுயிரனைய புதல்வியை இனி எங்கு காணப்போகின்றேன்?”

(சூரசேனன், பராக்கிரமபாகு முதலியோர் விலங்காற் பிணிக்கப்பட்டு அரசனுக்கு முன்னர் கொணரப் படுதல். இவர்களைத் தொடர்ந்து கோவிந்தன் வருதல். மற்ருேர் புறத்திருந்து மதிவதனன் தாழ்ந்த உடைகளைத் தரித்தவனாய்த் தூதன் சேவகர் முதலியோருடன் வருதல்).

அரசன்:—“அடே! பராக்கிரமபாகு! இப்பொழுது கப்பங் கேழ்க்க வரவில்லையே? ஆகா! மாளவ தேசத்தாரில்

எண்ணிக்கையற்றவர் இறந்து விட்டனரேனும் வெற்றி எமது பக்கத்த தன்றோ, மாண்டவரின் சுற்றத்தினர், கைதிகளாக்கப் பெற்ற கலிங்கத்தா ரனைவரையுங் கொன்றாலன்றித் தங்களது ஆத்திர மடங்காதெனக் கூறி அவ்வாறு கட்டளையளிக்க என்னை வேண்டினர். யானும் அவ்வாறே உத்திரவீந்து விட்டேன். இப் பொழுது உங்கள் நிலைமையைப்பற்றிச் சிந்திப்பாய் பராக்கிரமபாகு."

பராக்கிரமபாகு:—" அரசே! இப்போரில் நீங்கள் எவ்வாறு வெற்றி பெற்றீரென்பதைச் சிறிது யோசனை செய்து பாருங்கள். இதுதற்செயலை யன்றி வேறிலது. நாங்கள் ஜெயித்திருப்போமாயின், எமது கைதிகளை இவ்வாறு வெறுங்கையராய் அநாதையா யிருக்கையிற் கொல்வ தாய்க் கூறுவது வீரத்திற்கு இழுக்கெனக் கொள் வோம். எனினும், இவ்வாறு நடக்கவேண்டு மென்பது கடவுள் சித்த மாதலால நடப்பது நடக்கட்டும். எங் களை நீங்கள் வெட்டி விடுவதைப் பற்றியான் சற்றுங் கவலைப் பட்டேனில்லை. யான் இறப்பதற்கு முன்னர் ஓர் சிறிய விண்ணப்பம் செய்து கொள்ளுகின்றேன். அதைக் கருணை கூர்ந்தளிப்பீர்களாயின் அதுவே போதுமானது."

பிரதாபசிம்மன்:—" என்ன வேண்டுகின்றனை ?"

பராக்கிரமபாகு:—" எனது வேலைக்காரன் ஓர் சிறுவனிருக் கின்றனன். அவன் மாளவதேசத்தானே. அவனைப் போன்ற வேலைக்காரர் இவ்வுலகில் எவருக்கும் இது வரையிற் கிடைத்தது மில்லை இனிகிடைப்பதுமில்லை. ஆகா! என்ன அவனது நாயக விசுவாஸம்? என்ன வாஞ்சை! என்ன மரியாதை! அவனது உண்மை,

நற்குணம் அன்பு, உபசரணைத்திறன், ஊக்கம், புத்திநுட்பம, முதலிய பல விசேஷங்களை யும் என்னென விரித்துரைபபேன். அவனை மாத் திரம் உயிருடன் விட்டு விடுமாறு மிகவும் கெஞ்சிக் கேட்டுக் கொள்ளுகின்றேன். அவன் இசசண்டையிற் போர்புரியவுமில்லை. உங்கள் சேனைகளிற்கு யாதொரு துன்பமுமீந்ததில்லை. இவனை மாத்திரம் காப்பாற்றி விட்டு எங்களைக்கொல்லலாம். இதுவே எனதுவேண்டு கோள் அரசே!

அரசன்:—" ஆகா! அவன் அத்தகைய சிறபபினனு! அவன் எங்கே இருக்கின்றனன்? என்முன்னர் வரட்டும்."

கோவிந்தன்:—" இதோ வநதேன்! நான்தான் அசசேவகன், இராஜாதிராஜனே!"

பிரதாபசிம்மன்:—(திகைத்து) " ஆகா! இவனை யான் இதற்கு முன்னா எஙகு பார்தேதன்? இதற்குமுன் கண்டறிந்த முகமாய்த் தோன்றுகின்றதே! எங்கு பாாத்திருக்கலாம? எத்தகைய வசீகரமான இனிய முகம்! ஐயோ! இவனையுங் கொல்ல மனங்கொள் வரோ! இவனது முகக்குறிகளை இவனுடைய நற் குணங்களை நன்றாய்ப புலபபடுத்துகின்றனவே! அடே சிறுவா! எனதருகிலவா! உனது பெயர் யாது?"

கோவிந்தன்:—"அரசே! என்னைக் கோவிந்தனென அழைப் பார்கள்."

அரசன்:—" கோவிந்தா! உன்னை உயிருடன் விட்டு விட் டேன். ஆகா! உன்விஷயத்திற் காரணமறியக் கூடாவாறு என் மனம் மிக்க இரக்கத்தையும் அபி மானத்தையுங் கொள்கின்றது! இன்னம் உனக்கு

யாது தேவையோ அதையுங் கேட்பாய் தருகின்றேன். நீ எதைக் கேட்கினும் சரி. இக்கைதிகளில் முக்கிய மானவரின் உயிரைக் கேட்டபோதிலும் அளிக்கத் தடையில்லை.

கோவிந்தன்:—"வேந்தே! இவ்வேழைமீது இவ்வளவு கிருபை கொண்டதற்காக உங்களது அடிதொழு திறைஞ்சுகின்றேன்."

பராக்கிரமபாகு:—"எனதரிய கோவிந்தா! என்னுடைய பிராணனை கேட்குமாறு யான் உன்னை ஏவவில்லை. எனினும் நீ அதைத்தான் கேட்பாய் என்பதுறுதி."

கோவிந்தன்:—சூரசேனனை உற்று நோக்கி "ஆகா! சற்று பொறுங்கள்! வேறோர் வஸ்துவைக்காண என் மனம் பதைக்கின்றது."

பராக்கிரமபாகு:—"ஐயோ! இச் சிறுவன் இப்பொழுது என்னை வெறுத்து அலட்சியம் புரிவதின் விந்தை என்ன? ஆஹா! என் இவன் எதையோ கண்டு இவ்வாறு திப்பிரமை கொண்டு கலங்கி நிற்கின்றனன்."

பிரதாபசிம்மன்:—"கோவிந்தா! உனக்கு யாது தேவை தெரிவி? எனக்கு உன்னைப் பார்க்கப்பார்க்க உன்மீது வாஞ்சை அதிகரிக்கின்றது. அதன் காரணம் இன்னதென அறியக்கூடவில்லை.—நீ ஏன் சூரசேனனை இவ்வாறு மருண்டு மருண்டு நோக்குகின்றனை? அவன் உனக்கு பந்துவோ? அவனை உயிருடன் விட்டு விடட்டுமா?"

கோவிந்தன்:—"அரசே! அவன் எனக்கு எவ்வித உறவினனுமல்லன்."

அரசன்:—"அங்ஙனமாயின் அவனை ஏன் மேன்மேலும் உற்று நோக்குகின்றனை?"

கோவிந்தன்:—"அண்ணலே! நீங்கள் தயை புரிவீர்களாயின் ஓர் விஷயத்தை இரகசியமாய்த் தெரிவிக்க விரும்புகின்றேன்."!

அரசன்:—"அப்படியா! நாமிருவரும் சிறிது அப்பாற் செல்வோம். தனிமையில் தெரிவிப்பாய்."

(இருவரும் ஓர் புறஞ்சென்று உரையாடுதல்.)

நரசிம்மவீரன்:—"ஆகா! பாலகர்காள்! இவன் நமது குகைக்கு வந்தவனைப்போ லிருக்கின்றனனே! இறந்தவன் திரும்பப் பிழைத்தானோ? இதென்ன பெரும் விந்தையாயிருக்கின்றது!"

சந்தரன:—" ஆமாம்! இவன் பெயரும் கோவிந்தனாமே."

சந்திரன்:—" இறந்தவன் எப்படி பிழைத்தல் கூடும்."

நரசிம்மவீரன்:—" சற்று பொறுங்கள்! இன்னமும் கவனிப்போம். அவனாயிருப்பின் நம்மைக் கண்ணெடுத்தும் பாராமல் இவ்வாறிருப்பனோ! ஒருவரைப்போல வேறொருவரிருக்கலாமன்றோ. அவனாயிருப்பின் நம்முடன் நிச்சயமாய் வசனித்திருப்பன். பேசாது மேலுங் கவனியுங்கள்."

புருஷோத்தமன்:—(தனக்குள்) ஆகா! இவளை யான் அறிவேன். எனது எஜமானியன்றோ. இவள் இறவாமல் உயிருடனிருப்பதைக்காண எனக்கு அடங்காப் பேரானந்த முண்டாகின்றது. முடிவைக் கவனிக்கின்றேன்."

(அரசனுங் கோவிந்தனும் வருதல்.)

அரசன்:—(கோபமாய் சூரசேனனைப் பார்த்து)

(இராகம்—மோகனம்.)

கலிங்கனே சூரசேனக் கசடனே யெதிரில் வாராய்
நலமிகு சிறியன் கேட்ப நவிலுவாய் வாய்மையாகப்
புலையனே யவத்தமென்பாற் புகன்றிடி லறுப்பல்நாவை
விலங்கினுங் கடையசூதா விழிகளை யொழிப்பேன் பாராய்.

அடே! கலிங்க தேசத்து நாய்களிற் கடைசியான சூர சேனப்பதரே! என்முன்பாகவா!—ஏ! பாலகா! கோவிந்தா! நீ எனது அருகில் நின்றுகொண்டு உனக்குத் தேவையான தைக் கேள்—சூரசேனா! இச்சிறுவன் வினவுவதை உண்மை யாய்த் தெரிவிக்கக் கடவை. பொய் சொல்வையேல் உன்னை அணுவணுவாய்க் கழித்துச் சித்திரவதைசெய்ய உத்திர வளிப்பேன். என்ன யான் கூறுவதை உணர்ந்தனையா?

கோவிந்தன்:—"மன்னவா! இவன் தனது கைவிரலிலணிந்து கொண்டிருக்கும் இரண்டு வைரமோதிரங்களையும் எப் படிப் பெற்றனனென்பதைத் தெரிவிக்கவேணும்."

மதிவதனன்:—(தனக்குள்) "வேலைக்காரனாகிய இப்பைய னுக்கு இதைபபற்றி என்ன கவலை! அவன் மோதிரங் களை எங்கு பெற்றாலென்ன?"

பிரதாபசிம்மன்.—"அடே! சூரசேனா! இம்மோதிரங்கள் உனக்கு எப்படிக் கிடைத்தன? தெரிவி"

சூரசேனன்:—(திகிலடைந்து நடுங்கி) "மகாப்பிரபு! உண் மையைத் தெரிவிக்காவிடில் என்னை வதைப்பதாய்த் தெரிவித்தீர்கள். உண்மையைத் தெரிவித்தால் அது உங்களை வதைக்குமே என் செய்வேன்?"

பிரதாபசிம்மன்:—"எப்படி அது என்னை வருத்துமடா? பீடிகை ஒன்றுந்தேவையில்லை. தாமதமின்றித் தெரிவி யடா. கள்வா?"

சூரசேனன்:—

(அகவல்)

(இராகம்—நாதநாமக்கிரியை.)

அறிவினிற் சிறந்த அண்ணலே கேண்மின்
இறைவனே வஞ்சக மியற்றியே யிவைகளைப்
பெற்றனே னுதலி னேங்குதே யென்மனம்
உற்றவை யனைத்தையு முண்மையாய்க் கூறுவேன்.
இரண்டினி லொன்றுமே யிறைவநுஞ் செல்வியாம்
அரசியின் மோதிர மதற்கிணை யெனத்தகும்
மற்றதோ சீலனும் மதிவதனன் பொருள்.
கொற்றவா வெந்தனைக் கோபியா தொழிமின்.

அரசன்,—"அடே! என்னடா இது! எனது தனையை சுந்தராங்கியின் மோதிரம் உனக்கெவ்வாறு கிடைத்ததடா?"

சூரசேனன்:—

(இராகம்—காம்போதி.)

" விளம்புவேன் கேண்மின் வேந்தனே யோர் நாள்
வளமிகு மெந்தன் கலிங்கமா பதியில்
பலராம னென்பான் பண்புடை நண்பர்
சிலருடன் கூடியே யினிதிருக் கையிலே
மதிவத னப்பெயர் மாண்புடைத் தகைவனும்
வதியுமாறுங்குமே வந்தனன் விதியினால்
அன்னவன் நற்குண மென்னெனக் கூறுவேன்
மன்னவா யக்கணம் மடையன் யானங்நகர்
மங்கைய ரழகினில் மாசிலா மேன்மையார்
பங்கமில் குணத்தினர் பதிமொழி கடவா
ரென்னவேபகர்ந்து யான்செருக்கினைக் காட்டினேன்
அன்னவ னவைகளைச் சரியெனக் கொள்ளினும்
தன்னருந் துணைவியாந் தையலை மிக்கவும்
பன்னியே புகழ்ந்தனன் கன்னிய ரெவரும்

நுண்ணிடை யவள் தன்பொன்னடி பணியும்
பண்புடை யவரே, படிதனி லுளதாம்
நன்குகள் யாவுமே நற்றவ மியற்றிட
யின்பமே யுருவென யித்தல முதித்தன
ளென்னவே பற்பல வியம்பினன் யானதை
யுன்னியே வெகுண்டு முரணினே னவனுடன்.
அவன் றரும் மொழியெலா மவத்தமாய்க்கொண்டனேன்
அவனியி லத் தகை யரிவைய ரேயில
ரெனப்பல வாதுகள் செய்தனே னவனுடன்
வனிதையின் கற்பினை யழித்திடல் செய்குவேன்
பாரெனக் கூறினேன் பந்தையம் வைத்தனம்.
நாரிமணி யாஞ்சுந்த ராங்கியின் மனதினைக்
கவர்ந்து மயக்கிடக் கருதினே னயனிடம்
கொண்டனேன் மோதிரங் குறியதோர் நிருபமுங்
கண்டனேன் கோதையைக் கணவனிய மிழந்தனேன்.
தோற்றுத் திரும்புதல் தூஷணைக் கிடமென
எற்றனன் வஞ்சகச் செயலினைப் பெட்டியின்
வாயிலாய்ப் போந்தனேன் மங்கையி னரியதாஞ்
சயனமா ளிகைதனிற் றனிமையிற் றுயின்ற
கயல் விழித் தோகையின் கணையாழி வௌவினேன்.
மார்பினி லுள்ளதோர் மறுவினைக கண்டனேன்
சேர்ந்தனே னெனபதி செப்பினேன் கண்டதைக்
கோதையை வென்றதாய்க்கூறி னேன வன்வயின்
மாதிவ ளீந்ததாய்க் காட்டினேன் மோதிரம்
மற்றவர்காணுத மச்சம் யான்கண்டதால்
சொற்றதை முற்றுமே யுண்மையா யேற்றனன்
வாடியே நொந்தனன் வதங்கினன் சீறினன்
பேடையாம் பேதையை வேசையாய் மதித்தனன்
பதரினன் கதரினன் பைத்தியங் கொண்டனன்
சிதைத்திட நினைத்தனன் சேவகன் றனக்கு
விடுத்தனன் கடிதமும் வேண்டினன் கொன்றிட
முடிவினை யறிந்திலேன் முனிந்திடா தருள் மின்."

(இதைக்கேட்ட மதிவதனன் ஆத்திரத்துடன்
முன்னால் ஓடிவந்து)

மதிவதனன்:—

(இராகம்—மோகனம்.)

கலிங்கனே கள்வா சூதா கபடமேயுருவாய் வந்த
புலையனே மடையா பேதைப் புல்லிய வுணர் வைக்கொண்ட
கொலைஞனே நின்னைக் காணக் கூசுதே கொடியபாவி
விலையிலா மணியாம் நாரி விண்ணுல கடைந்த தூன்னால்.

(கோபத்துடன்) அடே படுபாவி சூரசேனா கொலைபாதகா! அனியாயமாய்ச் சுந்தராங்கியைக் கொல்லுவதற்கு வழிதேடினையே—ஆகா பூபதி! என்னை உங்கள் வாளாலாயினும், விஷத்தின் மூலமாயினும், தூக்கின் மூலமாயினும், உடனே கொன்று விட உத்திரவளியுங்கள். யான் மதிவதனன். யானே உங்களது அரிய புதல்வியைக் கொன்றவன். எனது சரீரம் பாழும் நரகிலுக்கே உரித்து, நீங்கள் என்னை அணுவணுவாய் வெட்டி விடுங்கள்.—ஆகா! சுந்தராங்கி! அவளைப் போன்ற பரிசுத்த உருவமான மங்கையர் இப்புவியிலேது? ஐயோ! சுந்தராங்கி, எனதாருயிரே! என்கண்மணி! அடி, மதிப்பிலா மாணிக்கமே! உனது திரேகம் எங்கே மறைந்துவிட்டதடி! ஐயோ! ஆத்திரக் காரனுக்குப் புத்திமட்டென யான் இக்காரியஞ் செய்தேனே அடிசுந்தரி, தேனே! என்மனம் பதரிப் பதைக்குதே—"

கோவிந்தன்:—"மகாராஜனே இன்னொன்று தெரிவிக்கின்றேன்.—"

மதிவதனன்:—"அடே! கேவலமான சேவகப் பயலே! யான் அரசனிடத்தில் வசனிக்கையில் இடையில் பேசுகின்றனையா! ஓர் புறத்திற் கிடப்பாய்."

(மதிவதனன் கோவிந்தனை ஓர் அடி அடித்து
அப்பால் தள்ள, அவன் அப்புறம்
கீழே விழுதல்)

புருஷோத்தமன்:—(பதை பதைத்து) "ஆகா கீழே விழுந்தது சுந்தராங்கியன்றோ!—எனதரிய தலைவா! நீங்கள் சுந்தராங்கியைக் கொல்லவில்லை. ஐயோ? கடினமாய் அடிபட்டிருக்குமோ! கரத்தாற் றாக்குங்கள்"

அரசன்:—"ஆகா! இதென்ன விந்தை? உலகமே முற்றும் தலை கீழாய் மாறுகின்றதா?"

மதிவதனன்:—"ஆ! அவள் உயிருட னிருக்கின்றனளா? ஆமாம், அவளுடைய வதனமாய்த் தோன்றுகின்றதே!!"

புருஷோத்தமன்:—"எனதரிய அன்னையாரே! எழுந்திருங்கள்! அடி பலமாய்ப் பட்டதோ? என்ன உங்கள் தலைவிதி."

அரசன்:—"ஆகா இது நிஜமோ! அல்லது கனவோ! இவை உண்மையாயின் பேரானந்தத்தினால் எனதுயிர் போய் விடும்போலிருக்கின்றதே."

புருஷோத்தமன்:—"அம்மா! உடம்பு எவ்வாறிருக்கின்றது?"

சுந்தராங்கி:—(சிறிது கோபத்துடன்) "அடே, புருஷோத்தமா! அப்பாற் போவாய். உனது முகத்தை நோக்கவே எனக்கிஷ்டமில்லை. என்னிடத்தில் அமிர்தசஞ்சீவியென விஷத்தைக் கொடுத்தனையன்றோ? உன்னை நம்பலாகாது!"

அரசன்:—"ஆகா! எனதினிய சுந்தராங்கியின் குரலன்றோ!"

புருஷோத்தமன்:—"சிறந்த அரசியாரே! அதைச சரசாங்கி மகாராணியார் அமிர்த சஞ்சீவி யொன்று எனக்கு கொடுத்தனர். யான் அதை உண்மை யென நினைத்தேன். யான் உங்களிடம் மோசம் புரிவேனாயின் என் சிரத்தின் மீது இடியே விழும்."

அரசன்:—"ஆகா! விஷயங்கள் புதிது புதிதாய்க் கிளம்புகின்றனவே!"

சுந்தராங்கி:—"அதை யான் உட்கொள்ள, அது விஷமாய் முடிந்தது."

வாசுதேவன்:—"அண்ணலே! சரசாங்கி இதையும தெரிவித்தனள். யான் மறந்துவிட்டேன். இவன் சொல்வது உண்மைதான்."

அரசன்:—"வாசுதேவா! என்னடா அது?"

வாசுதேவன்:—"மகாராணியார் விஷங்களின் தன்மையைக் கற்றுக் கொடுக்குமாறு என்னை நெடு நாளாய் வற்புறுத்திக் கொண்டிருந்தனர். எலி பூனை முதலியவற்றிற்குப் பிரயோகித்து, மாற்று மருந்தைக் கொடுத்து மீட்கவேண்டுமெனக் கொஞ்சம விஷத்தைக் கொடுக்குமாறு வேண்டினள். யான் சந்தேகித்து அவ்வாறு செய்யாது வேறோர் மருந்தைக் கொடுத்தேன். அதை யுண்டவர் சில நாழிகை வரையில் இறந்தவரைப்போலக்கிடப்பினும் கடைசியில் முன்னிலும் வலியுடன் விழித்தெழுவர். அதனால் அவருக்கு யாதொரு பொல்லாங்கும நிகழாது.—ஆகா! அம்மா. அதை நீங்கள் உண்டீர்களா?"

சுந்தராங்கி.—"ஆமாம். அதை உண்டவுடன் இறந்தவள் போல விழுந்துவிட்டேன். பிறகு ஒன்றையு மறிந்தேனில்லை."

நரசிம்மவீரன்:—" எனதரிய பாலகர்காள் ! உண்மையை அறிந்தீர்களா ? இப்பொழுது தன்றோ யாவும் ஸ்பஷ்டமாய் விளங்குகின்றன."

சுந்தரன்:—" நமமிடத்தில் வந்த கோவிந்தன் இவனே."

சந்திரன்:—" இனி இவனேது ? இவளே ! "

(சுந்தராங்கி மதிவதனனை உற்றுநோக்கி ஓடிப்போய் அவனது கரத்தைப் பிடித்துக் கொள்ளுதல்.)

சுந்தராங்கி:—

(இராகம்—செஞ்சுருட்டி.)

விதிவிதி யிவைகள் யாவும் விதியினை வெல்வாருண்டோ
மதிவதனு நீ யின்றி மதியிலாயிரவே யானேன்
பதியென வுறுதியாகப் பற்றிய வென்னைக் கொல்லப்
பதரினுய் நீயே யின்றுன் பாணியாற் றொலைப்பா யென்னை.

ஏ ! மதிவதனு ! உன்னை எனது உயிரென மதித்திருந்த வென்னைக் கொல்ல நினைத்தது பதைபதைத்தையன்றோ. இப்பொழுது உன் கரத்தினுலேயே நீ என்னை வெட்டிவிடு. யான் மனத்திருப்தியோடு இறக்கின்றேன். உனது சந்தேகமும் நிவர்த்தியாய் விடும்.

மதிவதனன்:—

(இந்திரசபா—கேளடா சாமி எனது மொழி)

கோபமோ கனியே—எனது யிசை—கோபமோ கனியே

(1) பாபியான் செய்த—தீமைகள் பல
பாதகனுனேன்—யானே
பரிவுடனவை பொறுப்ப துன்கடன். (கோ)

---

பதி=புருஷன் பாணி=கை.

(2) சூரசேன னென் பகைவனு மிவன்
சூது செய்தனனன்றோ
ஆதலாற் பிழை பேதையே யின்னம். (கோ)

(3) ஆவியே யினி யகன்ற தேனும் யான்
அரிவையே யுனைக் கொல்ல
ஐயயோ மனங்கொள்ளுமோ கண்ணே. (கோ)

ஏ கண்மணி! சுந்தரி! ஆகா! என்ன வார்த்தை மொழிந்தனை? இப்பாதகனுன சூரசேனன் புரிந்த வஞ்சகத்தினுல் யான் உன் விஷயத்தில் தீங்கு நினைத்தேன். எனதாவியே! நீ அவைகளை இனி மறந்து என்னை மன்னிக்கவேண்டியது உனது கடன். இனி உன்னை ஓர் க்ஷணமும் பிரிவேனே?

(திருப்புகழ்)

சுந்தராங்கி:—

பன்னாளும் யாமொருங்கே யாவியுடல் போலவிருந்
தென்னேறமேனும் பிரியா தென் குணம்நீயறிந்து
இன்றைவையே புரிய வேவியதென் மாயமிது—இனியோனே.

மதிவதனன்:—

என்னுவியே யெனது தேடரிய மாமணியே
துன்னுத பாதகனுஞ் சூரசேனப் பேதையவன்
உன்னுதவாறு பல வோதியெனைக் கோபங்கொள்ளப்—புரிந்
[தானே.

சுந்தராங்கி:—

நன்றாகவே மொழிந்தாய் நாரியரின் மீது நீவிர்
ஒன்றாத பாதகமுமோது வதுங் கோபம் வரின்
கன்றாத போதவரைக் காதலுடன் பேணுவதும்—அழகாமோ.

மதிவதனன்:—

கண்ணேயென் காதல்மிகு காரிகையென் பேதமையை
யெண்ணுமலே யென்பிழை நீ பொறுத்த லேபுரிவாய்
விண்ணேகு காலம்வரை வேறுபடுமோ வென்மனம்—மின்
[னளே.

அரசன்:—" ஏ! எனதரிய செல்வி! எனது பாக்கியமே! ஏ திகட்டாத சுவைக்கட்டியே! எனதருகில் வா என்ன என்னுடன் ஓர் அன்பான மொழி வசனிக்கலா காதா? உன் விஷயத்தில் யான் ஏதேதோ பல தீங்கு கள் புரிந்திருப்பினும் ஈன்ற தந்தையின் மீது நீ வர்மம் பாராட்டலாமா? எனது விலையிலா நிதியே! ஏ மாற் றிலாத தங்கமே! இங்கே வா!"

சுந்தராங்கி:—

(வணக்கத்துடன்)

" எனதரிய பிதா! உங்கள் மீது எனக்கு வருத்த மேன்? நீங்களே எனது பிழைகளை மன்னித்து ஆசிர்வதிக்க வேண்டும்."

நரசிம்மவீரன்:—" சுந்தரா! சந்திரா! கோவிந்தனைச் சகோ தரனென வாஞ்சை பாராட்டியது உங்கள் குற்றமன்று. அதற்குக் காரணமிருக்கின்றது."

அரசன்:—

(சுந்தராங்கியை மார்போடு அணைத்துக்கொண்டு)

" ஆகா! இப்பொழுதே யான் கிருதார்த்தனானேன். எனது ஆனந்தமே பேரானந்தம்! குழந்தாய்! உனது சிற் றன்னையும் இறந்துவிட்டனள்."

சுந்தராங்கி:—" ஆ இறந்துவிட்டனளா? ஐயோ! பாவம்! இவ் வளவு இளமையில் இறந்து விட்டனளே! இது மிக்க விசனத்தைத் தருகின்றது பிதா!"

அரசன்:—" அவளது சகோதரனும் எங்கேயோ சென்று விட்டனன். அவனைக்கண்டோருமில்லை."

புருஷோத்தமன் —" அவ்விஷயத்தில் யான் உண்மையைத் தெரிவிக்கின்றேன். சுந்தராங்கி அரசியார் காணமற்

போனபின் அவர் தனது வாளை உறுவிக்கொண்டு என்னிடம் வந்து, சுந்தராங்கி சென்ற விடத்தை உடனே தெரிவிக்காவிடில் அப்பொழுதே என்னைக் கொன்று விடுவதாய்ப் பயமுறுத்தினர். அச்சமயத்தில் எனது எஜமானன் சுந்தராங்கி யரசியாருக்கு எழுதிய கடிதமொன்று தற்செயலாய் என்னிடமிருந்தது. அதை அவரிடங் கொடுத்தேன். எனது எஜமானனது உடைகளிற சில என்னிட மிருந்தன. அதையும் பெற்றுக்கொண்டு, அரசியின் கற்பையழித்து விடுவதாய்க் கூறிவிட்டு விரைவில் துறைமுகப பட்டினத்திற்குச் சென்றனர். அதற்குப் பின்னர் நிகழ்ந்த வற்றை யானறியேன்.''

சுந்தரன்:—'' மீதி விபரத்தையான் தெரிவித்து முடிக்கின்றேன். இறைவ! அவனையான் அவ்விடத்திலேயே முடித்து விட்டேன்.''

அரசன்—(கடுங்கோபத்துடன்) ''ஆகா! அப்படியா! இதோ பார், உன்னை ஓர் நொடியிற் கொல்விக்கின்றேன். என்ன செய்தனை? ஒருக்கால பொய் சொல்லுகின்றனையோ?''

சுந்தரன்:—'' இல்லையில்லை. உண்மையிலேயே யான் கொன்றேன் ''

அரசன்.—(கோபத்துடன்) '' அவன் மகாராணியின் தமையனென்பதை அறிந்தாயில்லை போலும்''

சுந்தரன்:—'' அவன் முற்றும் கௌரதையற்றவன். அவனது சொல்லும் செயலும் அரசகுலத்தி லுதித்தவனுக்குத் தகாதவையாயிருந்தன. ஆகா! அவன் எங்களை முகாந்திரமின்றி எவ்வாறு தூஷித்துக் கோப மூட்டினன்! நாங்கள் அவன் விஷயத்தில் ஓர் விதத் தவறும்

டரியாதைக் குறைவும் செய்யாதிருக்க, அவன் எங்களை வாயில் வந்தவாறு வைதனன். ஆதலின் யான் அவனது சிரத்தை வெட்டினேன்"

அரசன்:—(கோபத்துடன்) " அடே ! உனது வாக்கு மூலத்தினுலேயே நீ குற்றவாளியாயினுய். அதனுல நீ சட்டப்படி மரணதண்டனை காளாஞய். அடே சேவகா இக்குற்றவாளியை விலங்காற் பிணித்து அப்பாற் கொண்டுபோ."

நரசிம்மவீரன்:—" அடே சேவகா இவனுக்கருகில் வாராதே. இவனை சாதாரண மனிதனென நினைத்தாய் போலும்! ஜெயபாலனைப்போல ஆயிரம் ஜெயபாலர் ஒன்று கூடினும் இவனது பிறப்பிற்கும் மேன்மைக்கும் ஈடாவரோ ! மன்னவா ! சிறிது பொறுமின்."

அரசன்:—" அடே ! விருத்தா ! நீயும் உனது மக்களும் எனக்குச் செய்த உதவிக்கு யான் வெகுமதியளிக்குமுன், யான் உன்மீது வெறுத்துக் கோபிக்குமாறு ஏன் பிதற்றுகின்றனை ? இவன் ஜெயபாலனிலும் எப்படி உயர்ந்தவனடா ?

சந்திரன்:—" நிருப ! அவ்வாறு எங்கள் தந்தை கூறியது தவறுதான், மன்னித் தருளுமின்."

அரசன்:—(கோபத்துடன்) " அப்பிழைக்காக நீயும் இறக்க வேண்டியதே முடிபு."

நரசிம்மவீரன்:—" அரசே ! அநேக வருஷங்களுக்கு முன்னர் உங்களிடத்தில நரசிம்ம வீரனென ஓர் சேனைத் தலைவனிருந்தனனே அது நினைவிற்கு வருகின்றதோ?"

அரசன்:—"ஆமாம் அவனோர் பெருத்த வஞ்சகன்! அதனால் தேசப்பிரஷ்டனாக்கப் பட்டான். அவனைப் பற்றி யாது தெரிவிக்கப் போகின்றனை?"

நரசிம்மவீரன்:—"அவனே இம்முதியோன், அவன் எவ்வாறு வஞ்சகனாயினனோ தெரியவில்லை."

அரசன்:—(கோபத்துடன்) "ஆகா அப்படியா! காவலர்கள்! இம்மூவரையும் விலங்கிட்டு அப்பாற் கொண்டு போங்கள். இவர்களை ஒருபோதும் மன்னித்து விடேன்"

நரசிம்மவீரன்;—"அண்ணலே! ஏழைமீது தயை புரிந்து கோபியாது சற்றுப் பொறுங்கள். முதலில் உங்கள் இரண்டு புத்திரர்களேயும் வளர்த்ததற்குரிய வெகுமதியை யீந்து விட்டு அதன் பின்னர் என்னைக்கொல்லுங்கள்."

அரசன் :—(ஆச்சரியத்துடன்) " ஆகா! எனது புத்திரரை நீ வளர்க்கவாவது! என்னடா பிதற்றுகின்றனை?"

நரசிம்மவீரன்—(அரசனதுகாலில்வீழ்ந்து)"சிறந்த மகிபனே! என்னைத்தந்தை யென்றழைக்கும் இச்சிறுவரிருவரும் எனது புதல்வரல்லர். உங்களது உதரத்திலுதித்த இளவரசர்கள்."

அரசன் :—(திகைத்து) " இவர்கள் எப்படி எனது புத்திரராவர்?"

நரசிம்மவீரன் :—"புரந்தரா! யான் முற்றும் உண்மையாய் நடந்து உங்கள் விஷயத்திற் பலபோர்களில் வெற்றி பெற்றிருந்தும் எனது விரோதிகளின் மொழியை உண்மையென நம்பி என்னை தேசப்பிரஷ்டனாக்கினீர்

கள். யான் உங்களுக்கு யாதோர் பிழையுஞ்செய்தறியேனுதலின் அப்பொழுதிருந்த என்மனதின் நிலைமையையும் துக்கத்தையும் என்னெனத் தெரிவிப்பேன்! இதற்காகப் பழிக்குப்பழிவாங்க நினைத்து இக்குழந்தைகளை வளர்த்த தாதியை இதன் பொருட்டே மணந்து அவள் மூலமாய் இவர்களை எடுத்துக்கொண்டு ஆரண்யத்திற்குச்சென்று அதன் பிறகு அவளையும் அங்கு வரவழைத்துக்கொண்டேன். யான் பின்னர்ச்செய்த குற்றத்திற்கு முந்தியே தண்டிக்கப்பட்டதாக நினைத்துக்கொண்டேன். இவ்விருபது வருஷங்களாய், இவர்களை வித்தைகளனைத்திலும் பயிற்றி யாதொரு குறைவுமின்றி வளர்த்தேன். இதோ உங்களிடம் திரும்பவுங்கொணர்ந்து விட்டு விட்டேன்.—(அழுது கொண்டு) எனினும் இளமையே யுருவாய்வந்த இவ்விரு அரிய நண்பரையும் விடுத்துப்பிரிய மாத்திரம் என்மனம் சம்மதியாது பதை பதைக்கின்றது. ஆகா! இவர்கள் எத்தகைய மேன்மைக் குணத்தைக் கொண்டிருக்கின்றனர். கடவுளது சிருஷ்டியின் விநோதத்தை என்னெனச்சொல்வேன்! இருவரும் சந்திர சூரியரெனப் பிரகாசிக்கின்றனர்."

அரசன் :—"ஆகா! நரசிம்மா! ஏன் அழுகின்றனை? இவர்கள் எனது குழந்தைகளாயிருப்பார்களாயின் எனது பாக்கியமே பாக்கியம்."

நரசிம்மவீரன் :—"சுந்தர னென்னும் பெயரைக் கொண்ட இவனே முதற்புதல்வன். மற்றவனாகிய இளையோன் சந்திரனெனும் பெயரையுடையான். இவர்களை யான் களவாடிச் சென்றபோது, இவர்களின் அன்னையால் தயாரிக்கப் பெற்ற ஓர்விநோத அங்கி இவர்கள் மீது

போர்த்தப்பெற்றிருந்தது. அதை மிகவும் பத்திரமாய்க்காப்பாற்றி வைத்திருக்கின்றேன். இதை உண்மையென உறுதிப்படுத்துவதற்கு இவ்வங்கியைப் பார்க்கவேண்டு மென்று கட்டளையிடுவீர்களாயின் காண்பிக்கின்றேன்.''

அரசன் :—''அடே! நரசிம்மா! எனது மூத்த புதல்வனாகிய சுந்தரனுடைய கழுத்தில் ஓர் மச்சமிருந்ததாய் ஞாபகமிருக்கின்றது. அதைப் பார்ப்போம்—சுந்தரா! அருகில்வா.''

நரசிம்மவீரன் :—''ஆகா! அந்த அடையாளம் இதோ இருக்கின்றது, பார்த்தீர்களா? அற்பப்பொருளாகிய இவ்வியற்கை மச்சம் எனது மொழிக்கு சாக்ஷியாயமைந்தது.''

அரசன் :—''(பெருமகுதூகலத்துடன்) ''ஆகா! என்ன எனது பேரானந்தம்? ஓர் மாது ஓர் சமயத்தில் ஓர் குழந்தைக்குத் தாயாவள். யான் ஒரே காலத்தில விலையிலா மாணிக்கங்களாகிய மூன்று குழந்தைகளைப் பெற்றேன். ஏ! எனது உயிரை யொத்த செல்வர்காள்! சமீபத்தில் வந்து என்னைத்தழுவுங்கள்.—(அவர்களையணைத்தவாறு சிரித்துக்கொண்டு) கண்மணி! சுந்தராங்கி இதனால் உனக்குத்தான் நஷ்டம. இவ்விராஜ்ஜியபாரம் நினக்கில்லையாயிற்று.''

சுந்தராங்கி:—(சந்தோஷத்துடன்) '' இல்லை இல்லை. பிதா! இதனால் எனக்கு இரண்டு புதிய உலகங்கள் கிடைத்தன.—ஆகா! எனதரிய சகோதரர்காள்! தெய்வமே நம்மை இதற்குமுன்னர் சந்திப்பித்தது. அப்பொழுது யான் ஒருவளே உண்மையைத் தெரிவித்தேன். நீங்கள் பொய் புகன்றீகள்.''

சுந்தரன்:—(நினைத்து) "எவ்விஷயத்தில் பொய்யுரைத்தோம். இனிய சகோதரி!"

சுந்தராங்கி :—(சிரித்துக்கொண்டு) "நீங்கள் உண்மையில் எனது சகோதரர்களாதலின், யான் உங்களை அப்பொழுது சகோதரர்களென்றழைத்தது சரியானது. உங்களுக்கு யான் சகோதரியாயிருக்க, என்னை நீங்கள் சகோதரனென்றழைத்தது தவறல்லவோ?"

அரசன்:—"ஆகா! நீங்கள் கூட இதற்கு முன்னர் சந்தித்திர்களோ?"

சந்திரன் :—"ஆம்! சந்தித்தோம் பிதா!"

சுந்தரன் :—"முதலிற் சந்தித்த பொழுதே ஒருவர் பாலொருவர் பெருவாஞ்சையைக் கொண்டனம். கடைசியாய்ப் பிரியுமவரை அவ்வாறே இருந்தனம்."

அரசன்—"இரத்தக்கலப்பின் கவாசசி இல்லாமற்போமோ! நம்மையறியாமலே பிரியமுண்டாயின்றே! ஆகா! என்ன எனது பாக்கியம! என்ன எனது பிரம்மானந்தம்! அதற்கு எல்லையே இல்லை. உங்கள் ஒவ்வொருவரது வரலாறுகளையும் சாவகாசமாய் விரிவாய்க்கேழ்க்க வேண்டும இப்பொழுது பிணிக்கப்பட்டு நமது முன்னர் கொணரப்பெற்றிருப்பவரைத் தவிர மற்றையோர் யாவருக்கும் பேரானந்தமே. அவர்களும் நம்மால் சந்தோஷபபடட்டும. அவர்களை விட்டுவிடுங்கள்."

சுந்தராங்கி :—(புன்சிரிப்புடன் பராக்கிரமபாகுவை நோக்கி) "எனதரிய எஜமானரே! யான் இன்னம உங்களிடத்தில் ஊழியம் செய்யட்டுமா?"

பராக்கிரமபாகு :—(சந்தோஷத்துடன்) "உனக்கு மங்களமுண்டாகட்டும். நீ நீடூழி உனது காதலனுடன் இனிது வாழ்வாயாக."

அரசன் :—"ஐயோ! கடைசியில் என்னைக் காப்பாற்றிய அந்த எளிய போர்வீரனைக்கண்டோரில்லையே! அவனிருந்திருப்பின் அவன் எதைக் கேட்கின்றானோ அதை அக்கணமே தரத் தயாராயிருக்கின்றேன்."

மதிவதனன் :—"மேன்மை தங்கிய அண்ணலே! அவ்வாறு யானே வந்தேன். யான் சமயோசிதமாய் வேஷம் பூண்டு வந்து போர்செய்தேன்.—அடே சூரசேனா உண்மையைத்தெரிவி—யான் உன்னை வென்று கீழே வீழ்த்திக்கொல்லும் சமயத்திலிருக்கவில்லையா"?

சூரசேனன் :—(மதிவதனன் காலில் விழுந்து) "இதோ இன்னொருமுறை உமது கால்களில் விழுகின்றேன். முன்பு உமது பலத்தினால் விழுந்தேன். இப்பொழுது என்னுடைய மனோபாதையைப் பொறுக்கலாற்றாது விழுகின்றேன். என்னைக் கொன்றுவிடும். இதோ இரண்டு மோதிரங்களையும் பெற்றுக்கொள்வீர்."

மதிவதனன் :—(மோதிரங்களைவாங்கியவாறு) "அடே சூரசேனா? எனது காலில் ஏன் விழுகின்றனை? உன் மீது யான் சீற்றமுங்கொள்ளேன். விரோதம் பாராட்டி உனக்கு யாதொரு பொல்லாங்குமியற்றேன். இனியாயினும் பிறரெவரையும் இவ்வாறு வஞ்சியாது யோக்கியனாயிரு. திரும்ப இவ்வாறு பிறர்க்குத்தீமைபுரிய நினைப்பையேல்.

'மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு'

என்றவாறு அது உனக்கே துன்பமாய் முடியும்."

அரசன்:—(சந்தோஷத்துடன்) "ஆகா, எனது மருகனது மேன்மைக்குணமே குணம் :—ஏ மந்திரி! தேவாலயங்களிலெல்லாம் விசேஷமாய்ப் பூஜை அலங்காரம் ஊர்

வலம், நைவேத்தியம் முதலியவற்றை நடத்துவாய். நகரைமுழுதும் இந்திரலோகமென்ன அலங்கரிக்கக் கடவாய். இன்றைக்கேனதரிய சுந்தராங்கியை மதிவதனனுக்கு மணம்புரிவிக்க வேண்டும்:—யாவரும் அரண்மனைக்கு விமரிசையாய்ச் செல்வோம் வாருங்கள்.''

மதிவதனன் சுந்தராங்கி இருவரும் கைகோர்த்துக்கொண்டு

(இந்திரசபா—சாமராஜ இந்திரா)

தேவர் தேவாயிசா வுன்னைப்போற்றினோம்.

(1) நாவினாலுந்தன் புகழ்—நவிலலுமாமோ நாதா
பாவியரெம்மை வந்தாளுவாய் (தேவர்)

(2) வேதங்கள் கண்டிடா விமலனே யுந்தன்பாதம்
வேண்டினோம் பிற வேண்டோம் யாம் (தேவர்)

(ஆதிமூலப்பொருள் தனக்கடியேனது வந்தனம்
என்ற கோட்டின்வர்ணமெட்டு)

(1) ஆதியந்தமாகி நின்ற சோதி யண்ணல் வாழவே
நீதியாவும் வேதம்நாலும் நீடுநின்று வாழவே

(2) பூமியாவும் நேமியொன்றிலாளுகின்ற பூபனுந்
தீமையின்றி நேமம் நின்று சேமமிஞ்சி வாழவே (ஆதி)

(யாவரும் அரண்மனைக்குச் செல்லுதல். பிறகு சுந்தராங்கியை மதிவதனனுக்கு வெகு சம்பிரமத்துடன் திருமணம் புரிவித்தல்.)

(ஓம் சுபமஸ்து).

PRINTED BY P. R. RAMA IYAR AND CO., MADRAS